உ

# மெய்கண்ட தேவர்

வடமொழியினின்றும்

மொழிபெயர்த்தருளிய

# சிவஞானபோத மூலமும்

வேதாந்த தருக்க போதாசிரியர்

**கோ. வடிவேலு செட்டியாரவர்கள்**

இயற்றிய

# தெளிபொருள் விளக்கவுரையும்.

கிடைக்குமிடம் :

சென்னை, கோமளேசுவரன் பேட்டை,

அம்பாவிலாச புத்தகசாலை.

விலை ரூபாய் ஒன்று.

## புத்தக விளம்பரம்.

---

ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் உரை ரூபமாகவும் வசனரூபமாகவும் இயற்றிய நூல்கள்.

| நூல் | ரூ. |
|---|---|
| திருக்குறள்-பரிமேலழகருரை-தெளிபொருள் விளக்கம்-கருத்துரை-குறிப்புரை-ஆங்கில மொழிபெயர்ப்புடன் - 2 வால்யம் | 8 |
| கைவல்ய நவநீத வசனம் (வினு விடை) செய்யுளுடனும்-விரிவான விசேஷக் குறிப்புக்களுடனும் | 2 |
| பகவத்கீதை-வசனம்-விசேஷக் குறிப்புக்களுடன்... | 1 1 |
| வேதாந்த சூடாமணி - வசனம் - செய்யுளுடன் பதவுரையும் - விரிவான விசேஷ உரையும் | 1 |
| சிவஞானபோதம் - பதவுரை - விசேஷ உரையுடன் | 0 1 |
| உபநிடதம்-பதவுரை-விசேஷ உரையுடன் ... | 0 |
| மெய்ஞ்ஞான போதம்-வசனம் (முதற் பாகம்) ... | 0 |
| மெய்ஞ்ஞான போதம்-வசனம் (இரண்டாம் பாகம்) | 1 |
| வியாச போதினி - வசனம் (முதற் பாகம்) ... | 0 |
| வியாசபோதினி-வசனம் (2-ம் பாகம்) ... | 0 6 |
| மகாராஜாதுறவு-வசனம் ... | 0 |
| புநிதவதி-காரைக்கால் அம்மையார் சரித்திரம் ... | 0 |
| நாநாஜீவவாதக் கட்டளை - விரிவான விசேஷக் குறிப்புரையுடன் | 0 |
| தருக்க பரிபாஷை-விரிவானவிசேஷக்குறிப்புரையுடன் | 1 |
| குசேலோபாக்கியானம் (வசனம்) அச்சில் | |
| தருக்கசங்கிரகம்-விரிவான விசேஷவிளக்கக் குறிப்புக்களுட[ன்] (அச்சில்) | |

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவர்

வடமொழியி லிருந்து மொழிபெயர்த்தருளிய

# சிவஞானபோத மூலமும்

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு பாதசேகரரும்

தருக்க வேதாந்த போதகாசிரியருமாகிய

கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய

## தெளிபொருள் விளக்கவுரையும்.

இவை

ஸ்ரீமத் G. Y. அப்புக்கண்ணு செட்டியாரவர்கள்

பொருளுதவியால்



சென்னை, கோமளேசுவரன்பேட்டை,

அம்பாவிலாச புத்தகசாலைச் சொந்தக்காரர்

ஷை செட்டியாரவர்களாலும்

ம-ஷண்முக முதலியாரவர்களாலும்

பிரசுரஞ் செய்யப்பட்டன.

பதிப்புரிமைபெற்றது 1929 ரூபாய் ஒன்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

சித்துரு வறிந்து சிவமா விளங்கிய
சத்துவ விரத்தின சற்குரு பொன்னடி
பத்தி யோடு பரவுது மியாமே.

" ஆருரு மிங்கேயம் பலமு மிங்கே
யாடரவக் கிங்கிணிக் காலு மிங்கே
பேருரு மிடபவா கனமு மிங்கே
பிறப்பிறப் பற்றிடந் தானு மிங்கே
சீராருஞ் சிவஞான போதந் தன்னைத்
தெளிந்து தெளிந்துநின் ருடாய் பாம்பே."

என்று இற்றைக்குச் சற்றேறக்குறைய 600 வருஷங்களுக்கு முன்னர்த் தத்துவ வித்தாய்ச் சதாநந்த சொரூபராய் அத்துவித ஸ்தாபனசாரியரா யெழுந்தருளி யிருந்த ஸ்ரீதத்துவராய ஸ்வாமிகள் தாம் திருவாய்மலர்ந்தருளியுள்ள பாடுதுறையில்

கம்மனோ ருய்தற்பொருட்டுச் சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளிய காமிக முதல் வாதுள மீறாயுள்ள 28 சிவாகமங்க ளுள் ஒன்றாய ரௌரவ ஆகமத்துள் 12-வது அத்தியாயம்-73-வது பாச விமோசனபடலத்து அனுஷ்டுப்புச் சந்தசாய்த் துவாதச (12) சூத்திர வடிவமாக வமைந்துள்ள **சிவஞான போதத்தைச்** சிறப்பித்துக் கூறியிருப்பதால், அது பேத (துவித) பரமான நூலன்றாமென்பது பெறப்படுவதாம்.

அது பேத பரமான நூலாயின், அதனிடத்து "அவையே தானேயாய்", "உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்", "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்", "ஊராத்துனைத் தேர்த் தெனப் பாச மொருவ", "அவனே தானே யாகிய வந்நெறி, யேக னாகி யிறைபணி நிற்க" என்னும் பிரயோகங்களிருத் தல் கூடாதாம்; அதனால், அஃது அபேத (அத்துவித) பர மான நூலாமென்பதற்கு யாதோ ரையப்பாடு மின்றாம்.

"சத்தியம் அத்வைதம்", "பரமார்த்தமாக அத்வைத மாம்", "நாநாவைக் கண்டு மிருத்தியுவை யடைகின்றான்," "எவன் தனக்கன்னியமாக ஒன்றை யறிகின்றானோ அவன் பிரஹ்மத்தை யறிந்தவனல்லன்", "அஃது ஒன்று; நாநாவென் பதில்லை", "இங்குப் பேதஞ் சிறிதுமில்லை," "உள்ளதொன் றே", "உருத்திரனொருவனே யுளன்", "ஒருமையை யறிபவ னுக்குச் சோகமேது? மோகமேது"?, "நான்காவதான சிவமா கிய அத்வைதமுளது", "இது மேலும் கீழும் எங்கும் நிறைந்

துள்ளது", "இவையாவும் சொப்பனம்போலப் பொய்யாம்." என்றற் றொடக்கத்துச் சுருதிவாக்கியப் பிரயோகங்களுக்கு "அவையே தானேயாய்" என்றற் றொடக்கத்துச் சிவஞான போத வாக்கியப் பிரயோகங்கள் எவ்வாற்றானும் மாறாகாதிருத்தலின், அதனை (சிவஞானபோதத்தை)ப் பேதபரமான நூலெனை எவ்வாற்றால் சொல்லுதல் கூடும்? ஒருவகையானும் சொல்லுதல் கூடாதாம்.

வேதத்தின் துணிபொருளும் சிவாகமத்தின் துணிபொருளும் தம்முள் எவ்வாற்றானும் மாறுபடாதனவா மென்பது திருமூலர்

"வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுன்னுக
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"

என்று திருவாய் மலர்ந்தருளி யிருப்பதால் இனிது விளங்குவதாம்.

சிவாகமத்தின் துணிபொருள் பேதபரமா மென்பாரைச் சிவஞான வள்ளலார்

"ஒன்றா யுலகனைத்து மாகியொன் றப்பமுனி
பொன்றா மொழியாற் புகன்றிருக்க—குன்றாத

முத்தியிலு மும்முதலு முண்டென் றுரைத்தவெலவன்
பித்தமுறுஞ் சைவர்நீ பேசு."

"ஓசை யொலியெல்லா மானுய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா—ஆசையெலாம்
அற்றவிட முத்தி நிலையோ வவைவெல்லாம்
உற்றவிட முத்திநிலை யோ."

என்று கருணையோடு மறுத்திருப்பதும்இங்குணர்தற்பாலதாம்.

"பிரத்தியட்சப் பிரமாணத்தாலும் அனுமானப் பிரமாணத்தாலும் எவரும் எளிதாக அறிதற்கு முடியாத விஷயத்தைத் தெளிவாய்க் காட்டும் சொன்மயக் கருவியாயுள்ளது வேதமாம்" என்று வேதப் பிரமாணத்திற்குப் பெரியார் இலக்கணங் கூறியிருத்தலின், வேதப் பிரமாணத்திற்கு மாறுகா துள்ள ஆகமப் பிரமாணமும் வேதப்பிரமாணத்திற்குக் கூறிய இலக்கணமுடையதாமென்பது சொல்லாமலே பெறப்படுவதாம். பேதம், பிரத்தியட்சப் பிரமாணத்தாலும் அனுமானப் பிரமாணத்தாலும் எவரும் எளிதாக அறிதற்குரியதாக விருத்தலின்,அதனை ஆகமம் தனது துணிபொருளாகக் கூறுமாயின், அது துணிந்ததனைத் துணிவிப்பதாகிய சித்த சாதனமென்னுந் தோஷமுடையதாம்.சிவபெருமான்நம்மனோ ருய்தற்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளியுள்ள சிவாகமத்தைச் சித்த சாதன தோஷமுடையதாகக் கூறலாமோ? இதனாலும், சிவாகமத்தின் துணிபொருள் வேதத்தின் துணிபொருள்போல அபேதமா

மேயா மென்பது குன்றின்மீதிட்ட தீபம்போல மிகத் தெளிவாக விளங்குவதாம்.

அதிகாரி புருஷன் "நானப் பிரமமோ வலனோ" என்னும் † ஐயத்தினின்றும் நீங்கிப் பரமாநந்த வடிவமாக விளங்குவதற்குச் சிறந்த சாதனங்களாயுள்ள நூல்களுள், "சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைப்பு, உலகமலையாமை, விழுமியதுபயத்தல், விளங்குதாரணத்ததாகுதல்" என்னும் வகையால் மிகச் சிறந்ததாயுள்ள **சிவஞான போதத்தை**, தமிழுலக முய்தற்பொருட்டு, இற்றைக்குச் சற்றேறக்குறைய 650 வருஷத்திற்கு முன், வடக்கே திருவேங்கடமலையையும், தெற்கே குமரியையும், கிழக்கே கடலையும், மேற்கே கடலையும் எல்லையாகவுடைய தமிழ்நாட்டின்கணுள்ள தொண்டைநாடு, சோழநாடு, பாண்டிநாடு, மலைநாடு, நடுநாடு என்றற்றொடக்கத்து நாடுகளுள் ஒன்றாகிய நடுநாட்டிலே விளங்கும் திருவெண்ணெய் நல்லூரின்கண் நம்மனோர் செய்த தவத்தின் பயனாக வேளாளகுலதிலகராக அவதரித்தவரும், நிரம்பிய கல்விகேள்வியறி வொழுக்கங்களோடு சுவானுபூதிச் செல்வராக விளங்கியிருந்தவருமாய **மெய்கண்டதேவர்** தமக்கியல்பாயுள்ளபெருங்

---

† "ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து" என்பது திருக்குறள்.

கருணைகாரணமாக நம்மனோருய்தற்பொருட்டு ஆரியத்தினின் றும் தமிழில் 12 சூத்திர வடிவாக மொழிபெயர்த்து, அச்சூத்தி ரத்தின்பொருளை மிகச் சுருக்கமாக நம்மனோரறிதற்பொருட்டு வசனவடிவமாகவும் செய்யுள் வடிவமாகவும் வரைந்தருளினார்.

"சைவ நெறியே யுய்யு நெறியது" என்றறிஞர் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலை யுட்கொண்டுள்ள தமிழறிஞர் பலரா லும் அச்சிவஞானபோதம் அப்பெரியார் மொழிபெயர்த்த கால முதற்கொண்டு பொன்னேபோற் போற்றப்பட்டு வரு வது மிகு பிரசித்தமாம். மெய்கண்டார் சிவஞான போதத் திற்கு வரைந்த சுருக்க வுரையில் சிலபாகம் பேத பரமாக விருத்தலை நோக்கிய சிலர் தத்துவ வித்தாகிய மெய்கண்டார் இவ்வாறு கூறியதற்குக் காரண மிருத்தல் வேண்டுமென்றும் ஆராய்ச்சி செய்வாராயினர்; அங்ஙனம் ஆராய்ச்சி செய்தவ ருள் சிவஞான வள்ளலா ரென்னும் பெரியாரும் ஒருவரா வர். "மெய்கண்டான் வெண்காட னென்குருசிற் றம்பலவன், பொய்கண் டகன்றசுகர் பூரணர்கள்" என்று திருவாய்மலர்ந் தருளிய அப்பெரியார் "இவனவனு கில்லா னென்றவுரை யென்கொல், தவமிலர்க்குச் சொன்னமொழி தான்" என்றருளி யிருப்பதால், மெய்கண்டார் தவமிலார் பொருட்டுச் சிவஞான போதச் சுருக்கவுரையில் சிலபாகத்தைப் பேதபரமாகக் கூறினா ரென்பது மாறுபாடின்றி நன்கு விளங்குவதாம். சிவஞான வள்ளலார் 'இவனவனு கில்லா னென்றவுரை' என்றது சிவ

ஞானபோதம் 2-வது சூத்திரத்தின் உதாரண வெண்பாவில் "அவனுளமா கில்லான்" என்று மெய்கண்டார் கூறியருளி யதைத் தெரிவிப்பதாம். மெய்கண்டார் சிவஞான போதத் திற்குவரைந்தசுருக்கவுரையில்சிலபாகம் பேதபரமாக வரைந்த மைக்குக் காரணம் அவிதமயக் குடையாரை அவர் சென்ற வழியே ஒருவாறு சென்று தெளிவித்தல்வேண்டு மென்னும் கருணையேயாம். "அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு (அந்நியமில்லாமையை யுணர்த் துவதாயிற்று)" என்றும், "அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லாம், அசத்தாகு மெய்கண்டா னுயின் - அசத்தலாய், நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரும், ஓரினவை யின் றுமா றெப்பு." என்றும், திருவாய் மலர்ந்தருளி யுள்ள மெய் கண்டார் பேதநிலையினராவது எங்ஙனமாம்? அபேத நிலையி னைப் பெற் றறிவாநந்த வடிவமாக விளங்கிய அப்பெரியா ரைச் சிலர் அவர் பேதவாதியே யன்றி அபேதவாதி யல்ல ரெனக் கூறுகின்றனர்; அவர் அவரது உரையின் போக்கை யூன்றி நோக்காதவரென்பதற் கியாதோ ராசங்கையு மின்று மென்க.

இற்றைக்கு 30-வருஷத்திற்கு முன்னர்ச் சென்னைமா நகரம், முத்தியாலுபேட்டையின்கண் வேதாந்தபாஸ்கரரா யெழுந்தருளி யிருந்த ஸ்ரீ சாது இரத்தின சற்குரு மூர்த்திக ளிடத்து(சை- இரத்தின செட்டியாரவர்களிடத்து)வேதாந்த

சாஸ்திராப்பியாசஞ்செய்து வந்த அடியேன் அக்குருமூர்த்தி கள்வாயிலாகச் சிவஞான போதத்தின் அரும்பெரும் பொருள் களைக் கேட்டு வந்த காலத்தில் சிவஞானபோதத்திற் கோருரை அபேத பரமாக வரைதல் வேண்டுமென்னும் ஆர்வமுடையவ னானேன். அது ஸ்ரீ பிரஹ்மநிஷ்டபண்டித வி. குப்புஸ்வாமி மகாராஜ் அவர்கள் வடமொழிச் சிவஞான போதத்திற்கியற்றி யருளிய தத்துவப் பிரகாசிகை யென்னுந்தமிழுரையாலொரு வாறு பூர்த்தியாவதற்குரிய தாயிற்று. அவ்வுரையின் நோக்கத் தையும்,

"ஈசன்வே றியான்வேறென் றெண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டு நினையென்றான்."

"சைவஞ் சிவத்தொடு சம்பந்த மானமையால்
சைவமே யத்துவி தஞ் சாதிக்கும்."

"அரிது மானிட யாக்கையிற் பிறத்தல்மற் றதினும்
அரிது வேதநூல் சைவநூ லாலகந் தெளிதல்
அரிதவ் வீசனே நாமென வறிவுமே விடுதல்
அரிது வாய்ப்பறை யறைந்திடா ததிலடங் குதலே."

"அதுவேநீ யாமென் றருமறைகள் சொல்லும்
எதிர்சிவனே நீயானு யென்னு—முதுசைவம்
வேறாவே றன்றாசொல் வேதியனே விண்விசும்பும்
வேறாவே றன்றா விளம்பு."

" சித்தஞ் சிவத்தோ டொருக்கிச் சிவமான
முத்தன் சிவமென மொழிந்திடு மாகமம்
சத்தியஞ் சீவன் சங்கா னென்றே
குற்றமி லன்மறை கூறும் வகுத்தே."

" தோற்றமும் ஒடுக்கமும் சிவத்திலே கூடாதென்று சிவாகமஞ் சொல்லுமே யெனின், நீ ஆகமக் கரைகண்டால் முற்றுந் தெரியும். அஃதெங்ஙனம்? அங்ஙனம் பூர்வகாண்டத்தில் சொல்லும்; உத்தரகாண்டத்தில் வேதம் சொன்னபடியே சிவத்திலே உற்பத்தி லயம் சொல்லும்" என்று சிவ ஞான வள்ளலார் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலையும்,

" பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கா ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கா ணங்களே."

" மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே."

என்று திருமூலநாயனர் திருவாய்மலர்ந்தருளி யிருத்தலையும்,
"போத மென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாம்
நீதி லாவிளக் கெடுத்திருள் தேடவுஞ் சிக்கா

தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்."

"வேதாகம மத்துணி பிரண்டில்லை யொன்றென்னவே, வந்தகுருவே" என்று தாயுமானவர் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலையும்,

"விழித்த பொழுதிற் கனவெனவும் விரைப்பூந் தெரிய லரவெனவும், தொழிற்செய் மாத்துக் களிறெனவுஞ் சுத்திகா ரசித மெனவும், பழித்த பூத விகாரமெலாம் பாற மாயை பாறியபின், செழித்த சோதிப் பிரபோதச் செய்யோ னினைய திறஞ் செய்தான்.''

என்று பிரபோத சந்திரோதயங் கூறுவதையும்,

"அப்படியே பாசுபத தந்திரத்தில் பசுபதியின் ஆராதனை சொல்லப்பட் டிருக்கின்றது; அதன் கர்த்தா பசுபதி; அதற் கும் அந்தக்கரணத்தின் நிச்சலத் தன்மையின் வாயிலாக மோட்ச சாதனமான ஞானம் பலமாம்" என்று விசாரசாகரம் 7-வது தரங்கத்திற் கூறுவதையும்,

என் சித்தத்துள் சிதையாது கொண்டும், சற்குரு நாதன் திருவருளை முன்னிட்டும், கருத்துரைத்தல், கண்ணழித் துரைத்தல், பொழிப்புத் திரட்டல், அகலங் கூறலென்னும் உரைவகையில் சிவஞான போதத்திற்குச் சிறிது கல்வியறி வுடையாரும் எளிதிலறியும் விதமாக ஒருரையெழுதி, அதற்

குச் **சிவஞானபோதத் தெளிபொருள் விளக்கவுரை** என்று பெயர் தந்தனன்.

சிவஞான போதத்தின் முன்னாறு சூத்திரம் திருக்குத் திருசியங்களைப் பகுத்தறிதற்குரிய வகையினையும், பின்னாறு சூத்திரம் சாதன சாத்தியங்களைப் பகுத்தறிதற்குரிய வகையினையும், கூறுதல்பற்றி, முன்னாறு சூத்திரத்திற்கும் திருக்குத் திருசிய விவேக இயல் என்றும், பின்னாறு சூத்திரத்திற்கும் **சாதன சாத்திய விவேக இயல்** என்றும் பெயர் தந்தனன். திருக்கு - சிவமும் சிவத்தின் பிரதிபிம்பமாயுள்ள சீவர்களும் ஆம்; திருசியம் - மாயாப் பிரபஞ்சமாம்; திருக்கு - அறிவு; திருசியம் - அறிபடுபொருள். சாதனம் - அடியார் பத்தி, ஆலயசேவை, சத்தசத்தின் விவேகம், மகாவாக்கிய வுபதேசம், மாயாப் பிரபஞ்சம் மித்தையென்னும் நிச்சயம், பஞ்சாக்கரத் தியானம், அதுவே நான் ; நானே அது என்னும் துணிவு, சமாதிகூடல் முதலியனவாம். சாத்தியம் - மலமாயை தன்னொடு வல்வினையின்றி அரன்கழல் செலலாம் (சிவபதமடைதலாம்). சாதனம் - காரணம்; சாத்தியம் - அதனாற் பெறப்படும் பயன்.

சிவஞான போதத்திற்கு யான் சுவகபோல கற்பிதமாக வுரையெழுதவில்லை; (சுவகபோல கற்பிதம் - தனது சொந்தக் கற்பனை.) சாஸ்திரப்பிரமாணங்களையனுசரித்தேயுரையெழுதியிருக்கின்றேன்; சிவஞானபோத வுரையில் அத்தியாவசியக

மாக வேண்டிய விடங்களில் வேண்டிய வளவாகத் திருவாச கம், திருக்கோவையார், திருமந்திரம், தேவாரம், சிவ புரா ணம், கூர்மபுராணம், கந்தபுராணம், திருவாய்மொழி முதலிய எழுபது நூல்களினின்றும் பிரமாணங்களும், அநுமானங் களும், இலக்கணக் குறிப்புக்களும், பதப்பொருள் விளக்கங் களும், பிறவும் எழுதியிருக்கின்றேன். இச் சிவஞானபோதத் தின் முக்கிய விஷயம் அவனே தானுதல், தான் அவனேயாத லாம் (ஜீவப்பிரஹ்ம ஐக்கியமாம்) ; கௌண விஷயம் திருக் குத் திருசிய விவேகமும், சத்தசத்து விவேக முதலியனவு மாம்; அதனுல், அவ்விஷயம் சொல்லப்படுவதே அதற்கு அவ் விஷயத்தோடு சம்பந்தமாம்; அது பிரதிபாத்திய பிரதிபாதக பாவ சம்பந்தமென்று கூறப்படும். பிரதிபாத்தியம் - சொல்லப் படுவதாம்; பிரதிபாதகம் - சொல்வதாம். இங்குச் சிவஞான போதம் பிரதிபாதகமாம்; சீவப்பிரஹ்ம ஐக்கிய முதலியன பிரதிபாத்தியமாம். அதிகாரி புருஷன் மலமாயை தன்னேடு வல்வினை யொழிய அரன்கழல் செலல் (சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்திவடிவ முத்தியடைதல்) அதன் பயனும்; விவேகம், வைராக்கியம், சமாதிசட்க சம்பத்தி, முமுட்சுத் துவ மென்னும் நான்கு சாதனமு முடையவனே இந்நூலைப் படித்து அதன்பயனைப் பெறுதற் கதிகாரியாவன். விஷயம், சம்பந்தம், பயன், அதிகாரமென்னும் இந்த நான்கினையு மொருங் குணர்ந்து சிவஞான போதத்தை நல்லாசிரியர் வாயி லாகப் படித்து, படித்தவாறு ஒழுகுகின்றவர்க்கு எல்லாம்

வல்ல இறைவனுகிய நடராஜப் பெருமா னருளால் மங்கள மனைத்தும் மாருதுண்டாகு மென்பது ஆன்ரோது துணிபும் அடியேனது நிச்சயமுமாம்.

இச் சிவஞானபோதத் தெளிபொருள் விளக்கவுரையை இற்றைக்குப் பன்னிரண்டு வருடங்கட்கு முன் வரைந்து எனது ஆப்த நண்பரும் தத்துவ சாஸ்திர விசுவாச முடைய வருமான மங்கலம் - ஸ்ரீமத் ஷண்முக முதலியா ரவர்களிடத்துப் படித்துப் பார்க்கும்படி கொடுத்து வைத்திருந்தேன்; அவர் அதனைப் படித்துப் பார்த்து, பன்முறை இவ்வுரையை யச்சிட்டு வெளியாக்குதல் வேண்டுமென்று வற்புறுத்தி வந்தமையால், அவரபீஷ்டத்தை மேற்கொண்டு அவரோடு இதனை யச்சிட்டு வெளியாக்கினேன்.

சென்னை ஸ்ரீ கச்சாலேசுவரர் தேவஸ்தான தர்ம கர்த்தரும், மெஸ்ஸர்ஸ் பாரி அண்டு கம்பெனி லிமிடெட், பிராவிடெண்ட் பண்டு டிபார்ட்மெண்ட் மானேஜருமான ஸ்ரீமத் G. Y. அப்புக்கண்ணு செட்டியாரவர்க ளிடத்துச் சிவஞான போதத் தெளிபொருள் விளக்கவுரையை யச்சிடுவது பற்றிப் பேசிய போது, அவர் இவ்வுரையை விரைவாக அச்சிட்டு வெளியாக்க வேண்டுமென்று கூறி, அச்சிடுவதற்கு வேண்டிய வளவாகப் பொருளுதவியுஞ் செய்தனர். இவர் இந்நூல் விஷயமாகச் செய்தவுதவி யென்ஞான்றுங் கருதுதற் குரிய தாம். சாஸ்திர விசாரமும், சிவத்தியானமும், சாதுசங்க

நேசமும் உடைய இவர்க்கு நடராஜப் பிரபு நல்வாழ் வனைத்தையும் அருள்வாராக.

எனது வேண்டுகோளுக்கிணங்கி வடமொழிச் சிவஞான போத சூத்திரத்திற்குப் பதவுரை எழுதித்தந்த சென்னை, இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தலைமைச் சம்ஸ்கிருத பண்டிதர் பிரஹ்மஸ்ரீ T. E. இரகுநாதாச்சாரியார் அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

மேற்படி ஷண்முக முதலியாரவர்களும், சென்னை, இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் - தமிழ்ப் பண்டிதர் - ஸ்ரீமத் ச. கந்தசாமி முதலியாரவர்களும் இச் சிவஞானபோதத் தெளிபொருள் விளக்கவுரையை யச்சிடுங்காலத்தில் என்னுடனிருந்து, எனக்குச் செய்த உதவி அளவிறந்ததாம்; அவ்வுதவி ஒருபோதும் மறக்கற்பாலதன்றாம்.

(அதிகாரி புருஷர்க்குச் சற்குருவி னுபதேசவாயிலாகச்) சிவஞானத்தைப் போதிக்கும் நூல் என்னும் பொருளுடையதாகிய இச் சிவஞானபோதத்திற்குத் தெளிபொருள் விளக்கவுரையை யெழுதுவதற்குரிய விவேகமெனக் குண்டாதற்குக் காரணபூதராயிருந்த ஸ்ரீ சற்குரு-மகாத்மா - சை. இரத்தின செட்டியாரவர்களது பெருங்கருணை யென் சித்தத்தின்கண் எக்காலத்தும் நிலைபெறுதற் குரியதாம்.

இந்நூலைச் செப்பமாக அச்சிட்டுத்தந்த சென்னை, திருவல்லிக்கேணி, நோபில் அச்சியந்திரசாலைத் தலைவர் ஸ்ரீமத் கதிர்வேலு முதலியாரவர்களது நன்றியும் மறத்தற்குரிய தன்றாம்.

இந்நூலின்கண் பிரமப் பிரமாதங்களால் தவறு நேரிட்டிருத்தல் கூடும்; அதனைச் சாஸ்திரக் கண்ணுள்ளார் தெரிவிப்பா ராயின், அது மறுபதிப்புப் புத்தகத்தைச் சுத்தமாக அச்சிடுவதற்குப் பேருபகாரமாம்.

இத் தெளிபொருள் விளக்கவுரையை யெழுதுமாறு என் சித்தத்தின்கண் குருவடிவமாக வெழுந்தருளியிருந்து என்னை யேவிவந்த ஸ்ரீ நடராஜப் பிரபு இஃதென்ஞான்றும் நிலைபெறுமாறுங் கருணை புரிவாராக.

இதிற் பிழையுளதாயின், உலகம் பொறுக்க.

வேதாந்த சங்கம்,<br>சிந்தாதிரிப்பேட்டை,<br>சென்னை,<br>20—2—1929. } **கோ. வடிவேலு செட்டியார்.**

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடி வாழ்க.





## விஷய அட்டவணை.

இந்நூலுரையாசிரியரின் மாணவருளொருவரும்,
வேலூர், ஊரிஸ்கல்லூரித் தமிழ்ப்பண்டிதருமாகிய
ஸ்ரீமத் கீ. வேணுகோபால நாயகரவர்களியற்றிய

# சிறப்புப் பாயிரம்.

## நிலைமண்டில ஆசிரியப்பா.

மங்கல மெங்கு மல்கியே மிளிரும்
பொங்கறி வுலகம் பொலிவு மஃதால்
இங்ஙன நிகழு மிறையருட் போதம்
இஃதுறு நாமஞ் சச்சிதா னந்தம்
5. மறுபெய ரதுசிவ ஞான போதம்
ஆகு மதனுக் கந்நா ளொருசிலர்
சிற்சில வுரைக ளியற்றினர் சிறப்பா
யவற்றினு ளபேதந் தோன்றா ததனுன்
மிகத்தெளி வாக மிக்குயர் ஞானம்
10. அகமதிற் பதிய வளவுநூற் கொண்டும்
தகவியற் கண்டுந் தந்தன னேருரை
அவனே ரன்னி னறைகுறுஞ் செவ்வே
பவமறு பன்னூற் பதித்தும் பார்த்தும்
சிவமுறு ஞானந் தினமுஞ் சொல்லியும்

15. பொய்யா மொழிக்குப் பதின்ம ருரையிற்
பரிமே லழகர் பகர்ந்தபே ருரைக்குத்
தெளிபொருள் விளக்கந் தெள்ளிதின் வரைந்தும்
மணக்கு டவருரை மாண்புறக் கண்டும்
கைவல்ய முதலாங் கைவரு முத்தித்

20. தைவநூற் களுக்குத் திகழுரை யியற்றியும்
சமயங் கடந்த ஞானப் பரம்பொருள்
நீயென வெனக்கு நேர்மையி னருளிய
போத னெங்குரு புண்ணிய மூர்த்தி
சென்னையிற் சிறந்த சீர்கோ மளபுரி

25. மன்னியே வாழும் மன்னனுந் தமிழன்
கோவடி வேலெனுங் குலவுநற் றவனே.

# போற்றுக் கவிகள்.

இந்நூலுரையாசிரியரின் மாணவருளொருவரும்,
சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப் பண்டிதருமாகிய

**ஸ்ரீமத் ச. கந்தசாமி முதலியாரவர்களியற்றிய**
**அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.**

ஆகமத்தி னரும்பொருளை யங்கைநெல்லிக் கனியெனவே யாவ ருக்கும், யூகமொத்த சொற்றிருந்த வுவமான முகத்தி னுணர்த்தி ஞானம், பாகமொத்த குணமுறச்செய் தஞ்ஞான விருளகற்றிப் பளகி லாத, ஏகவத்து வாயிலகு மின்ப நிலை யளிக்கின்ற வேற்றம் வாய்ந்த.

தொன்னூலாஞ் சிவஞான போதமெனு நூறனக்குச் சுருதி யாதி, மன்னூல்கட் கியையத்தெளி பொருள்விளக்க மென்றொருரை வரைந்திட் டானால், முன்னூலி னெறிசென்ற விரத்தினசற் குருபாத முளரி யேத்திப், பன்னூல்கட் குரைகண்ட பண்பார்கோ வடிவேலெம் பரமன் மாதோ.

உரைகண்டார் முன்புபல ரொன்றுனு மவரெல்லா முண்மை ஞானக், கரைகண்டா ரனுபவத்திற் கோர்சிறிது மொத்தவுரை கண்டா ரில்லை, நிரைகொண்ட கோவடிவே லெம்பெருமான் சுவானுபவ நிலைக்கி ணங்க, உரைகண்டா னிவ்வுரையே யனுபூதி மான்கள்கொளு முரைய தாமால்.

---

இந் நூலுரையாசிரியரின் மாணவருள் ஒருவரும்,
திருக்குறள் மணக்குடவருரைப் பதிப்பாசிரியருமாகிய
சென்னை, சிந்தாதிரிப்பேட்டை,
ஸ்ரீமான் கா-பொன்னுசாமி நாட்டாரவர்க ளியற்றிய
எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

---

ஓங்குறு மோத்தி னுச்சியின் பொருளை யுணர்ந்தவ னப்பொரு டம்மைப், பாங்குட னடைவார் பக்குவ நோக்கிப் பகர்பவ னறிவுரு வானோன், தாங்குசீர் வடிவே லெனுந்திரு நாமந் தரித்தவன் றமியனேன் றன்னை, யீங்குவந் தாண்ட தேசிக மூர்த்தி யின்றமிழ்ப் பானுவாய் மிளிர்வோன்.

பிறப்பெனும் பொல்லாப் பேதைமை தீர்ந்து பேரின் பம் பெற்றுல குய்யச், சிறப்புறு நல்லார் தேர்சிவ ஞான போதத்தின் மெய்ப்பொரு டேர்ந்து, நிறப்புறு மாறு தெளிபொருள் விளக்க நேருரை நிலவுற வளித்தான், திறப்பட விளங்கு மவ்வுரை யருமை சேடற்குஞ் செப்புதற் கரிதே.

---

# அறிஞர் அபிப்பிராயங்கள்.

## ஸ்ரீமத். K. C. முத்துச்சாமி செட்டியாரவர்கள் அபிப்பிராயம்.

இறைவன் மக்கள்மீதுள்ள பெருங்கருணையினால் அவர்கள் தன்னை (ஆத்மாவை) யறிந்துய்தற்பொருட்டு வேதாகமங்களை யியற்றியருளினர்; அவற்றுள், ஆகமத்தின் ஒரு பகுதியாய ரௌரவ ஆகமத்தி னொருகோடியி லமைந்துள்ளது சிவஞான போதமாகும். அஃது அபேதபரமான நூலாயிருப்பதறியாது, அதற்குப் பேதபரமாகப் பலர் உரையியற்றி யிருக்கின்றனர்; அதனைச் சம்ஸ்கிருதத்தி லிருந்து தமிழ்ச்சூத்திர வடிவமாக மொழிபெயர்த் தருளிய மெய்கண்டதேவர் மக்களின் பரிபாகத்திற்கேற்றவாறாக அதற்குப் பேதபரமாகவும், அபேதபரமாகவும் உரை யியற்றியுள்ளார். தன்னையறிந் தின்பமுற விருப்புள்ள மக்கட்குப் பேதபரமான உரைகள் மயக்கத்திற் கேதுவாகுமென்பதுட் கொண்டு, சைவக்கோட்டைகளென்று கருதப்படும் திருவாசகம்,திருமந்திரம், தேவாரம் முதலிய தமிழ் மறைகளினின்றே

சான்று காட்டி, மேற்படி சூத்திரங்கட்கு, தமிழுலகு செய்த தவப்பயனாக அவதரித்து, இலக்கிய-இலக்கண தருக்க வேதாந் தங்களில் நல்லறிவு பெற்று, கைம்மாறு கருதாது அதிகாரி புருஷர்க்கு நாடோறும் அத்துவித வேதாந்த தருக்க போதகா சிரியராயெழுந்தருளித் தமிழ் நாடெங்கும் சிறப்புற்று விளங் கும் எம்பெருமான் ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் அபேதபரமாக ஒருரை யியற்றி யிருக்கின்றார்கள். ஆன்ற கல்விகேள்விகளின் பயனாக வெளிப்போந்திருக்கும் இவ்வுரை தமிழ்த் தாய்க்கோர் அணிகலமாகவும், மோட்ச வுலகிற்கு ஒரு திறவுகோலாகவும் நிலவுமென்பது என் தாழ்மையான அபிப்பிராயமாம். இந்நூலின் உரை நடையையும், பகுப் பியல்பையும் நோக்க, வடிவேற் பெருமானே இந்நூற்கு அபேதபரமான உரை யியற்றுவதற்கு அதிகாரி புருஷ ராவரென்று கூறுவது மிகையாகாது. பிரஸ்தானத்திரயத் திற்குப் பாஷ்யகாரர்கள் பலபடியாக உரையியற்றி யிருக் கின்றமையின், இறைவனருளிய மெய்ந்நூலாகிய இச்சிவ ஞான போதத்திற்கு அபேதபரமாக ஒரு விளக்க வுரை வெளிப்போந்திருப்பது தமிழறிஞர்கட்கு ஒரு வாரா விருந் தாகும். உலகத்துள் நிலவும் சமயக் கோட்பாடுகளனைத்திற்கும் உறைவிடமாய்த் தினகரன்போல் விளங்கும் ஆரியமத சித் தாந்தத்தில் அதிகாரிகளின் பேதங்களுக் கேற்றவாறாக மோட்ச சாதநங்கள் படிப்படியாக வகுக்கப்பட்டிருக்கின்றன வென்பது மிகு பிரசித்தமாம். சர்வ தேச கால அவஸ்தை

யிலும் ஏகவுருவாய்ப் பொங்கித்ததும்பும் சச்சிதாநந்த வெள்ளப்பெருக்கை இத்தேகம் விழுமுன் அங்கை நெல்லிக்கனியெனப் புசித்து இன்புற்றிருக்கச் சிஞ்சாசுக்களை அறைகூவி யழைப்பதுபோன்று வடிவேற் பெருமான் தம்மியற்கைப் பெருங் கருணையினு லிவ்வுரையை யருளியிருக்கின்றனர். இதுபோன்ற அரும் பெரும் நூல் பலவற்றிற்கு உரை காணுமாறு நடராஜப் பெருமான் செட்டியாரவர்களுக்கு நல்வாழ்வும் தீர்க்காயுளு மருள்புரியுமாறு தினமும் பிரார்த்திக்கும்

K. C. முத்துச்சாமி செட்டியார், Proprietor,

The Standard Aerated Water Works,

Madras, 23—2—29.

## Opinion of Diwan Bahadur O. Thanikachellam Chettyar, B. A., B. L., Chief Judge, Small Cause Court, Madras.

The latest production of Vidvan K. Vadivelu Chettiar, commentaries on Sivagnana Bodham, is a great contribution to Hindu Philosophy. His ideas do not always run in ancient grooves but are thought-provoking. While in the Vedanta classes which for several (30) years past the Vidwan has been conducting, he has been attempting to instil in the minds of his disciples the varied interpretations which the texts could bear, he has in his commentaries given a permanence to his ideas to enable his teachings to be available to those who have not the privilege of sitting under his feet and listening to his teachings. I have no doubt that the critical study of the subject which he has inaugurated will produce a good crop of students who will take to further critical study and research in the field of Saiva Siddhanta and Vedanta. I wish the author long life of further usefulness in bringing within the grasp of the laymen the vast truths in various branches of Indian Philosophy.

*Waverley House*
*Egmore.*
19—2—29.

O. THANIKACHELLAM CHETTY.

# INTRODUCTION.

A student of the commentator is writing this introduction. This may seem topsy-turvy. But this practice has the sanction of the ancient literary custom behind it. The literary offsprings of great masters of Tamil Literature had at times, none but the students of their parents, as their nurses. The present author Pandit K. Vadivelu Chettiar, a well-known and popular figure in the literary world of South India, brings this commentary on Sivagnana Bodham, as his choice offering to the Goddess of learning. With his usual partiality for me he has given me this liberty of exercising the ancient literary custom above mentioned. But to me, for obvious reasons it is more of a duty than a privilege. Sivagnana Bodham is considered to be the Book of Books of the Saiva Siddhanta and the present commentator claims it as the text book of Vedanta. This is carrying war to the very centre of the enemy's camp and I am to be the standard bearer. Inspite of this, what eggs me on, is my conviction that in philosophy there is no counting or breaking of

heads but only the playing of the divine aurora around the heads of the warring philosophers. The greater the collision of the minds in this battle-field of all light and no heat, the brighter is the intellectual spark blazing forth. Therefore the child of his intellect, entrusted to me as its nurse, even in the Saiva Siddhanta atmosphere, is all safety itself.

That this commentary is original, no one will dispute. Nor can anyone characterise it as eccentric. It bears all the marks of permanence. The author neither plays to the gallery nor indulges in the empty rhetoric and paltry jargon of cheap philosophy. But a Vedantic commentary is a Vedantic Commentary for all that; and to the Saiva Siddhantins this book will come as a great surprise. For, it has been generally assumed that Sivagnana Bodham is the fountain-head of Saiva Siddhanta philosophy. To them this commentary may look like a nefarious attempt to poison the pristine source of knowledge. May I respectfully suggest to them, a coign of vantage, from which this commentary may be viewed. Even assuming that the present commentator has gone fundamentally wrong, is he not paying by his very act of writing this commentary, the highest possible

attribute to Sivagnana Bodham ? The Saiva Siddhantin may be tempted to cry 'save me from my friends', but let him pause for a while and consider the secret of the greatness of the Kural and the Upanishads. The Upanishads are common property of all the Hindus. The Kural is the heritage of all the creeds. Why should Sivagnana Bodham alone be a sectarian tract and no more? The present commentator claims it as his own. Why not ? It is his, yours, ours and everybody's. Are we going to deny that Sivagnana Bodham is a universal Gospel ? It is the smallest book in the world and ought to have been the greatest book but for the sectarian shelf which it now adorns. No more shall we imprison it in a shelf in the company of cobwebs but it shall be enthroned in our minds. I claim in all humility that the book is the divine revelation that dawned upon the great seer of Tamil land, Meikandan. As a Tamilian, therefore, I pray for that day when each one of the warring sects will write its respective commentary on this universal Gospel. Therefore the present commentator deserves the gratitude of all the Tamil public especially of the ardent admirers of Meikandan.

The commentaries like the present throw out a challenge. They act as spurs to our intellect. We are compelled to re-examine our position. If the old commentary is the correct one it will stand the scrutiny by this searchlight of originality and shine all the more resplendent. If it is defective, the black spots will be revealed and we will learn how to improve it. Why then should we be nervous about a new commentary? Had we not various commentaries written by Saiva Siddhantins? There were various schools of thought among the Saiva Siddhantins themselves and what the world at present chooses to label as Saiva Siddhanta is only that body of doctrines professed by one of such schools and expounded by Sivagnana Yogi in his commentaries. The heated polemics amongst the Saiva Siddhantins who all of them claimed to be the spiritual descendants of Meikandan, are buried deep in the streams of Lethe. But we hear in the commentaries of Sivagnana Yogi the echoes of those clashes of arms. In those far off times Sivagnana Bodham must have been much more of a living force than it is in these days of empty words and lip-service. Without collision there is no spark; and uniformity of views leads to intellectual

slumber. Variety is the spice of intellectual life as well. The present commentary will relieve us of this monotony. It may also be pointed out that an Advaitic commentary has nothing novel about it. Our late lamented Kuppusami Raju had already written in Tamil, a valuable commentary on the 12 original verses in Sanskrit.

The present commentator has too closely followed the ancient commentaries in interpreting the words of the verses. It need hardly be said that there are other interpretations equally possible and plausible. The present commentator, however has the great tact of following the least line of resistance and that increases the usefulness of this book. The result is a revolution; but it has been effected by a process of conformity to the ancient commentaries. It is true that here and there he has suggested new interpretations to certain words and phrases and these alone have transformed the old Siddhanta commentary into a Vedantic one. "தோற்றிய திதியே" and "அந்தம் ஆதி" in the first verse, "அவையே தானேயாய்" in the second, "உணர்த்த உணர்தலின்" in the third, "தமியருள்" in the fifth, "இரண்டு வகையின்" in the sixth, "இலதறியாது" and "இரண்டலா

ஆன்மா" in the seventh, "அந்நியம் இன்மையின்" in the eighth, "காட்டலின்" in the eleventh and "கழீஇ" in the twelfth are the important phrases and words for which the present commentator has proposed new interpretations. In these places we get the glimpses of the ancient controversy between the Siddhantins and the Vedantins (if we may use the popular terms.) Even in these places the changes in the interpretation are so slight and so very unobtrusive that they will escape the attention of any one except the diligent student of comparative philosophy. I may be pardoned if I give expression to my personal opinion which nevertheless counts for nothing, that in some places at least the interpretations proposed are more direct to the point, clearer and less involved and that in no place they do violence to the language of the verses. To say more would be to court controversy. Let the reader partake of this intellectual feast so sumptuously provided for us by the commentator and then pronounce his judgment supported by his own experience.

*Tamilagam,*<br>*Chintadripet.*<br>23—2—29.

T. P. MEENAKSHISUNDARAN,<br>M. A., B. L.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# சிவஞான போதத் தெளிபொருள்

## விளக்கவுரை.



## 1. திருக்குத் திருசிய விவேக இயல்.

### அவதாரிகை.

உலகம் காரியவடிவமாக விருத்தலின்,
தனக்கோரு காரண கர்த்தாவாகிய
முதற்கடவுளை யுடையதெனல்.

அவன்வ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்த மாதி யென்மனார் புலவர்.

(இதன் பொருள்.) அவனவ ளதுவெனு மவை - நம்மனோரால் அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இருதிணை முக்கூற்றொருமையாகச் சுட்டியறியப்படும் பிரபஞ்சத் தொகுதி, மூவினைமையின் - படைத்தல் காத்தல் அழித்தலென்னு முத்தொழிலின் பயனையுமுறுதற்குரியதாக விருத்தலின், (செய்யப்படு பொருளாகிய தனக்கு ஒரு காரண கர்த்தாவாகிய முதற்கடவுளை யுடையதாம்), தோற்றியதிதியே— (தன் காரண கர்த்தாவாகிய முதற்கடவுளிடத்தே தான்) தோன்றிநின்ற முறையே, ஒடுங்கி - ஒடுங்கிப்போக (மீண்டும்), மலத்து - (சீவர்களது அறம்பாவமென்னும்) கர்மமலங் காரணமாக, உளதாம் - (அம்முதற் கடவுளினின்றும் அப்பிரபஞ்சத் தொகுதிபோன்றதொரு பிரபஞ்சத் தொகுதி) உண்டாவதாம்; அந்தம் - (பிரபஞ்சத் தொகுதியின்) அந்தத்திலிருப்பவன், ஆதி - (அதற்குக்) காரணகர்த்தாவாய் முதற்கடவுளாவன், என்மனார் புலவர் - என்று கூறுவர் வேதாகமங்களின் பொருளை யுள்ளவாறுணர்ந்த பெரியோர், (என்றவாறு).

மூவினைமையு முரிமையின் என்பது செய்யுள் விகாரத்தால் மூவினைமையின் என வந்தது; வினைமை - வினையின் பயன்; ஏகாரம் தேற்றப் பொருளது.

உலகம் படைத்தல் காத்தல் அழித்தலென்னு முத்தொழிலின் பயனையு முறுதற்குரியதாக விருத்தலின்,

காரியமாம்; அதனால், தனக்கென்றொரு காரணகர்த்தா வாகிய முதற்கடவுளை யுடையதாம்; அது சீவர்களது கர்மங் காரணமாகத் தன் காரணத்தின்கண் தோன்றி நின்றவாறே ஒடுங்குவதாம்; அக்காரணம் அம் முதற்கடவுளேயாமென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

"அகரமுதல" என்னும் திருக்குறளின் விசேட உரையில் பரிமேலழகர் "காணப்பட்ட வுலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், 'ஆதிபகவன் முதற்றே' என உலகின்மேல் வைத்துக் கூறினார்" என்று கூறியிருப்பது இச்சூத்திரத்திற் கொத்திருப்ப தறிக.

அவனவளதுவெனக் காணப்பட்ட வுலகத்தாற் காணப்படாத காரணகர்த்தாவாகிய முதற்கடவுட்கு உண்மை கூறிய இச்சூத்திரம் உலகம் தோன்றுதற்குக் காரணமும் கூறியவாறறிக.

யாண்டுப் புகையுண்டு ஆண்டுத் தீயுண்டு என்பதுபோல, யாண்டுக் காரியமுண்டு ஆண்டுக் காரணகர்த்தா உண்டு என்பது பிறழாத சித்தாந்தமாம்.

பிரபஞ்சம் தோன்றிநின்ற முறையே யொடுங்குதலென்பது, பிரபஞ்சம் எந்த முறையில் தோன்றிநின்றதோ அந்த முறையிலே ஒடுங்குதலாம்.

அவை - தொகுதி அல்லது கூட்டம், அந்தம் ஆதி என்பன ஆகுபெயர். தோற்றிய என்பதற்குக் காரணகர்த்தா

தோற்றுவிக்கத் தோன்றிய என்று பொருள் கொள்க. காரண கர்த்தா வென்பதில், இங்குக் காரணம் முதற்காரணமும், கர்த்தா நிமித்த காரணமுமாம். இறைவன் உலகத்திற்குக் காரண கர்த்தாவா யிருக்கின்றுனென்புழி, அவன் அதற்கு (சிலந்திப்பூச்சி தன் காரியமாய நூலிற்குத் தானே முதற் காரணமும் நிமித்த காரணமுமா யிருத்தல்போல) முதற்காரண மும் நிமித்தகாரணமுமா யிருக்கின்றுனென்ப துணர்தற் பாலதாம்.

கடத்திற்குக் குயவன் நிமித்த காரணமாகமாத்திர மிருப் பதுபோல, உலகத்திற்கு இறைவன் நிமித்த காரணமாக மாத்திர மிருக்கின்ரு னென்பாரது மதம் 'அந்தமாதி' என் பதனுல் மறுக்கப்பட்டவாறறிக. செயப்படுபொருட் கிலக் கணம் 'வினைமுதற் ருெழிற்பயனுறுவது' என்பதாகலின், 'மூவினைமையின்' என்பதற்கு முத்தொழிலின் பயனையு முறு தற் குரியதாக விருத்தலின் என்று பொருள் கூறப்பட்டது.

'அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்' என்பத ளுல், உலகிற்கொரு காரணகர்த்தா உண்டென்றும், 'தோற் றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்' என்பதனுல், உலகம் தோன்றிநின் ருெடுங்குவதற்குக் காரணம் சீவர்களது கர்ம மன்றிப் பிறிதொன்றன்றென்றும், 'அந்தமாதி' என்பதனுல், உலகத்திற்கு இறைவன் முதற்காரணமாகவும் நிமித்த காரண மாகவுமிருக்கின்ருனென்றும் இச்சூத்திரம் விளக்கிய வாறும்.

உலகம் தோன்றிநின் றொடுங்குவதற்கு இறைவன் முதற்காரணமும் நிமித்த காரணமுமாக விருக்கின்றான் ; சீவர்களது கர்மம் துணைக்காரணமாக விருக்கின்றதென்பதாம்.

ஜாலவித்தை செய்வோன் ஜாலவித்தை செய்யச் சங்கற்பித்தவிடத்து அவனிடத்தினின்றும் ஜாலவித்தை தோன்றுவதுபோல, இறைவன் உலகத்தைப் படைக்கச் சங்கற்பித்தவிடத்து அவனிடத்தினின்றும் உலகமுண்டாயிற் றென்க. இதனால், இறைவன் உலகத்தைக் * கரணத்தால் படைக்காது சங்கற்ப மாத்திரையாற் படைத்தானென்பது பெறப்படுவதாம் ; படவே, ஜாலவித்தைபோல் உலகமு மித்தையாமென்பது சந்தேக விபரீதமின்றி விளங்குவதாம். இறைவன் உலகத்தைக் கரணத்தாலன்றிச் சங்கற்ப மாத்திரையாற் படைத்தானென்பது

"நோக்காதே யெவ்வளவு நோக்கி னானை
நுணுகாதே யாதொன்று நுணுகி னானை
ஆக்காதே யாதொன்று மாக்கி னானை."

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம். இறைவனுக்கு அச்சங்கற்ப முண்டாதற்குக்

---

* குயவன் கடத்தை யுண்டாக்குமிடத்து அதற்குக் கரணம் மண் - தண்டசக்கரம் முதலியனவாம்; இறைவன் உலகத்தைப் படைக்குமிடத்து அதற்கு அவைபோன்ற கரணமில்லையாமென்க.

காரணம் சீவர்களது கர்மங்களாம். இது "காலபாகத்தால் சீவர்களின் கர்மசம்ஸ்காரத்தால் தனது மாயாசக்தியிலுள்ள சத்துவ குணத்தால் ஜகத்தெல்லாவற்றையும் படைப்பே னென்று பார்த்தார் (பரமேசுவரர்)" என்று பிரஹ்மகீதை இரண்டாவதத்தியாயம் கூறுவதால் செவ்விதாக விளங்குவ தாம். இங்குப் பரமேசுவரர் என்றது மாயையோடு கூடிய பிரஹ்மத்தை. இதனை "மாயையொடு விரவு மந்தச் சிவத்தி னின்றும் பழுதைமா சுணமே போல,ஆயவபஞ்சீகிருத சூக்கு மவா காயமும்........உற்பத்தியான" என்று சூதசங்கிதை கூறுவதாலறிக. பழுதை - கயிறு; மாசுணம் - பாம்பு.

நித்திராதோஷத்தோடு கூடியவனிடத்துச் சொப்பன வுலக முண்டாமிடத்து அதற்கு அவன் அபின்ன (வேறு படாத)நிமித்த உபாதான (முதற்) காரணமாயிருத்தல்போல, மாயையோடு கூடிய சிவத்தினிடத்து (பரமேசுவரனிடத்து) உலகமுண்டாமிடத்து அதற்கு அஃது அபின்னநிமித்த உபா தானகாரணமாக விருக்கின்றதென்பதாம். (கடமுண்டாதற் குரிய) சத்தியோடு கூடிய மண்ணினின்றும் கடமுண்டாதல் போல, (உலகமுண்டாதற்குரிய) சத்தி(மாயை)யோடு கூடிய சிவத்தினின்றும் உலகமுண்டாகின்றது; கடம் தோன்றி நின் றழிந்த மண்ணினின்றும் அந்தக்கடமே தோன்றாது வேறு கடம் தோன்றுவதுபோல, உலகம் தோன்றி நின்றழிந்த சிவத்தினின்றும் அந்த வுலகமே தோன்றாது வேறு உலகம் தோன்றுகின்றது; கயிறு விகாரமடையாதிருக்க, அதினின்

றும் பாம்பு கற்பிதமாக வுண்டாதல்போல, இறைவன் விகார மடையாதிருக்க, அவனிடத்தினின்றும் உலகம் கற்பிதமாக வுண்டாயிருக்கின்றது என்பது இங்குக் கூர்ந்துணர்தற் பாலதாம்.

சிலந்திப்பூச்சி தன்னிடத்துத் தோன்றும் நூலிற்குத் தானே முதற்காரணமாகவும் நிமித்த காரணமாகவு மிருத்தல் போல, இறைவன் தன்னிடத்திற் றோன்றும் உலகத்திற்குத் தானே முதற் காரணனாகவும் நிமித்த காரணனாகவு மிருக் கின்றானென்புழி, சிலந்திப்பூச்சி தன்னிடத்திற் றோன்றும் நூலிற்கு ஜடப்பிரதானத்தால் முதற் காரணமாகவும் சித்துப் பிரதானத்தால் நிமித்த காரணமாகவு மிருத்தல்போல, இறைவன் தன்னிடத்துத் தோன்றும் உலகத்திற்கு ஜடப் பிரதானத்தால் முதற்காரணனாகவும் சித்துப் பிரதானத்தால் நிமித்தகாரண னாகவுமிருக்கின்றா னென்ப துணரற்பாற்றாம்.

சேதனம் (அறிவு) மாயாரகிதமா யுள்ளபோது சிவமென்றும், மாயாசகிதமா யுள்ளபோது சிவனென்றும் சாஸ்திரங் களாற் கூறப்படுகின்றது. சிலந்தியுடம்போடு கூடிய உயிர் சிலந்திப்பூச்சியாக விளங்குவதுபோல, மாயையோடு கூடிய சிவம் சிவனாக விளங்குகின்றதென்பது இங்கின்றியமையா துணர்தற் பாற்றாம்.

"ஈசுவரனே சகத்திற் குபாதான காரணமாயும் நிமித்த காரணமாயு மிருக்கின்றான். அது, ஒரே சிலந்திப்பூச்சி தன்

வலைக்கு உபாதான காரணமாயும் நிமித்த காரணமாயும் இருப்பது போலாம். சிலந்திப் பூச்சியின் சடசரீரம் அதன் வலைக்கு உபாதான காரணமாம்; சிலந்தியின் சரீரத்துள்ள சேதனபாகம் நிமித்த காரணமாம். ஆதலால், ஒரு ஈசுவரனையே நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் அங்கீகரித்தலில் ஒரு திருஷ்டாந்தமு மில்லையெனக்கூறின், சிலந்தியைப்போல ஈசுவரனது சரீரமான ஜடமாயை ஜகத்திற்கு உபாதான காரணமாம்; அதன் சேதனபாகம் நிமித்த காரணமாம். இவ்விதத்தால் ஒரே ஈசுவரன் ஜகத்திற்கு உபாதானமும் நிமித்த காரணமுமாவன் என்பதில் திருஷ்டாந்தம் சிலந்தியும், முக்கிய திருஷ்டாந்தம் சொப்பனமுமாம்.'' என்று விசாரசாகரம் 5-வது தரங்கத்திற் கூறுவது மறிக.

கடத்திற்குக் குயவன் நிமித்த காரணமாக மாத்திரமிருத்தல்போல, உலகத்திற்கு இறைவன் நிமித்த காரணமாக மாத்திர மிருக்கின்றான்; அதனால், அவன் அதற்கு முதற்காரணனாகானெனின், அஃது இறைவன் சர்வகாரண னென்னும் வேதவழக்கிற்கு மாறாயிருத்தலின், பொருந்துவ தன்றாம்.

எது காரியத்தின் சொரூபத்தில் பிரவேசிப்ப தில்லையோ, ஆனால், காரியத்திற்கு வேறாயிருந்து கொண்டு அதனைச் செய்கின்றதோ, எதன் நாசத்தால் காரியம் நாசமடைவதில்லையோ, அது நிமித்த காரணமாம். குடமாகிய காரியத்தைச் செய்யும் நிமித்த காரணனாகிய குயவன் தடசொரூ

பத்தில் பிரவேசியாது அதற்கு வேருயிருத்தலும், குயவன் நாசத்தால் குடம் நாசமாகாதிருத்தலும் இங்குணரப் படுமாயின், இறைவன் உலகிற்கு நிமித்த காரணனேயன்றி முதற் காரண னல்லவென்பது பெருங்குற்ற முடையதா மென்பது நன்கு விளங்குவதாம்.

எது காரியத்தின் சொரூபத்தில் பிரவேசிக்கின்றதோ எதின்றிக் காரியத்தின்ஸ்திதி (இருப்பு) இல்லையோ அது முதற்காரணமாம். குடமாகிய காரியத்தில் மண்ணுகிய முதற் காரணம் பிரவேசித்திருப்பதும், மண்ணி னிருப்பாலேயே குடமிருப்பதும் இங்குணர்தற் பாலனவாம். முதற்காரண நிமித்த காரணங்களின் இலக்கணங்களை நன்குணர்ந்தோர்க்கு இறைவன் தன்னிடத்துத் தோன்றி நின்றழியும் உலகத்திற்குத் தானே முதற்காரணனுகவும் நிமித்த காரணனுகவு மிருக்கின்றுனென்பது எவ்வாற்ருனும் பொருத்த முடையதாமெனத் தோன்றுவதாம். நம்மிடத்திற் ருேன்றிநின் றழியும் சொப்பன உலகத்திற்கு நாமேயன்ருே முதற்காரணமாகவும் நிமித்த காரணமாகவு மிருக்கின்ருேம்; இங்ஙன மிருத்தல் மிகு பிரசித்தமாமன்ருே? இங்ஙனமே இறைவன் உலகத்திற்கு முதற்காரணமாகவும் நிமித்த காரணமாகவு மிருக்கின்ரு னென்பது சுருதி யுக்தி அநுபவங்க ளோடு மாறுபாடின்றிய தீர்மானமாம்.

"பிரமன் (உலகை) முன்போலப் படைத்தான்" என்று அநாதி அபிப்பிராயமென்னும் சுருதி கூறுவதால், இறைவன்

உலகத்தைச் சீவர்களது காலகர்ம பரிபாகத்திற் கேற்றவாறு சிருட்டிதோறும் முன்போலப் படைத்து வருகின்றான் என்பது பெறப்படுவதாம்; இஃதுணராதார் மாயையி லொடுங்கிய உலகம் தான் ஒடுங்கியவாறே அம்மாயையினின்றும் வெளிப் படுகின்றதெனக் கூறுகின்றனர்; அங்ஙனமாயின், மண்ணிலே ஒடுங்கிய ஓர் ஓட்டைக்குடம் தான் ஒடுங்கியவாறே அம் மண்ணினின்றும் வெளிப்படுதல் வேண்டும். அங்ஙனமின் றென்பது மிகு பிரசித்தமாம். இறைவனுக்குரிய சொரூப லட்சணம் தடஸ்த லட்சணம் என்னு மிரண்டனுள், இறை வன் உலகத்திற்குக் காரணகர்த்தாவாக விருக்கின்றான் என் றிங்குக் கூறியது அவனது தடஸ்த லட்சணமாம்.

(1.) ஒன்றன்கண் எப்போது மிருக்கும் இலக்கணம் (சிறந்த குறி) அதனது சொரூப லட்சணமாம்; அது பிருதிவிக் குப் பிருதிவித்தன்மை இலக்கணமா யிருத்தல் போல் வதாம்.

(2.) ஒன்றன்கண் ஒருகாலத்திருக்கும் இலக்கணம் அதனது தடஸ்த லட்சணமாம்; அது பிருதிவிக்குக் கந்தம் இலக் கணமா யிருத்தல் போல்வதாம்.

இறைவன் சச்சிதாநந்த வடிவனென்புழி, அச் சச்சிதா நந்தமென்பது அவனுக்குச் சொரூப லட்சணமாம்; இறை வன் உலகத்திற்குக் காரணகர்த்தா என்புழி, அக்காரணகர்த்தா வென்பது அவனுக்குத் தடஸ்த லட்சணமாம். உலகம் இறை

வனிடத்துத் தோன்றிநின் றழிதல் ஒருகால விசேடத்தி லாதலின், அதுகாரணமாக இறைவன் உலகத்திற்குக் காரண கர்த்தாவென ஒருகால விசேடத்தில் கூறப்படுகின்றா னென்க. "எவன் சர்வஞ்ஞனோ எவன் சர்வ வித்தோ" என் றற்றொடக்கத்தனவும் இறைவனது தடஸ்த லட்சணமாம்.

சர்வஞ்ஞன் - எல்லாவற்றையும் சாமானிய வடிவமாக அறிபவன்; சர்வவித்து - எல்லாவற்றையும் விசேஷ வடிவ மாக அறிபவன்.

சீவர்களது கர்மபரிபாகங் காரணமாக இறைவனிடத்தி னின்றும் அநாதியாக உலகம் தோன்றிநின் றொடுங்கிவரு கின்ற தென்பது சுருதி சித்தாந்தமாம்; இறைவன் சீவர் களுக்கு அவர்தம் கர்மபோகங்களைக் கொடுக்க உதாசீன (பரா முக) ரானபோது உலகம் தன் காரணத்தில் ஒடுங்குகின்றது; அவர் அவர்களுக்கு அவர்தம் கர்மபோகங்களைக் கொடுக்கச் சன் (எதிர்)முக ராகும்போது அதுபோன்றவுலகம் தன் காரணத்தி னின்றும் வெளியாகின்ற தென்பதும் சுருதி சித்தாந்தமாம். இதனால்,உலகத்தோற்ற முதலியன சீவனுடைய கர்மாதீனமா மென்பது பெறப்படுவதாம்.காணப்பட்ட உலகத்தால் காணப் படாத இறைவனுக்கிருப்புக் கூறவேண்டுதலின், அதுபற்றி நம்மனோர் முன்னர் இறைவனது தடஸ்த லட்சணத்தையும், பின்னர் அதுவாயிலாக அவனது சொரூப லட்சணத்தையும் உணர்தற் குரியராகின்றனர் ; அவ்வியையபு பற்றி இச்சூத்தி

ரம் இறைவனை உலகத்தின் தோற்றமுடைமை - நிலை யுடைமை - ஒடுக்கமுடைமை வாயிலாக வுணர்த்திய தென்க. இதனை வேதாந்த சூடாமணி "சாகைநுனி மதியுளதென் றுணர்த்தலிற்பூ தாதி சகமாய காரணங்கொண் டறிவுணர்த் தல் தடத்தம்" என்று கூறுவதாலுமறிக. தடத்தலட்சணம் - சிறப்பியல்பாம்; சொரூபலட்சணம் - பொதுவியல்பாம்.

இறைவனைச் சுருதி நிர்விகார வடிவனென்று கூறுத லின், அவன் உலகோற்பத்தி முதலியவற்றைச் செய்வது எங் ஙனமாமெனின், நாம்விகாரமடையாதிருக்க, நம்மிடத்துச்சொப் பன உலகுதோன்றி நின்றொடுங்குதல்போல, இறைவன்விகார மடையாதிருக்க, அவனிடத்து உலகு தோன்றிநின் றொடுங்கு கின்ற தென்பதே அதற்கு விடையாம். கயிறு விகார மடையாதிருக்க, அதனிடத்துப் பாம்பு தோன்றிநின்றொடுங் குவதும், குற்றி விகாரமடையாதிருக்க, அதனிடத்துக்கள்ளன் தோன்றிநின் றொடுங்குவதும் இங்குணர்தற் பாலனவாம். "நிர் விகார அத்விதீயப்பிரஹ்ம சொரூபனான ஈசுவரனிடத்துச் சிருஷ்டியாதி வியாபாரமாகிய வெகு தொழில்கள் எவ்வாற் றானெனின், சூரியன் இச்சாயத்தனமின்றித் தன்வருஷ (மழை)க் கிரணத்தால் விருஷ்டிரூப (மழைவடிவ)மான ஜலத் தைவிட்டு, பின்அந்த ஜலத்தில் தானேபிரதிபிம்பித்து, மேக கிரணத்தால் அதனைமறைத்து, இம(பனிக்) கிரணத்தால் அத னைக் காத்து, உஷ்ண கிரணத்தால் அந்த ஜலத்தைத் திரும்ப

வாங்கிக்கொண்டு, அந்தப் பிரதி பிம்பத்தைத் தன்னோடு கூட்டிக் கொள்ளுவன்; அதுபோல, ஈசுவரனும் தன் மாயாசக்தியோடு கூடிச் சித்துப்பிரதானத்தால் நிமித்த காரணனும், ஜடப்பிரதானத்தால் உபாதான காரணனும் நின்று, புத்தியாதி காரியங்களைச் சிருஷ்டித்து, ஜீவரூபத்தால் தானே பிரவேசித்து, கர்மத்தால் போக்திருவாய் நின்று, நியாமகசத்தியால் போக்கிய போக்திருக்களை நியமித்து, உருத்திரரூபத்தால் அக்காரிய ரூபங்களைச் சங்கரித்து, பின் சுருதிகுரு ரூபத்தால் அந்தச் சீவனைத் தன்னோடு ஐக்கியஞ்செய்து கொள்ளுவன்" என்று விவேகசிந்தாமணியின் வேதாந்த பரிச்சேதம் கூறுவது இறைவன் சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்தும், நிர்விகாரனு யிருக்கின்றானென்பதை நன்கு விளக்குவதாம்.

தமக்கென்றொன்றின்றிப் பேசுபவருள் சிலர் உலகம் தனக்கென்றொரு காரண கர்த்தாவையுடைய தன்றென விதண்டை பேசுகின்றனர்; அவர் சூரிய சந்திராதி மண்டலங்களினமைப்பு, அவற்றின் முறைதவறாத ஓட்ட முதலியவற்றை யூகித்துணர்வாராயின், உலகம் காரியவடிவமாக விருப்பது; அதனால், தனக்கென்றொரு காரண கர்த்தாவை யுடையதென்பதுணர்ந்து, சன்மார்க்கப் பிரவேசமுடையராய் நல்வாழ்வு பெறுதற் குரியவராவர். அவ்விதண்டை பேசுவோர் உலகம் தனக்கென்றொரு காரண கர்த்தாவை

புடையதென்ப துணர்தற் பொருட்டு, இச்சூத்திரம் உலகந் தனக்கென்றொரு காரண கர்த்தாவையுடையது; (காரண கர்த்தாவின் படைத்தல் காத்தல் அழித்தலென்னும்) முத்தொழிலின் பயனையு முறுதற்குரியதாக விருத்தலின்; சிலந்தி நூல்போல அல்லது சொப்பனவுலகம்போல என்னும்அனுமானப் பிரமாண வடிவந்தோன்ற' அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்' என்று கூறியதென்க. 'மூவினைமையின்' என்றதனால், உலகம் இறைவனது படைத்தற்றொழிலின் பயனையும், காத்தற்றொழிலின் பயனையும், அழித்தற் றொழிலின் பயனையும் உறுதற்குரியதாக விருக்கின்றதென்று கொள்க. உலகம் படைத்தற் றொழிலின் பயனையுறுதல் அது தோற்றன் மாத்திர வடிவமுடையதாதலாம்; காத்தற் றொழிலின் பயனையுறுதல் அதனது தோற்றன் மாத்திர வடிவம் அழியாதிருத்தலாம்;அழித்தற்றொழிலின் பயனையுறுதல் அஃது அவ்வடிவமின்றிக் கெடுதலாம்.முத்தொழிலுக்கும் ஆசிரயம் இறைவனும்; அவற்றின் பயனுக்காசிரயம் உலகமாம். முத்தொழிலையுடையது உலகமெனின், அவை இறைவனுக்கில்லையாமென்பது பெறப்படுவதாம். குயவனிடத்து வினை நிகழாதபோது கட்முண்டாகாமை போல, இறைவனிடத்து வினை நிகழாதபோது உலக முண்டாகாதென்பது ஒருதலையாம். ஒருதலை - நிச்சயம்.

இச்சூத்திரம் இறைவன் உலகத்திற்கு அந்தமும் ஆதியுமாக விருக்கின்றானென்று முடிவு கூறினமையின்; இறை

வன் உலகத்திற்கு அபின்ன நிமித்த வுபாதான காரணமா யிருக்கின்றானென்பது அதனது துணிபாமென்பது பெறப் பட்டவாறறிக.

இச்சூத்திரம் 'அந்தமாதி' என்று கூறியதுபோலத் திரு ஞான சம்பந்த சுவாமிகள் "தோற்றமு மீறு மாகி நின்றாய் சோபுர மேயவனே" என்றும், மாணிக்கவாசக சுவாமிகள் திருக்கோவையாரில் "முன்னு மொருவ ரிரும்பொழின் மூன்றற்கு முற்று மிற்றாற், பின்னு மொருவர்" என்றும், திருவாசகத்தில் "ஆதியு மந்தமு மாயி னாருக்கு" என்றும், பட் டினத்தடிகள் "நுரையுந் திரையு நொப்புறு கொட்பும், வரையில் சீகர வாரியுங் குரைகடற், பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி, எண்ணில வாகி யிருங்கட லடங்குந், தன்மை போலச் சராசர மனைத்தும், நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்குநீ, ஒன்றினுந் தோன்றா யொன்றினு மடங்காய்" என்றும் கூறுவதறிக.

சிருஷ்டி இருவகைப்படுமென்பதையும், சங்காரம் நால் வகைப்படு மென்பதையும் வேதாந்த பரிபாஷை விஷய பரிச்சேதத்திற் காண்க.

அவனவளவ ரென்னும் உயர்திணைப் பொருள்களுள், அவரென்பது அவன் அவள் என்பதன் கூட்டமன்றி வேறின்மையின், அதனையொழித்தும், அவையென்பது அது என்பதன் கூட்டமன்றி வேறின்மையின், அதனையொழித்

தும், யான் யாம் என்னும் தன்மையும், நீ நீர் என்னும் முன்னிலையும், அவன் அவள் அது என்பவற்றின் கூட்டமன்றி வேறின்மையின், அவற்றை யொழித்தும், உலகம் அவன் அவள் அது என்பவற்றின் கூட்டமன்றிப் பிறிதொன்றன்றென்பது தோன்ற இச்சூத்திரம் 'அவனவ ளதுவெனு மவை' என்று கூறியதென்க. இதனால், உலகம் உயிர்ப்பொருள் உயிரில் பொருளென்பவற்றின் கூட்டமாமென்பது பெறப்பட்டமை காண்க. உயிர்ப் பொருள் அநாதியாக விருப்பதாகலின், அஃது இறைவனது படைத்தல் முதலிய தொழிற் பயனை யுறுதற்குரியதன்றாம்; ஆனால், அது தன் கர்மத்தின் பயனையடைதற் பொருட்டுள்ள ஆண் பெண் அது என்னுமுடம்பு முதலியனவே அத்தொழிலின் பயனையுறுதற்குரியனவாக விருக்கின்றன வென்பது இங்குணர்தற் பாலதாம்.

எது எதனினின்றுண்டாகி எதன்கண் நிலைபெற்று, எதன்கண் ஒடுங்குகின்றதோ அதற்கு அதுவே முதற்காரணமாமென்னும் நியமம் இறைவன் உலகத்தின் தோற்றத்திற்கும் இருப்பிற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாயிருக்கின்றானென்று இச்சூத்திரம் கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

"எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியுந் தன்கணே யாகி, ஒப்பிட வொன்று மின்றியே யென்று முள்ளதா யுரையுணர் விறந்த,வப்பொரு ளேரே யறிந்தபோ

தெல்லாப் பொருள்களு மறிந்ததா மந்த,மெய்ப்பொரு டானே யெப்பொருள் களுமாய் விளங்கலால் வேறிலா மையினல்''

''அந்தத்துள தன்சக்தியை யடைவுற் றுளதாமிச், செந்துக்கள்செய் கருமந்திகழ் காலம்பரு வஞ்செய், தெந்தப் பொருள் களுமாக்குவ னெனவேயிறை யுன்னுப், பந்தப்பட முன்போற்பல வுலகங்கள் படைத்தான்.''

''காலமுங் கன்மந் தானும் பரிபாக மான வாறே, ஞால முண் டாக நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும், பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக,வேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து பார்த்தான்.''

என்று பிரமகீதை கூறுவது இச்சூத்திரப் பொருளை யினிது விளக்குவதாம்.

இறைவன் (மாயையின்) சத்துவம் இராசதம் தாமத மென்னும் குணங்களால் உலகத்தைக் காத்தல் படைத்தல் அழித்தல்களைச் செய்வதுபற்றி முறையே அரி அயன் அரன் என்று கூறப்படுகின்ற னென்பதறியாது, உலகிற் கிறைவன் அரனே பிறரல்லர்; அரியே பிறரல்லரென வாதிரை கூறுவார் ''சத்துவ முதலிய குணங்களான் மூன் ருகிய வுறுதிப்பொருட்கு, அவற்ருன் மூவராகிய முதற் கடவுளோடு இயைபுண்டாகலான், அம்மூன்று பொருளை யும் கூறலுற்ருர்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறை மையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுபடக் கூறி

ஞரென வுணர்க" என்று பரிமேலழகர் திருக்குறளுரையில் கூறியிருப்பதறிந்து தெய்வமிகழாதிருப்பாராக. அவர் திருஞான சம்பந்த சுவாமிகள் "படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை" என்று கூறுவதையும், திருமூலர் "ஆதிப் பிரானு மணிமணி வண்ணனும், ஆதிக் கமலத் தலர்மிசை யாயனும், சோதிக்கின் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றெனுர், பேதித் துலகம் பிணங்குகின் ருரே." என்று கூறுவதையும், பாகவத புராணம் "குலவு மூவ ருருவமுங் கொண்டதே" என்று கூறுவதையும் உணர்வாராக. இதனுல், சிவஞானபோதங் கூறும் சிவம் படைத்தளித் தழிப்ப மூம் மூர்த்தியாயுள்ள பரம்பொருளா மென்பது தெளிவாகப் புலப்படுவதாம். 1.

## அவதாரிகை.

தனது காரியமாய உலகமனைத்தும் தானேயாயுள்ள (காரண கர்த்தாவாகிய) இறைவன் சீவர்கள் தமது கர்மங்களுக்கேற்றவாறு சுகதுக்கங்களை யநுபவித்தற் பொருட்டு, அவற்றை அவர்தம் கர்மங் காரணமாகவே தனது நியமசக்தியினுல் படைத்தளித் தழித்து வருகின்ரு னெனல்.

**2. அவையே தானே யாயிரு வினையின்**
**போக்கு வரவு புரிய வாணையின்**
**நீக்க மின்றி நிற்கு மன்றே.**

(இ - ள்.) அவையே - (இறைவன் அவன் அவள் அது என்னும்) அப்பொருள்களனைத்துமே, தானேயாய் - (தனது காரியமாயிருத்தலின்) தானேயாய் (இருக்கிறான்; அவனங்ஙன மிருத்தற்குக் காரணம் யாதெனின், அது சீவர்களின் கர்மமாமென அதற்கு விடை கூறுகின்றார்), நீக்கமின்றி நிற்கும்-(அவன் தன்னிடத்துப் பிரிப்பின்றியுள்ள, ஆணையின் - (தனது) ஆணையாகிய நியமசக்தியினால், இருவினையின்-(சீவர்களது) இருவினை காரணமாக, போக்கு வரவு புரிய - (அவர்கள்) போதலையும் வருதலையும் செய்ய, (தொடர்ச்சியாக முன்போலச் சம்சார வடிவமாகிய உலகமனைத்தையும் அவை தனக்கு வேறாயிருப்பது போலத் தன்னிடத்தினின்றும் படைத்தளித் தழித்துத் தான் விகாரமில்லாது), நிற்கும் - நிலைபெற் றிருக்கின்றான், (எ - று).

இறைவன் சீவர்களது கர்மங்காரணமாகத் தனது நியம சத்தியினால் உலகத்தைப் படைத்தளித் தழித்து வருகின்றானென்பது இச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

இச்சூத்திரம் முன்சூத்திரம் 'மலத்துளதாம்' என்று கூறியதை விரித்துக் கூறியவாறு காண்க. முன்சூத்திரம் கூறியது புரோவாதமாம்; இச்சூத்திரம் கூறுவது அநுவாதமாம். ஒன்றனை யாதாயினுமொரு நிமித்தத்தால் முன்பு கூறி, அதனையே வேறொரு நிமித்தத்தால் பின்புங் கூறுதல் அநுவாதமாம். இங்கு முன்பு கூறுவது புரோவாதமாம்.

நிற்கும் என்பது புரிய என்பதனோடுஞ் சென்றியைந்து நின்றது. அன்றே - அசைநிலை. அவையே தானே என்னும் ஏகாரமிரண்டனுள், முன்னது எஞ்சாமைப் பொருளிலும் பின்னது பிரிநிலைப் பொருளிலும் வந்தன. முன் சூத்திரம் இறைவன் உலகத்திற்கு அபின்ன நிமித்த வுபாதான காரணனாயிருக்கின்றானென ‘அந்தமாதி’ என்பதனால் கூறியதை இச்சூத்திரம் ‘அவையே தானேயாய்’ என்பதனால் வற்புறுத்திக் கூறினமையின், இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணனாகமாத்திர மிருக்கின்றானென்று கூறுவாரது கூற்று மறுக்கப்பட்டவாறு காண்க.

கடத்திற்கு நிமித்த காரணமாக மாத்திரமுள்ள குயவன் அக்கடவடிவமாக விருத்தல் கூடுமோ? அஃது அப்பிரசித்தமாமன்றோ? இறைவன் குயவன்போல உலகத்திற்கு நிமித்த காரணமாக மாத்திர மிருப்பானாயின், அவனவ்வுலக வடிவமாக விருத்தல் கூடுமோ? அஃது ஒருவாற்றானுங் கூடாதன்றோ? இதனால், இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணமாகமாத்திர மிருக்கின்றான்; அவ்வுலகமாயு மிருக்கின்றானென்று கூறுவார் கூற்று “எழுத்தறிவில்லான் இலக்கண நிறைகடல்”; “பகையியல் பாயிலி படைக்கை மறவன்” என்னும் பிரயோகம் போல்வதாமென்க.

காலம் தன் காரியமனைத்திற்கும் நிமித்த காரணமாக விருந்து அவற்றோடு கூடியிருத்தல் போல, இறைவன்

தன்காரியமாயஉலகமனைத்திற்கும் நிமித்த காரணமாகவிருந்து அவற்ரோடு கூடியிருக்கின்ருன்; அதனுல், 'அவையே தானேயாய்' என்று கூறப்பட்டதெனின், காலம் தனது காரியமனைத்திலும் கூடியிருப்பினும், எவ்வாற்ருனும் அவை யாவதின்ரும்; அங்ஙனமே, இறைவனும் தனது காரியமனைத்திலும் கூடியிருப்பினும், எவ்வாற்ருனும் அவையாகா னென்க. இதனுல், காரியவடிவமாக விருப்பது முதற் காரணமேயன்றி நிமித்த காரணமன்ருமென்பது நன்கு விளங்குவதாம். கடம் தன் நிமித்த காரணமாய குயவன் வடிவமாகாது தன் முதற் காரணமாய மண்வடிவமாக விருப்பதுணர்ந்தார்க்கு இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணமாகவிருக்கின்ருன்; அவ்வுலக வடிவமாகவு மிருக்கின்ருனென்று கூறுவார் கூற்று, பொருந்து மாற்ரோடு (யுக்தியோடு) பொருந்துவதன்ருமென்பது மாறுபாடின்றி விளங்குவதாம்.

காலமென்பது வியவகாரத்தின் பொருட்டு நம்மனோர் கற்பித்துக்கொண்ட ஒரு பதார்த்தமன்றி, குயவன் முதலாயினோர்போல ஒரு பொருளன்ரும்; ஆகவே, இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணமாகமாத்திர மிருக்கின்ருனென்பதற்குக் காலத்தை யுவமையாகக் கூறுதல் பொருந்தாது. காலத்தைக் கடம்-படம் போல ஒரு பொருளாகக்கொண்டு அது தனது காரியத்திற்கு நிமித்த காரணமாக விருக்கின்றதெனக் கொண்டாலும், அஃது இறைவன் உலகத்திற்கு

முதற் காரணனும் நிமித்த காரணனுயு மிருக்கின்றானென் பதற்கும் உவமையாவதாம். அது காலம் தனது காரிய மாய லைசயோகத்திற்குத் தானே முதற்காரணமாயும் நிமித்த காரணமாயு மிருத்தல்போல, இறைவன் தனது காரியமாய வுலகத்திற்குத் தானே முதற்காரணமாயும் நிமித்த காரண மாயு மிருக்கின்றானென்பதாம். காலத்தின் சொரூபத்தை நன்காராய்ந்து நோக்குமிடத்து அது தன்னை மறைத்த பந்த மென்னும் அஞ்ஞானமாமென்பது பெறப்படுவதாம். சேத னத்தோடு (சிவத்தோடு) கூடியுள்ள அஞ்ஞானம் சர்வ காரி யங்களு முண்டாதற்குக் காரணமாயிருத்தல் பற்றி, அது கால மென்னும் பெயரால் கூறப்படுகின்றது. மாயையோடு கூடிய சிவம் உலகத்திற்குக் காரணமாக விருக்கின்றதென் புழி,அதற்கு மாயை * பரிணாமியுபாதான காரணமாம்; சிவம் விவர்த்த உபாதான காரணமாமெனக் கொள்ளல் வேண்டும்; உலகத்திற்கு † விவர்த்த உபாதான காரணமாகவுள்ள சிவம் அதற்கு நிமித்த காரணமாகவு மிருக்கின்றதென்றும் கொள் ளல் வேண்டும். சொப்பனங் காண்பவனது அஞ்ஞானம்

---

* பால் தயிராகுமிடத்து, தயிருக்குப் பால் பரிணாமி உபாதான காரணமாம்; பால்திரிந்து தயிராதல் காண்க.

† கயிற்றிற்பாம்பு தோன்றுமிடத்து, பாம்பிற்குக் கயிறு விவர்த்த உபாதான காரணமாம்; கயிறு திரியாது அதனிடத் துப் பாம்பு தோன்றுதல் காண்க.

அதற்குப் பரிணாமியுபாதான காரணமாகவும் அவன் விவர்த்த வுபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருத்தல் போல, சிவத்தினது அஞ்ஞானம் உலகத்திற்குப் பரிணாமியுபாதான காரணமாகவும் சிவம் விவர்த்த வுபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கின்றதென்பது இங்குணர்தற் பாலதாம். "காலமோ அவித்தையே; அதுவே சர்வத்திற்கும் ஆதாரமாயிருத்தலால்" என்று சித்தாந்தபிந்துகூறுவது கவனிக் கப்படுமாயின், காலமென்னுஞ் சொல் அவித்தையின் பரியாயப் பெயர்களுள் ஒன்றுமென்பது நன்கு விளங்குவதாம்; விளங்கவே, இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணமாக மாத்திர மிருக்கின்றானென்பதைச் சாதிக்கக் காலத்தை உவமானமாகக் கூறுவது பொருந்தாதென்பது பெறப்படுவதாம்.

"அந்தச் சீவன் கருமத்தைச் செய்கின்றான்; பலத்தை யிச்சிக்கின்றான்; அந்தச் சீவனது கருமானுசாரமாக அவன் உயர்வு தாழ்வாய போகங்களை யனுபவித்தற் பொருட்டு ஈசுவரன் சிருஷ்டி செய்கின்றான்; ஆகையால், ஈசுவரனிடத்து விஷம திருஷ்டியும் குரூரத்தன்மையு மில்லையாம். எல்லா

---

உபாதான காரணத்திற்கு (பாலிற்கு)ச் சமான சுபாவ முடைய வேற்றுச்சொரூபம் (தயிர்) பரிணாம மெனப்படும்.

அதிஷ்டானத்திற்கு (கயிற்றிற்கு) விபரீதமான சுபாவ முடைய வேற்றுச்சொரூபம் (பாம்பு) விவர்த்தமெனப்படும்

வற்றிற்கும் முதலான சிருஷ்டிக்குமுன் கருமமில்லை; பிரதம சிருஷ்டியில், உயர்வு தாழ்வான சரீரங்களையும் போகங்களை யும் ஈசுவரன் சிருஷ்டிக்கின்முன்; ஆதலால், ஈசுவரனுக்கு விஷமசிருஷ்டி யுண்டென்று ஒருவன் கூறுவானுயின், அது பொருந்தாது; ஏனெனின், சம்சாரம் அநாதி. உத்தரோத்தர சிருஷ்டிக்குப் பூர்வ பூர்வசிருஷ்டியின் கருமம் காரணமாம். எல்லாவற்றிற்கு முதலில் யாதொரு சிருஷ்டியுமில்லை; ஆத லால், ஈசுவரனிடத்துத் தோஷமின்று'' என்று விசாரசாகரம் ஐந்தாவது தரங்கம் கூறுவது இச்சூத்திரப் பொருளை விளக் குவதாக விருப்பதுணர்க. இதனுல், இறைவன் செங்கோன் மன்னனைப்போலப் பாரபட்சமின்றி, உலகத்தைச் சீவர்களது கருமங் காரணமாகப் படைத்தளித் தழித்து வருகின்ற னென்பது நன்கு விளங்குவதாம்.

இறைவனே உலகெலா மாயின், அவன் அவள் அது என்பனவற்றுள் ஒவ்வொன்றும் அவனே யாதல் வேண்டு மன்றோ? அங்ஙனமாயின், மலமூத்திர முதலியனவும் அவனே யாதல் வேண்டும்; அஃதெவ்வாறு பொருந்துவதா மெனின், இவ்வாறு வினவுவது பொருத்தமற்ற வினவாம். அது "கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ, தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ, வேறோர் பரிசிங் கொன் றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கின், தேறும் வகை யென் சிவலோகா திகைத்தாற் றேற்ற வேண்டாவோ" என்

றும், "இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று, நின்றநின் றன்மை நினைப்பற நினைந் தே னீயலாற் பிறிதுமற் றின்மை, சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறைசிவனே, ஒன்று நீயல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற் பாரே" என்றும் மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளி யிருப்பதால் நன்கு விளங்குவதாம்.

சொப்பனங் காண்பவனிடத்துத் தோன்றும் பொருள் கள் அவனுக்கு வேறாகத் தோன்றினும், உண்மையில் அவை அவனுக்கு வேறாவன வன்றாமன்றோ? அங்ஙனமே, இறைவ னிடத்துத் தோன்றும் உலகமும் அவனுக்கு வேறாகத் தோன் றினும் உண்மையில் அஃது அவனுக்கு வேறாவதன்றா மென்ப துணர்ந்தார்க்கு இறைவன் மலமூத்திர முதலியன வாக விருந்தாலும், உண்மையில் அவன் அவையாகா திருக் கின்றானென்பது நன்கு விளங்குவதாம். சொப்பனப் பொருள் களுள் ஒவ்வொன்றும், அதனை யுடையானுக்கு வேறாக உண்மைநோக்கி லில்லாமைபோல,இவ்வுலகப் பொருள்களுள் ஒவ்வொன்றும்இதனை யுடையஇறைவனுக்கு வேறாகஉண்மை நோக்கி லில்லையாம்; இதனால், உலகம் இறைவனுக்கு வேறா கத் தோன்றுமாயினும், வேறாகாமலே யிருக்கின்ற தென்பது பெறப்படுவதாம். இச் சித்தாந்தத்தையே இச் சூத்திரம் 'அவையே தானேயாய்' என்று கூறி நிலைபெறச் செய்த,

தென்க. உலகம் இறைவனுக்கு வேறாகச் சத்தியமாயிருக்கு மாயின், அவனுக்குப் பூரணத்தன்மை யொருவாற்றானும் பொருந்தாதாம்; கடத்திற்கு வேறாகவிருக்கும் படத்திற்குப் பூரணத்தன்மை பொருந்துவ தாமோ? ஒருவாற்றானும் பொருந்தா தன்றோ? அங்ஙனமே, இறைவனுக்கும் பூரணத் தன்மை யொருவாற்றானும் பொருந்தாதாம். இது சூதசங் கிதை "நிருமல சிவன்றன் மாயையாற் கஞப்போ னிருமிக் கப் பட்டன வெல்லாம், மருவுகா ரியங்கா ரணத்திற்கு வேறா காமையின் மாயைரூ பந்தான், பெருகுமா யையுமற் றதிட் டான மாகும் பிரமத்தின் வேறான தன்று, குருபா னருள் கைக் கொண்டுமுக் குறும்புங் கொன்றுயர்ந் தோங்கிய முனி வீர்" என்றும், விவேக சூடாமணி "சகமிது மெய்யா மாகிற் சத்தியப் பிரமத் திற்குப், புகல்பரி பூர ணத்துவம் போயிடும் வேதத் திற்கு, மிகவுமப் பிரமா ணத்வ மேவிடும் பாசி வற்கு, மிகலசத் தியவா தித்வ மெய்திடு மிவைநன் றன்றே" என் றும் கூறுவதால் செவ்விதாக விளங்குவதாம். கடமும் படமும் உண்மை நோக்கில் வெவ்வேறாக விருத்தல்போல, இறை வனும் உலகமும் உண்மை நோக்கில் வெவ்வேறாக விருக்கு மாயின், கடமும் படமும் கண்டமாயும் காரியமாயு மிருத்தல் போல, உலகமேயன்றி இறைவனும் கண்டமாயும் காரியமாயு மிருத்தல் வேண்டுமென்க. இறைவன் கண்டமாயும் காரிய மாயு மிருக்கின்றா னென்பது எவ்வாற்றாலேனும் பொருந் துவ தாமோ? ஒருவாற்றானும் பொருந்துவதன்றா மென்க.

இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணமாக மாத்திர மிருக்கின்றான்; சீவர்கள் உலகப் பொருள்களுள் ஒரு பகுதியாக விருக்கின்றனர்;இங்ஙனமாக, இறைவனே உலகெலாமா யிருக்கின்றா னென்பது எங்ஙனமங்கீகார மாமெனின், இதற்கு விடை சொப்பன வியவகாரத்தைச் சிறிது கவனித்து நோக்கின், எளிதிற் பெறப்படுவதா மென்க. சொப்பன வுலகத்தில் ஒருவன் மகிழ்வடைகின்றான்; மற்றொருவன் வாட்ட மடைகின்றான்; இவ்விருவரும், அச்சொப்பனத்தைக் காண்பானுக்கு வேறாக விருப்பதில்லையாம்; ஆனால், அவர்களது மகிழ்ச்சியும் வாட்டமும் அவனுக்கு வருவதில்லையாம்; அங்ஙனமே, இறைவனும் உயிர்களுமா மென்க.

இறைவன் அவிச்சையில் தனது பிரதிபிம்பமாய் அநாதியாயுள்ள சீவர்களது கர்மபரிபாகத்தை யனுசரித்து, தனது நியம சத்தியினால் தன்னினின்றும் உலகத்தை முன்போலத் தொடர்ச்சியாகப் படைத்தளித் தழித்து வருவதால், உலகம் முன்போலத் தன்காரணத்தில் தோன்றிநின் றழிந்து வருவதா யிருக்கின்றது; சீவர்கள் தமது யதார்த்த சொரூபத்தைச் சிவசொரூபமாந் தேசிகாருளால் உள்ளவாறுணர்ந்து உணர்ந்தவா றிருத்தலைப் பெறுதவளவும் போதலாகிய இறத்தலையும் வருதலாகிய பிறத்தலையு முடையவரா யிருக்கின்றனர். இறத்தலாவது சீவன் தனக்குக் கருமவயத்தாற் கிடைத்த உடம்பைவிட்டு நீங்குதலாம்; பிறத்தலாவது அவன் தனக்குக் கருமவயத்தாற் கிடைத்த பிறிதோருடம்போடு கூடுதலாம்.

தருக்கபரிபாஷை "பிரேத்தியபாவம் மீண்டும் பிறத்தல்; அஃது ஆன்மா பூர்வ வுடம்பைவிட்டுப் புதியவுடம்போடு கூடுதல்" என்று கூறுவதிங் குணர்தற்பாற்றும். சீவன் தன்னுடம்பைவிட்டு நீங்கும்போது அடுத்த வினைக்கேற்றவாறு தான் விரும்பியபடி ஒருடம்பைப் பெறுகின்றான்; அவன் அவ்வுடம்பு வருதற்குரிய காரணத்தை யொழித்தற் பொருட்டே உலகம் முன்போலத் தொடர்ச்சியாக இறைவனால் ஆக்கியளித் தழித்து வரப்படுகின்றது. "அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்று தமிழ்மறை கூறுவதாலும் அதனது (பரிமேலழகரது) உரையாலும் பிறப்பின் காரணம் இன்னதென்பது நன்கு விளங்குவதாம். சீவர்க்குக் காரணவுடம்பு காரியவுடம்பென இருவகை யுடம்புண்டு; அவற்றுள், காரணவுடம்பு தன்னை மறைத்த பந்தமென்னும் அஞ்ஞானமாம்; காரியவுடம்பு : உருவுடம்பு அருவுடம்பென இருவகைத்தாம். உருவுடம்பு : தோல் - இரத்தம் - இறைச்சி-மேதை - எலும்பு- மச்சை - சுவேதநீரென்னும் எழுவகைத் தாதுக்களாலாயதாம்; அருவுடம்பு: பத்துவகை யிந்திரிய வுணர்வோடும், ஐவகை வாயுக்களோடும், காமவினைவிளைவுகளோடுங் கூடிய மனமாம். உருவுடம்பு ஸ்தூல சரீரமென்றும், அருவுடம்பு சூட்சும சரீரமென்றும் கூறப்படும். அஞ்ஞானம் இவ்விருவகை யுடம்பும் வருதற்குக் காரணமா யிருத்தல்பற்றி, அது காரண உடம்பு (சரீரம்) என உபசாரமாகக் கூறப்படுகின்றது. தன்னை

(ஆன்மவடிவ சிவத்தை அல்லது சிவவடிவ ஆன்மாவை) மறைத்த பந்தமென்னும் அஞ்ஞானம் சீவர்களுக்குத் தானே (ஆன்மாவே) சிவமென்றுள்ளவா றுணர்தலாகிய தத்துவஞான முண்டாமளவும் கெடாதிருப்பதாம்; இஃதுள்ளவளவும் சீவர்களுக்குப்போதலாகியஇறப்பும் வருதலாகிய பிறப்பும் நிகழ்ந்து கொண்டே யிருப்பனவாம். காரணவுடம்பு அநாதியாய் (உற்பத்தி யில்லாததாய்)த் தத்துவஞானமுள்ளவா றுண்டாமளவும் கெடாதிருப்பதாம்; காரியவுடம்புகளுள் ஒன்றாகிய அருவுடம்பு உலகத்தை இறைவன் படைக்குங் காலத்திற்றோன்றி, அதனையழிக்குங் காலமளவு மிருப்பதாம்; பிறிதொன்றாகிய உருவுடம்பு சீவர்க்கு மரணகாலத் துண்டாகும் அவாவிற் கேற்றவாறு "மீதிற் காணும் பசும்புற் பனியென மின்மினிக்கு ளொளியென வேட்கைகூர், வாதைக் காமினி சஞ்சல நெஞ்செசன மாறிமாறி வருகண் ணிமையென, ஊதைக் காலெறி நீர்மேற் குமிழெனை வும்பர் மேகத்து மின்னென வோர்கணப், போதைக் காயிர மாளிகை கட்டிவீண் போக்கிப் போக்கிப் புதுமா ளிகைசெய்வான் (மோகன்)" என்று பிரபோத சந்திரோதயம் கூறுகின்றவாறும், "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள், எல்லாப் பிறப்பும்" என்று மணிவாசகப்பிரபு கூறுகின்றவாறுமாக மாறிமாறிப் பல்வேறு திறத்ததாகத் தோன்

றித்தோன்றி நின்றழிந்து வருவதாம்; சிவமென்றும் சுத்த சேதனமென்றும் சாஸ்திரங்களால் கூறப்படுகின்ற இறை வனிடத்துக் கயிற்றரவுபோலக் கற்பிதமா யடங்கியுள்ள மாயை சீவர்களது காலகர்ம பரிபாகத்தை யனுசரித்து அவ னிடத் திண்டாகுஞ் சங்கற்பத்தால் தானடங்கியிருப்ப தொழிந்து வெளியாகின்றது; அதனோடு கூடியபோது அவன் ஈசனென்று கூறப்படுகின்றான்; மாயை அநாதியாக விருத்த லின் அதன்கண் இறைவனது * பிரதிபிம்ப வடிவராயுள்ள

* "விவரணமதத்தில் ஜீவேசுவரர்களுக்கு உபாதி ஒரே அஞ்ஞானமாம்; ஆதலால், இவ்விருவரும் அற்பஞ்ஞர்களா யிருத்தல்வேண்டும். அங்ஙனமாயினும், எந்த உபாதியில் பிரதி பிம்ப முண்டாகின்றதோ அதன் சுபாவம் இஃதாம். உபாதி பிரதிபிம்பத்தில் தன் தோஷத்தை யுண்டுபண்ணுகின்றது; பிம்பத்தி லுண்டுபண்ணுகின்ற தில்லை. கண்ணாடியாகிய உபா தியில் முகத்தின் பிரதிபிம்ப முண்டாகின்றது; கழுத்தின்மே லிருக்கிற முகம் பிம்பமாம். அங்குக் கண்ணாடியாகிய உபாதி யின் பொன்மை - கருமை - சிறுமை முதலிய பலதோஷங் கள் பிரதிபிம்பத்தில் தோற்றுகின்றன; கழுத்தின்மே லிருக் கும் பிம்பத்தில் தோற்றுகின்றதில்லை; அதுபோல, கண்ணாடி ஸ்தானத்து அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்ப ரூபமான ஜீவ னிடத்தில் அஞ்ஞானத்தா லுண்டான அற்பஞ்ஞத் தன்மை முதலிய தோஷங்க ளிருக்கின்றன; பிம்பரூப ஈசுவரனிடத் தில் தோஷங்களில்லை. ஆதலால், ஈசுவரனிடத்தில் சர்வஞ் ஞத் தன்மை முதலியவை இருக்கின்றன; ஜீவனிடத்தில் அற்பஞ்ஞத் தன்மை முதலியவை யிருக்கின்றன" என்று விசாரசாகரம் ஆறுவது தரங்கம் கூறுவதிங் கூன்றி யுணர் தற் பாலதாம்.

ஜீவர்களும் அநாதியாக விருக்கின்றனர்; அவர்களது கர்ம பரி பாகத்தை யநுசரித்து, இறைவன் உலகத்தை முன்போலப் படைத்தளித் தழித்து வருகின்றானென்பது வேதாகமங் களின் சித்தாந்தமாம். இறைவனது பிரதிபிம்பமாயுள்ள சீவர் கள் போதல் வருதலாகிய காரியத்தைச் செய்வதெவ்வாறு மெனின், அது பரமசிவனது பிரதிபிம்பமாயுள்ள சுந்தர மூர்த்தி சுவாமிகள் போதல் வருதலாகிய காரியத்தைச் செய் தாற்போல்வதா மென்க. ஜீவர்களுக்குப் பிறப்புண்டாதல் சொப்பன வுலகத்தில் ஒருவனுக்கு ஒருடம்புண்டாதல்போல் வதாம்; அவர்களுக்கு இறப்புண்டாதல் அவனுக்கு அவ்வுடம்பு நீங்குதல்போல்வதாம். யோகிகள் பரகாயப் பிரவேசஞ் செய்தலும், அரவு தன்தோலை யுரித்துவிடுதலும் ஜீவர்க்குப் பிறப்பிறப் புண்டெனற்கு முறையே உதாரணமாம். ஜீவர்க் குப் பிறப்புண்டாதற்குக் காரணம் கருமமாம்; அஃதுண்டாதற் குக் காரணம் விருப்பு வெறுப்புக்களாம்; அவையுண்டாதற் குக் காரணம் "யானெனதென்னும் செருக்கு" என்னும் அபி மானமாம்; அஃதுண்டாதற்குக் காரணம் அவிவேகமாம்; அஃதுண்டாதற்குக் காரணம் அஞ்ஞானமாம்; அஃதநாதி யாக விருப்பதாம். அஃதநாதியாக விருக்கின்ற தென்ப தற்குச் சான்று அகம் (நான்) அஞ்ஞானி என்னும் அனு பவமே யாம். ஜீவர்கள் அஞ்ஞான முள்ளவளவும் அவி வேக முதலியவற்றை முன்னிட்டு நல்வினை தீவினை களைச் செய்து வருகின்றனர்; அவையே அவர்களது பிறப்

பிறப்பிற்கு நேர்காரணமாக விருக்கின்றன; அதனால், சீவர்கள் 'இருவினையின் போக்குவரவு புரிய' என்று கூறப்பட்டது. இச்சூத்திரம் 'போக்குவரவு புரிய' என்று கூறியது வாயிலாக அவையுண்டாதற்கு மூலகாரணமாக ஒன்றுண்டென்றும் கூறியதா மென்க. அது மாயையாம். மாயை - அவித்தை - அவிச்சை - அஞ்ஞானம் - பாசம் என்பன ஒருபொருட் கிளவிகளாம். பிறப்பிறப்பிற்கு மூலகாரணம் மாயை யென்பது "பிறப்பதும் பாசத் தாலே பிணிப்பதும் பாசத் தாலே, இறப்பதும் பாசத் தாலே யிளைப்பதும் பாசத் தாலே, மறப்பதும் பாசத் தாலே மயக்கமும் பாசத் தாலே, துறப்பதும் பாசத் தாலே தொழில்களும் பாசத் தாலே" என்று சிவாகமார்த்த தரிசனம் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம். சீவர்களது கருமம் சஞ்சிதம்-ஆகாமியம் - பிராரத்தமென மூவகைத்தாம்; அவற்றுள், சென்ற ஜன்மங்களிற் செய்யப்பட்டுப் பயனை ஆரம்பஞ் செய்யாதுள்ள கருமம் சஞ்சிதமாம்; இந்த வர்த்தமான (தற்காலத்துள்ள) ஜன்மத்திற் செய்யப்படும் (எதிர்காலத்துப் பயனைக் கொடுப்பதாகிய) கருமம் ஆகாமியமாம்; சென்ற ஜன்மங்களிற் செய்யப்பட்டு இந்த வர்த்தமான ஜன்மத்திற்குக் காரணமாயுள்ள கருமம் பிராரத்தமாம். இம் மூவகைக் கருமங்களில் ஆகாமியம் பயனை ஆரம்பஞ் செய்யாது அந்தக்கரணத்தை உபாதியாகவுடைய சாட்சியின் (ஆத்மாவின்)கண் கற்பிதமாயுள்ள அஞ்ஞானத்தின் ஆவரண வடிவக் களஞ்சியத்தி லிருக்கும்போது சஞ்சிதமென்று கூறப்

படுகின்றது; ஆகாமியம் (அகங்காரத்திற்குச் சாட்சியினே டுள்ள தாதாத்மிய மென்னும்) பிரமஜ தாதாத்மியத்தி லிருப் பதாம்; பிராரத்தம் அஞ்ஞானத்தின் விட்சேப சத்திவடிவ ஆசிரயத்தி லிருப்பதாம். ஆவரண விட்சேப சத்திகளை யுடைய அநாதிபாவரூப பதார்த்தம் மாயையாம். ஆவரண சத்தி மறைப்பைச் செய்யும் சத்தியாம்; விட்சேபசத்தி தோற்றத்தைச் செய்யும் சத்தியாம்.

சின்மாத்திரமாயுள்ள சிவம் குணசகித மன்றாம் ; அது சந்திரனிடத்துக் கற்பிதமாயுள்ள களங்கம்போல, தன்னிடத் துக் கற்பிதமாயுள்ள மாயையோடு கூடியிருக்கின்ற தென் னும் வியவகாரம் நிகழும்போது சிவனென்னும் திருநாமத்தை யேற்று ஆறுகோடி மாயா சத்திகளை யுடையதென்று கூறப் படுகின்றது; அச் சத்திகளுள், நியமசத்தி (நியாமகசத்தி அஃதாவது நியமிக்கும் வல்லமை) யென்பதும் ஒன்றாம்; சத்தி சத்தனுக்கு வேறாகவிருப்ப தன்றாகலின், அது சிவ னிடத்துச் சமவாய (ஒற்றுமைச்) சம்பந்தமாக விருக்கின் றது; அஃதொரு தனிப்பொரு ளன்றென்பதை யுணர்த்த நீக்கமின்றி நிற்கும் ஆணையின் என்று கூறப்பட்ட தென்க. சமவாய சம்பந்தம் - தாதாத்மிய சம்பந்தம் - நீக்கமின்றி நிற்றலென்பன ஒருபொருட் கிளவிகளாம்.

இச்சூத்திரம் 'அவையே தானாய்' என்பதனால் அவனவ ளது என்னும் இருதிணைமுக்கூற்றுப் பிரபஞ்சம் இறைவ

னது காரியமாய் (அஃதாவது இறைவனிடத்துத் தோன்றிய தாய்) அவனுக்கு உண்மையில் வேருகாதிருக்கின்ற தென் றும், 'இருவினையின்' என்பதனுல் அவன் பிரபஞ்சமாதற்குக் காரணம் சீவர்களது இருவினை என்றும், நீக்கமின்றி நிற்கும் ஆணையின் என்பதனுல் சித்திரகாரனது சித்திர சக்தி அவ னுக்கு வேருகா திருப்பதுபோல, இறைவனது நியமசத்தி அவனுக்கு வேருகாதிருக்கின்ற தென்றும், 'இருவினையின் போக்குவரவு புரிய' என்பதனுல் இறைவன் சீவர்கள் தமது கருமங்களின் பயனை அனுபவித்தற்பொருட்டு, தன்னிடத்தி னின்றும் பிரபஞ்சத்தைத் தனக்கு வேறுபோல முன்போலப் படைத்தளித் தழித்து வருகின்ருனென்றும் கூறியவாறறிக. இஃதிங்ஙனங் கூறியதனுல், துவைதம் மாயாமாத்திரம் (கற்பி தம்); அத்வைதமே பாமார்த்தம் (யதார்த்தம்) என்னும் சித்தாந் தம் மாறுபாடின்றிப் பெறப்பட்டது. இதனுல், இச்சூத்திரம் "ஏகமேவாத்துவிதம் பிரஹ்மம்" என்னும் சுருதி வாக்கியப் பொருளை விளக்கியவாறு முணர்க. அச்சுருதி வாக்கியம் ஏகம் - ஏவ - அத்துவிதம் - பிரஹ்மம் எனப் பிரிபடுவதாம்; அவற்றுள், ஏகம் என்பதன் பொருள் ஒன்று (ஜீவப் பிரஹ்ம ஐக்கியம்) என்பதாம்; ஏவ என்பதன் பொருள் தேற்றம் (நிச்சயம்) என்பதாம் ; அத்துவிதம் என் பதன் பொருள் இரண்டாவதில்லாத தென்பதாம்; அஃதா வது மாயாப் பிரபஞ்சமாகிய துவைதம் உண்மையிலில்லை யென்பதாம்; பிரஹ்மம் என்பதன் பொருள் சின்மாத்திர

மாயுள்ள சிவமென்பதாம். இவற்றுள், ஏகமென்பது சுவகத பேதமும், ஏவ என்பது சஜாதீய பேதமும், அத்துவிதமென்பது விஜாதீய பேதமும் சிவத்திற்கில்லை யென்பதை விளக்குவனவாம். இதனால், உண்மையில் உள்ளதென்பது சிவமே; இல்லதென்பது மாயாப் பிரபஞ்சமே யென்பது பெறப்படுவதாம்.

(1) ஒரு விருக்ஷத்திற்கு அதன் இலை பூ முதலியன வேறாயிருத்தல் போல்வது சுவகத பேதமாம்;

(2) ஒரு விருக்ஷத்திற்கு அதுபோன்ற மற்றொரு விருட்சம் வேறாயிருத்தல் போல்வது ஸஜாதீய பேதமாம்;

(3) நீர்க்கு மாறாக நெருப்பிருத்தல் போல்வது விஜாதீய பேதமாம்.

"ஏகமேவாத்துவிதம் பிரஹ்மம்" என்பதன் திரண்ட பொருள் அவயவமில்லாதும், தன்போன்ற தில்லாதும், தனக்கு மாறான தில்லாதுமுள்ள பொருளே சிவமென்பதாம். பிரஹ்மத்தைச் சுருதி ஏகமென்று கூறுவதால் அஃது ஏகமேயாம்; அதற்கன்னியமாக ஒன்று உண்மையாக விருத்தல் கூடாதோ வென்னும் ஆசங்கையைப் பரிகரித்தற் பொருட்டே, பிரஹ்மத்தை ஏகமென்று கூறிய சுருதி அதனோடு நில்லாது, அதனை அத்துவிதமென்றுங் கூறியதென்க. பிரஹ்மத்திற்கு ஏகமென்பது விதிமுக விசேஷணமாம்; அத்துவிதமென்பது மறைமுக விசேஷணமாம். அத்து

விதம் என்பது ந+அவிதம் எனப் பிரிபடுவதாம். இவற்றுள், ந என்பதன் நகரஒற்று (ந்) "நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வருநகரஞ், சார்ந்த துடலாயிற் றன்னுடல்போம்" என்னும் இலக்கண நூல் விதிப்படி கெட்டுப் போவதாம்; போகவே, அ என நிற்பதாம். இந்த நகரம் இங்கு இன்மைப்பொரு ளுணர்த்துதற்கண் வந்தது. சிலர் எண்ணுப் பெயர்மேல்வந்த நகரம்அன்மைப்பொருளை யுணர்த்துவதன்றி இன்மைப் பொருளையும், மறுதலைப் பொருளையும் உணர்த்தாதெனக் கூறுகின்றனர். அவர் கருத்து, அவிதம் என்னும் எண்ணுப்பெயர்மேல் வந்த நகரம் அன்மைப் பொருளை யுணர்த்துவதன்றி இன்மைப் பொருளையும் மறுதலைப்பொருளையும் உணர்த்தாதென்பதாம். அவர், "அஷ்டாநவம் (எட்டில் ஒன்பதில்லை)" என்னும் பிரயோகத்தில் நவம் என்னும் எண்ணுப்பெயர் மேல்வந்த நகரம் இன்மைப் பொருளை யுணர்த்துவதறியார் போலும்! அபஞ்சீகரணம் என்புழியும் எண்ணுப்பெயர்மேல் வந்தநகரம் இன்மைப்பொருளை யுணர்த்துவதறிக. எண்ணுப்பெயர்மேல் வந்த நகரம் இன்மைப் பொருளை யுணர்த்தாதென்பது நியமமாயின், "சதேநஸஹஸ்ரம்(நூற்றில் ஆயிரமில்லை)";"ஸஹஸ்ரேநாயுதம் (ஆயிரத்தில் பதினாயிரமில்லை)"; "ஒன்றுளதாயினும் இரண்டில்லை" என்றற்றொடக்கத்துப் பிரயோகங்கள் நிகழுதல் கூடா; நிகழுதலின், எண்ணுப்பெயர்மேல் வந்த நகரம் அன்மைப் பொருளையே யுணர்த்தும்; வேறு பொருளை யுணர்த்தாதென்பது

பொருந்தா வுரையாமென்க. அத்துவிதம் என்பதனுள் நகரம் "அநேகம் (ஒன்றல்ல)" என்பதுபோல அன்மைப் பொருளையே யுணர்த்துமாயின், அது துவிதமல்ல (இரண்டல்ல) என்னும் மயக்கப்பொருளையே யுணர்த்துவதாம்; என்னை? இரண்டல்ல என்பது ஒன்று, மூன்று, நான்கு முதலியவற்றை யுணர்த்துவதாக விருத்தலினென்க.

"சுருதியே மித்யாத்யாசத்தை நீக்கத் 'துவைதமேயில்லை' யென்றும், 'ஏகமேவாத்வைதம் பிரஹ்மம்' என்றும் கூறுவதால், ஈசுவரனும் சீவர்களும் பரமாணு பரியந்தமான ஜகத்தும் பிரஹ்மமாத்திரமே" என விவேகசூடாமணி கூறுவதும்,

"சுருதியினு ளேகமே வாத்துவித மென்னுஞ் சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்லதனுக் கயிக்கம், அரிதிலுணரேவவெனு மிடைசொற்குத் தேற்ற மத்துவித மெனுமொழிக்குத் துவிதவிலக் காகக், கருதுபொருள் வருதலினு லிம்முறையே மாயா கற்பனைகள் கடந்துநிர வயமாகி யென்றும்,திரிதலில்சின் மயமாகு மொருபிரமந் தனக்குத் தெரித்த சுவ கதமுதலா யினமூன்று மிலையே" என்று வேதாந்த சூடாமணி கூறுவதும்,

"துவித மிரண்டாகு மத்துவித மொன்றாகும்
துவிதமயல் கெட்டோய் துணி"
"அத்து விதத்திற் கருத்தம் பலவென்னும்
சிற்றறிவு கொண்டுசில கீழ்"

என்று சித்தாந்த தரிசனம் கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம்.

இறைவன் சீவர்களது கருமங் காரணமாக உலகைத் தன்னிடத்தினின்றும் படைத்தளித் தழித்து வருகின்றானென்பதைக் கீழ்வரும் பிரமாணங்களும் வலியுறச் செய்வனவாம்:—

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

"உரைசேரு மெண்பத்து நான்குநூ றாயிரமா யோனி பேதம், நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா யங்கங்கே நின்றான்"

"புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய்
நிலனைந்தாய்க் கரண நான்காய்,
அவையவைசேர் பயனுருவா யல்லவுரு வாய்நின்றான்"

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

"தானலா துலகமில்லை சகமலா தடிமையில்லை"
"பின்றானு முன்றானு மானான் றன்னை"
"ஊனாகி யுயிராகி யதனு ணின்ற
வுணர்வாகிப் பிறவனைத்து நீயாய் நின்றாய்"

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

"ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்"

## மாணிக்கவாசக சுவாமிகள்.

"பூதங்க ளைந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனை"

## திருமூலர்.

“தானே விரிசுடர் மூன்றுமொன் றுய்நிற்கும்
தானே யயன்மா லெனநின்று தாபிக்கும்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே”

## சூதசங்கிதை.

“பல்லுயிர்க் கருமத்தின் பகுதிக் கேற்பச்
சொல்பல யோனிக டோறுந் தோற்றமுற்
றல்லலுஞ் சுகமுமிக் கடையும் பல்லுயிர்
புல்லுமா னுடபவம் பொருந்த வற்றாம்”




## ஞான விளக்கம்.

“ஊழா லுடம்புண் டுடம்பால் வினையுண்டு
தாழும் வினையாற் சகமுண்டு”

## தத்துவாநுசந்தானம்.

“உண்டாக வேண்டிய பிராணிகளின் புண்ணிய பாவ கருமங்களோடு கூடிய முற்கூறிய விட்சேப முதலிய சக்திப் பிரதானமான மாயா உபகித ஈஸ்வரன் முதலில் ‘இந்த ஜகத்து இப்போதுண்டாகத் தகுதியாம்’ என்று சங்கற்பித்தான். அச்சங்கற்ப விசிட்ட ஈஸ்வரனிடத்தினின்றும் முதலில் ஆகாயமுண்டாயிற்று ; அதினின்றும் வாயுவுண்டா

யிற்று; அதினின்றும் தேயுவுண்டாயிற்று; அதினின்றும் அப்புவுண்டாயிற்று; அதினின்றும் பிருதிவியுண்டாயிற்று."

## சிவபுராணம் - ஞானசங்கிதை.

"ஒருவிதையிலிருந்து ஒரு விருட்சம் நாநாவிதமான கொம்பு இலை முதலியவற்றோடுண்டாவது போல, இந்தச் சிவபெருமானிடத்திலிருந்து பிரபஞ்சமனைத்தும் தோன்றின. ஜகத்தின் முதலிலும் இறுதியிலும் சிவபெருமானே இருக்கின்றார். சிவபெருமான் ஜகத்திலிருக்கின்றார்; ஜகத்துச் சிவபெருமா னிடத்தி லிருக்கின்றது. நானும் சிவம்; நீயும் சிவம். சிவத்தினுக்கு வேறாக இரண்டாவது பொருளில்லை; அவ்வா றிரண்டாவது பொரு ளிருக்குமென நினைத்தல் அஞ்ஞானமேயன்றி ஞானமாகாது. காரியமான ஜகத்தில் காரணமான சிவபெருமான் வியாபித்திருக்கின்றாராகலின், காரியத்தைச் சகத்தென்றும், காரணத்தைச் சிவமென்றும் அறிதல் வேண்டும். அஞ்ஞானத்தாற் காரண காரியங்கள் பேதமாகக் காணப்படுமன்றி ஞானிகட்குப் பேதமில்லை. சகல ஜகத்தும் சிவமயமேயாம்."

சீவரூப ஆன்மா போக்குவரவு புரிகின்றது (இறப்பும் பிறப்பு மடைகின்றது); இருவினையுடைமையால்; யாது போக்குவரவு புரிவதன்று அது இருவினையுடையதன்று, கடம்போல—என்னும் வியதிரேகி அனுமான வடிவமாக இச் சூத்திரமிருப்பது கவனித்துணர்தற் பாலதாம். 2

## அவதாரிகை.

சரீர இந்திரிய முதலியவற்றிற்கு வேறாய் அவற்றை யறியும் ஆன்மாவொன் றுளதென அனுமான அளவை யாற் கூறல்.

3. உளதில தென்றலி னெனதுட லென்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்
உண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

(இ - ள்.) *மாயா வியந்திர தனுவினுள் - மாயையின் காரியமாய்ச் சூத்திரப் பாவைபோலுள்ள உடம்பின்கண், இலதென்றலின் - (நானென்னு மொருபொருள் உடம்பு முதலியவற்றிற்கு வேறாகவேனும் உடம்பு முதலியனவாக வேனும்) இல்லையென்று கூறும் பொருளொன்றிருத்தலின், ஆன்மா உளது - (அவ்வில்லையென்னும் சூனியத்திற்கு வேறாக) ஆத்மா இருக்கின்றது, எனதுடலென்றலின் - என்னுடைய வுடம்பென்று வேற்றுமை தோன்றக் கூறும் பொருளொன்றிருத்தலின், ஆன்மா உளது - (அவ்வுடம்பினும் வேறாக) ஆத்மா விருக்கின்றது, ஐம்புலனொடுக்க மறிதலின் - (சொப்பனத்தில்) சுரோத்திரம் - துவக்கு - சட்சு - சிங்ஙுவை-கிராணமென்னும் ஐந்திந்திரியங்களின் ஒடுக்கத்தையறியும் பொருளொன்றிருத்தலின், ஆன்மாவுளது - (அவ்விந்திரி*

யங்களுக்கு வேருக) *ஆத்மாவிருக்கின்றது, கண்படில் உண்டி வினை யின்மையின் - (கண்படுதல் அல்லது உறங்குதலென்னும்) சுழுத்தியின்கண் * (பிராணவாயு உயிர்த்திருந்தும்) சுக துக்க அனுபவமும் அதற்கேற்ற வியாபாரமும் (அதற்கு) இல்லாமையால், ஆன்மாவுளது - (அப்பிராணவாயுவிற்கு வேருக) ஆத்மாவிருக்கின்றது, உணர்த்தவுணர்தலின் - (சாக்கிரத்தில் வேதமும் குருவும் நினைவரிய வொருபிரஹ்மம் நீயே யென்று) அறிவிக்க (அதனுல் தன்னைப் பிரஹ்மமாக) அறியும் பொருளொன்றிருத்தலின், ஆன்மாவுளது - (பிரஹ்ம சொரூபமாக) ஆத்மாவிருக்கின்றது, (எ - று).

மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா இலதென்றலினுலும், எனதுடலென்றலினுலும், ஐம்புலனெடுக்க மறிதலினுலும், கண்படில் உண்டிவினை யின்மையினுலும், உணர்த்தவுணர்தலினுலும், தேகேந்திரிய முதலியவற்றிற்கு வேருக ஆன்மாவுளதென்பதுஇச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா உளது என்னுமாத்திரத்தானும் தேகம்வேறு தேகிவேறு என்பன பெறப்படுவனவாம்; வீடும் அதன்கணிருப்பவனும் ஒன்ருகாமை போல,

---

* "காரண மொடுங்க வாயு நிகழ்வென்கொ லென்னி லுடல்காவலாகுமிலதேல்,மரண மடைந்த தென்றுதமர்சுட்டிடாமுன் வளைவாலின் ஞாளிகொளுமே" என்று சசிவஞ்ஞ போதம் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

தேகமும் அதன்கணிருக்கும் தேகியும் ஒன்றுவதில்லையா மென்க. "இன்னது தேகம் தேகி யிவனென வுணர்வான் யாவன், அன்னவன் தன்னைத் தானென் றறிந்தவ ஞகு மென்றார்" என்று கைவல்லிய நவநீதம் கூறுவதிங்குணர்தற் பாற்றும்.

இச்சூத்திரம் *பூட்டுவிற் பொருள்கோளாம்;ஆன்மாவுள தென்றியைந்து நிற்றலின். விளங்குதற்பொருட்டு ஒவ்வோ ரேதுவோடும் ஆன்மாவுளது என்பதுகூட்டியுரைக்கப்பட்டது. உண்டிவினை உம்மைத் தொகை நிலைத் தொடர்; உண்டியும் வினையுமென விரிதலின்.'(சொப்பனத்தில்) ஐம்புலனொடுக்க மறிதலின்' என்பதனுல் சாக்கிரத்தில் அவற்றினொடுங்காமையை ஆத்மா அறிகின்றதென்பது பெறப்படுவதாம்.

'கண்படில் உண்டிவினை யின்மையின்' என்பதனுல் ஆத்மா சுழுத்தியின்கண் தேகேந்திரிய காணங்களின் சம்பந்தமின்றிச் சுகவடிவமாகவே யிருக்கின்றதென்பது குறிப்பாகப் பெறப்படுவதாம்.

'கண்படில் உண்டிவினை யின்மையின்' என்பதன் பொருள்விளக்கம் வருமாறு:—நம்மனோரது உறக்கத்தில் (சுழுத்தியில்) இந்திரிய அந்தக்கரணங்கள்போல ஒடுங்காது

* "எழுவா யிறுதி நிலைமொழி தம்முட், பொருளோடு குடையது பூட்டுவில் லாகும்." என்பது நன்னூல்.

உயிர்த்திருக்கும் பிராணவாயு உண்டியும் வினையுமுடையதா மாயின், ஆத்மாவாம்; அஃது அவையின்றி யிருத்தலின், ஆத்மாவன்றாம். மேலும், உறங்குகின்றவனது உடம்பின் மீது பாம்பேறினும், அதனை அவனது பிராணவாயு அறியா திருத்தல் மிகு பிரசித்தமாமன்றோ? அதனாலும் அஃது ஆத் மாவன்றா மென்க. இதனால், சுழுத்தியில் உண்டியும் வினையு முடைய பொருளொன் றிருக்கின்றதென்பது பெறப்படுவ தாம்; அதுவே ஆத்மாவாம். சுழுத்தியில் ஆத்மாவிற்கு உண்டி அதனது சொரூபசுகமாம்; வினை அது தனது சொரூப ஞானத்தால் அதனை யறிதலாம்; இதனாற்றான், சுழுத்தியி னின்றும் எழுந்தவன் யானென்று மறியாது சுகமாக வுறங்கி னேனென்று கூறுகின்றான். ஒருவன் தான் மானுடனா யிருத்தலைப் பிறிதொரு காரணத்தை யபேட்சியாது தானே அறிதல்போல, சுழுத்தியில் ஆத்மா தான் சுக சொரூபமா யிருத்தலைப் பிறிதொரு காரணத்தை யபேட்சியாது தானே யறிகின்றதென்க.

சுழுத்தியில் இந்திரியமும் அந்தக்கரணமும் தம் காரண மாகிய அவித்தையில் இலயமாய்விடுதலின், அவையங்கில்லை யாம்; ஆகவே, அங்கு ஆத்மா தனது சொரூபசுகத்தை அவற்றை யபேட்சியாது தானே யறிகின்றதென்க.

சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் ஆத்மாவிற்கு உண்டி யும் வினையுமிருத்தல் மிகு பிரசித்தமாம்.

'ஐம்புல னொடுக்க மறிதலின்' என்று கூறப்பட்டதாயி னும் இனம்பற்றிக் கருமேந்திரியங்களின் ஒடுக்கத்தையும் ஆத்மா சொப்பனத்தில் அறிகின்றதென்க- அவை வாக்கு - பாதம் - பாணி - பாயுரு - உபத்தமென்பனவாம். சுரோத் திர முதலியன ஞானேந்திரியங்களாம். இங்கு ஆன்மா சாக் கிரத்தில் ஞானேந்திரிய கருமேந்திரியங்களின் ஒடுங்காமை யையும், சொப்பனத்தில் அவற்றின் ஒடுக்கத்தையும் அறிந்து வருகின்றதென்று கொள்ளல் வேண்டும்.

உடம்பு பொய்யாகச் சூத்திரப் பாவைபோல ஆத்மா வின் சந்நிதானத்திலே இயங்குவதாக விருத்தலின், 'மாயா வியந்திர தனுவினுள்' என்று கூறப்பட்டது. இது "செய் கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச் சிலைமலைமுன் னிரும்புகள்சேட் டிக்கு மாபோல்,செய்கையுஞ்செய் விக்கை யுமற் றிருக்குமென்முன் செடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யும்" என்று கைவல்லிய நவநீதம் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

இறைவனிடத்துக் கயிற்றரவு போலக் கற்பிதமாயுள்ள மாயையின் மயமாயுள்ள வுடம்பு கடபடம் போலப் பொய் யாயிருக்கின்ற தென்க. இது "பொய்யினால் மிடைந்த போர்வை", "பொய்விரா மேனிதன்னைப் பொருளெனக் காலம் போக்கி" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுவதா லும், "இல்லையெனு மாயையி லிட்டனை நீ" என்று அருணை

கிரிநாத சுவாமிகள் கூறுவதாலும், "பொய்யெல்லா மொன்றாய்ப் பொருத்திவைத்த பொய்யுடலை" என்று தாயுமான சுவாமிகள் கூறுவதாலும், பிறவாற்றாலும் நன்கு விளங்குவதாம்.

உலகம் காரியமாயிருத்தலின், அதற்கொரு காரணகர்த்தாவாகிய முதற்கடவுள் இன்றியமையாதிருத்தல் வேண்டும்; அஃது அக் காரணகர்த்தாவாகிய முதற்கடவுளிடத்துத் தோன்றிநின் றழிதற்குக் காரணம் சீவர்களது கருமமாமென முன்னிரண்டு சூத்திரமுங் கூறின; இம்மூன்றாஞ் சூத்திரம் முதற் சூத்திரத்தாலும் இரண்டாஞ் சூத்திரத்தாலும் பெறப்பட்ட ஆன்மாவினுண்மை அதிகாரி புருஷருக்கு ஐயந்திரிபில்லாது தோன்றுதற் பொருட்டு, அனுமான அளவை வாயிலாக ஆன்மாவென்பதொன்று இல்லத்தின்கண் ஒருவனிருத்தல் போல, உடம்பின்கணிருக்கின்றதென்று கூறியதென்க.

தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள அவித்தை அல்லது அந்தக்காரணத்தின் சம்பந்தத்தால் எண்ணிறந்த சீவர்களாகவிருக்கும் ஆத்மாவென்னும் பரியாய நாமமுடைய சிவம் ஒன்றே; அதற்கு வேறாகச் சேதனப்பொருளெவ்வாற்றானுமில்லையென்ப துணர்த்துதற் பொருட்டு உள எனப் பன்மையாற் கூறாது, 'உளது' என ஒருமையாற் கூறப்பட்டதென்க. இதனை "அகமெனு மான்மா பூரண மேக மநேக

விதஞ்சீவர், அகமெனு மந்தக் கரணை பாதிகளள விலை யாத
லினல், சகமுழு துய்துளிர் சந்திர னேகஞ் சலசந் திரர்பல
ராம்,சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டி குடம்பலவால்"
என்றுள்ள திருவாக்கு நன்கு விளக்குவதாம் - நவமணிகளின்
சம்பந்தத்தால் (நவமணிகளில் பிரதிபிம்பித்தமையால்) ஒன்
பது பெண் வடிவமாயினர் உமாதேவியார்; அப்பெண்கள்
பரமசிவனைக் கண்டு மோகித்துக் கருப்பங்கொண்டு ஒன்பது
மக்களைப் பெற்றனரென்று கந்தபுராணங் கூறுவதால், சிவம்
அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் சம்பந்தத்தால் எண்
ணிறந்த சீவர்களாக விருக்கின்றது; அச்சீவர்கள் கருமவயத்தா
லெண்ணிறந்த வியவகாரங்களை யுடையவரா யிருக்கின்றன
ரென்பது மாறுபாடின்றி விளங்குவதா மென்க.

இறைவனுண்மையையும், தன்னுண்மையையும், அவ
னுக்கும் தனக்குமுள்ள வேற்றுமை ஒற்றுமைகளை
யும், வேற்றுமை நீங்கியவிடத்துத் தான் ஒற்றுமை
யாக விளங்குதலையும், ஒற்றுமையாக விளங்கு மிடத்
துப் பிறப்பின் காரணம் ஒளிமுன் னிருள் போலக்
கெடுதலையும், பூர்வபுண்ணியகரும பரிபாகத்தா லறிதற்குரிய
வன் சீவனே; ஆத்மாவின் கற்பித வடிவமாயுள்ள அவன்
தன்னைச் சிவமாகச் சாக்கிராவத்தையில் வேதமும் குருவும்
அறிவிக்கத் தான் உண்மையில் சிவமேயென் றறிதற்குரிய
வனா யிருக்கின்றான்; அவ்வா றறிதலே சமையலுக்குத்

தீயைப்போல முத்திக்கு (பந்தநிவிர்த்திக்கு)ச் சிறந்த சாதன மாம்; அஃதே ஞானசாஸ்திர ஆராய்ச்சியின் பயனும்; அவன் தன்னுண்மை வடிவத்தை யுணர்ந்தவிடத்து ஆத்மாவென்னும் பரியாய நாமமுடைய சிவமாகவே விளங்குகின்றானென்பவற்றை வற்புறுத்துதற் பொருட்டு 'உணர்தலின்' என வாளா கூறாது 'உணர்த்த வுணர்தலின்' என விசேடித்துக் கூறப்பட்டதென்க. 'உணர்த்த வுணர்தலின்' என்ற அளவானே உணர்த்த வுணருதலில்லாத சூனியம்-உடம்பு - இந்திரியம் - பிராணவாயு - அஞ்ஞானம் என்பன ஆத்மா வன்றாமென்பது பெறப்படுமாயினும், அவை யிவையென உணர்தற் பொருட்டு, அவற்றை இலது என்றற் றொடக்கத்தனவற்றால் இச்சூத்திரம் கூறியதென்க. உணர்த்த உணர்தலில்லாத சூன்யம்-உடம்பு - இந்திரியம் - பிராணவாயு - அஞ்ஞானம் என்பன ஆன்மாவன்றென இச்சூத்திரம் கூறியதாயினும், இனம்பற்றி உணர்த்த வுணர்தலில்லாத மனம் - புத்தி - சித்தம் - அகங்கார மென்பனவும் ஆத்மா வன்றெனக் கூறியதாமென்றுங் கொள்ளல்வேண்டுமென்க.

முதற்சூத்திரம் காணப்பட்ட பிரபஞ்சங் காரணமாகக் காணப்படாத இறைவ னுண்மையை யுணர்த்தினாற்போல, இச்சூத்திரம் காணப்பட்ட உடம்பு காரணமாகக் காணப் படாத ஆத்மாவி னுண்மையை யுணர்த்தியதென் றிங்குணர்தல் வேண்டும்.

ஈண்டனுமானம் வருமாறு:—மாயா வியந்திர தனுவினு ளான்மா உளது என்பது பிரதிஞ்ஞை; (1) இலதென்ற லின், (2) எனதுட லென்றலின், (3) ஐம்புலனெடுக்க மறித லின், (4) கண்படில் உண்டிவினை யின்மையின், (5) உணர்த்த வுணர்தலின் என்பன ஏது;

பக்கத்தைத் துணிபொரு ளுடையதாகக் கூறும் வாக்கி யம் பிரதிஞ்ஞா வாக்கியமாம். ஈண்டு 'மாயா வியந்திரதனு' என்பது பக்கமாம்; ஆன்மா என்பது சாத்தியமாம் (துணி பொருளாம்).

இன்னுருபு அல்லது ஆனுருபு ஈருக இலிங்கத்தையறி விக்கும் வாக்கியம் ஏது வாக்கியமாம். இலதென்றலின் முத லிய ஐந்தும் இன்னுருபீருக விருத்தலறிக.

யாண்டு ஆன்மாவில்லை ஆண்டு இலதென்றல் முதலிய வியவகாரம் நிகழ்வதில்லை, கடம்போல என்பது உதாரண வாக்கியமாம்.

இவ்வனுமானம் கேவலவியதிரேகி அனுமானமாம்.

தருக்கநூல் பிழைத்திருக்கு முடம்பு ஆன்மாவுடை யது; பிராணன் முதலியவற்றை யுடைமையான்; யாது ஆன்மா வுடையதன்று, அது பிராணன் முதலியவற்றை யுடையதன்று, எங்ஙனம் குடம்;

இப் பிழைத்திருக்கு முடம்பு அங்ஙனமன்று; ஆகலின், இங்ஙனமன்று என்று கூறுவது மிங்கொட்டி யுணர்தற் பாலதாம்.

இலதென்றலின் முதலிய ஐந்தேதுக்களுள், இலதென்றலின் என்பது சூனியாத்ம வாதியையும், எனதுடலென்றலின் என்பது தேகாத்ம வாதியையும், ஐம்புலனொடுக்க மறிதலின் என்பது இந்திரியாத்ம வாதியையும், கண்படில் உண்டிவினை யின்மையின் என்பது பிராணாத்ம வாதியையும், உணர்த்த வுணர்தலின் என்பது அஞ்ஞானாத்ம வாதியையும் மறுத்து, மாயா வியந்திர தனுவினுளான்மா உளதென்று சாதித்துநின்றன; நிற்கவே, ஒவ்வோரேதுவும் ஒவ்வொரு மதம்பற்றிக் கூறப்பட்டதென்பது விளங்குவதாம். இதனால், சூனியம் ஆத்மாவன்று; தேகம் ஆத்மாவன்று; இந்திரியம் ஆத்மாவன்று; பிராணன் ஆத்மாவன்று; அஞ்ஞானம் ஆத்மாவன்றென்பது பெற்றாம்; இவற்றுள், ஐம்புலனொடுக்க மறிதலி னென்பதனால் சொப்பனத்திலும், கண்படில் உண்டிவினை யின்மையி னென்பதனால் சுழுத்தியிலும், உணர்த்த வுணர்தலி னென்பதனால் சாக்கிரத்திலும் ஆத்மாவுண்டிருக்கின்றதென்பது பெறப்படுவதாம்;படவே,மனமே ஆத்மாவென்பதும், புத்தியே ஆத்மாவென்பதும், சித்தமே ஆத்மாவென்பதும், அகங்காரமே ஆத்மாவென்பதும் மறுக்கப்பட்டன வென்க. மனமுதலியன சுழுத்தியில் இந்திரியங்களைப்போல ஒடுங்கிக்கெடுதல் மிகுபிரசித்தமாம்.

இந்திரிய வொடுக்கமுள்ள காலம் சொப்பனமாம்; அதனோடு அந்தக்கரண வொடுக்கமுமுள்ள காலம் சுழுத்தியாம்; இவ்விரண்டும் ஒடுங்காதுள்ள காலம் சாக்கிரமாம்.

மாத்தியமிக பௌத்தர் சூனியமே ஆத்மாவென்றும், சார்வாகர்களுள் ஒரு சாரார் தேகமே ஆத்மாவென்றும், மற்றொரு சாரார் இந்திரியமே ஆத்மாவென்றும், ஹிரண்யகர்ப்ப உபாசகர் பிராணனே ஆத்மாவென்றும், தார்க்கிகர் மனதின் சம்பந்தமில்லாதபோது ஆத்மா சடமாக (மூடமாக அல்லது அஞ்ஞானவடிவமாக) இருக்கின்றதென்றும், நாரத பாஞ்சராத்திர மதத்தை யநுசரித்தவர் மனமே ஆத்மாவென்றும், விஞ்ஞானவாத பௌத்தர் புத்தியே ஆத்மாவென்றும் கூறுகின்றனர். ஆத்மா இலதென்பது என்தாய் மலடி என்பதுபோல வியாகாத தோஷமுடையதாம்; ஆத்மா இலது என்று கூறுவதற்குக் காரணமாயிருப்பது யாது? அதுவே ஆத்மாவாமென்க. தேகமே ஆத்மாவென்பது எனதுடலென்று கூறுதலால் பொருந்துவதன்றாம்; உடையதும் உடைமையும் ஒன்றாகயாண்டுமின்மையி னென்க; ஒன்றாமாயின், என்மாடு என்பானும் அம்மாடும் ஒன்றாதல் வேண்டும்; அங்ஙனமின்மையின் அது பொருந்துமாற்றோடு பொருந்துவதன்றாம். சொப்பனத்தில் இந்திரியங்களின் ஒடுக்கத்தையும் சுழுத்தியில் அவற்றி னொடுக்கத்தோடு அந்தக்கரணத்தி னொடுக்கத்தையும் அறிவதொன் றிருத்தலின், இந்திரியங்களும் மனமுதலி

யனவும் ஆத்மாவாவ தன்ரும். பிராணவாயு சுழுத்தியவஸ்தை யிலும் ஜடமாகவே யிருத்தலின், அஃதான்மா வாவதன்ரும். சுழுத்தியினின்று மெழுந்த புருஷன் யாதொன்று மறியாது சுகமாக வுறங்கினேனென்று கூறுதலால் ஆத்மா அஞ்ஞான வடிவமுமன்ரு மென்க. இதனால், ஆத்மா உடல்பொறி முத லியவற்றினும் வேருய், அவஸ்தை மூன்றையுமறிவதா யிருப் பதென்பது பெறப்பட்டது. இஃது ஆத்மாவின் தடத்த லட் சணமாம். ஆத்மா தனது கற்பிதமான அவித்தையின் சம்பந் தத்தால் கர்த்தா போக்தாவாக விளங்குதல் அதற்குத் தடத்த லட்சணமா மென்றும், யதார்த்தத்தில் அது யாதொரு தர்மமு மின்றிப் பரமானந்த போத சொரூபமாக விளங்குதல் அதற் குச் சொரூப லட்சணமாமென்று மிங் குணர்தல் வேண்டும்.

சார்வாகருள் ஒருசாரார் தேகாகாரமாகப் பரிணமித்த நான்கு பூதங்களே ஆத்மாவென்றும், மற்ருெரு சாரார் இந்திரியங்கள் தனித்தனியே ஆத்மாவென்றும், இன்னொரு சாரார் இந்திரியங்களின் கூட்டமே ஆத்மாவென்றும், சிலர் மனமே ஆத்மாவென்றும், சிலர் பிராணனே ஆத்மாவென்றும், யோகாசாரர் க்ஷணிக விஞ்ஞானமே ஆத்மாவென்றும், மாத் தியமிகர் சூனியமே ஆத்மாவென்றும், சமணர் ஆத்மா தேகேந் திரிய முதலியவற்றினும் வேருகத் தேக பரிமாண முள்ள தென்றும், தார்க்கிகர் ஆத்மா கர்த்தா - போக்தா - ஜடன் - விபுவென்றும், பூர்வமீமாஞ்சகர் ஆத்மா சித்ஜட வடிவமென்

றும், சாங்கியர் ஆத்மா கர்த்தாவாகாது போக்தாவாய்க் கேவல போதசொரூபமா யிருப்பதென்றும் கூறுகின்றனர். அவர் ஆத்மா அவித்தியா சம்பந்தத்தால் கர்த்திருத்வ போக்திருத்துவ முதலிய தர்மமுடையதாக விளங்குகின்றது; உண்மையில் யாதொரு தர்மமுமின்றிப் பரமானந்த போதசொரூபமாகவே யிருக்கின்றதென்பதைச் சுருதியுக்தி யனுபவவாயிலாக வுணராமையால், ஆத்மா இலது என்றற் றொடக்கத்தனவற்றைக் கூறுவாராயினர்; அதனல், ஜனனமரண நோய்க்கிலக்காகி வருகின்றனர்; அவர்க்கு நல்லுபதேசஞ் செய்தற்பொருட்டு, இச்சூத்திரம் மிகு முக்கியமாகவுள்ள சூன்யாத்ம வாத முதலியவற்றை மறுத்துக்கூறி, ஆத்மா அவஸ்தாத்திரய சாட்சியாய்ச் சச்சிதானந்த சங்கர வடிவமா யிருக்கின்றதென்று அதன் சொரூபத்தை நன்கு விளக்கிய தென்க.

ஆத்மா அவஸ்தாத்திரய சாட்சியாய்ச் சச்சிதானந்த சங்கரவடிவமா யிருக்கின்றதென்பதை உள்ளவாறுணர்ந்து, உணர்ந்தவா றிருப்பவர்க்கன்றி மற்றவர்க்கு ஜனனமரண நோய் நீங்காதென்பது

> " ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
> பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

என்று திருக்குறள் கூறுவதாலும்,

> " சச்சி தானந்த சங்கர னகவே
> அச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்

துச்ச மாந்துயர் தோன்மலி யாக்கையை
இச்சி யானதை யானென வெண்ணியே."

" தன்னைச் சிவமென் றறிந்தவனே
யறிந்தான் றன்னை யுண்மையாத்
தன்னைச் சிவமென் றறியாதா
னறியா னென்றுந் தன்னுண்மை
தன்னைச் சிவமென் றென்றறிவ
னன்றே பாசந் தனைநீப்பன்
தன்னைச் சிவமென் றறியாதான்
றனக்குப் பிறப்பே துணையாகும்."

என்று பிரபுலிங்கலீலை கூறுவதாலும் நன்கு விளங்குவதா மென்க.

'ஐம்புல னொடுக்க மறிதலின்' என்பதனால் சொப்பனத்திலும், 'கண்படில் உண்டிவினை யின்மையின்' என்பதனால் சுழுத்தியிலும்,'உணர்த்த வுணர்தலின்' என்பதனால் சாக்கிரத்திலு முளதென்று பெறப்பட்ட ஆன்மா 'இலதென்றலின்' என்பதனால் சத்ரூபமாயும், 'ஐம்புல னொடுக்க மறிதலின்' என்பதனால் சித்ரூபமாயும், 'கண்படில் உண்டிவினையின்மையின்' என்பதனால் ஆனந்த ரூபமாயும், 'உணர்த்த வுணர்தலின்' என்பதனால் சிவரூபமாயு மிருக்கின்றதென்பது பெறப்படுவதாம். இதனால், சாக்கிர முதலிய அவஸ்தைகளுக்கு வேறாய், சச்சிதாநந்த சங்கர வடிவமாக ஆத்மா இருக்கின்ற தென்பது

தெளிவாக விளங்குவதாம். ஆத்மா ஜாக்கிர முதலிய அவஸ்தைகளுக்கு வேறாக விருக்கின்ற தென்பதனால், அது சாக்கிராவஸ்தை நிகழ்தற்குரிய ஸ்தூல சரீரத்திற்கும், சொப்பனாவஸ்தை நிகழ்தற்குரிய சூட்சும சரீரத்திற்கும், சுழுத்தியவஸ்தை நிகழ்தற்குரிய காரணசரீர மென்னும் அஞ்ஞானத்திற்கும் வேறாக விருக்கின்ற தென்பது விளங்குவதாம். ஆத்மா ஸ்தூலமுதலிய சரீரங்களுக்கு வேறாக விருக்கின்ற தென்பதனால், அஃது அச்சரீரங்களுக்குள் அடங்கிய பஞ்ச கோசங்களுக்கும் வேறாக விருக்கின்ற தென்பது பெறப் படுவதாம்.

1. பிதா மாதாக்களின் சுக்கில சோணிதங்களா லாகிய ஸ்தூல சரீரம் அன்னமய கோசமாம்; (2) சூட்சும சரீரத்தில் பிராணவாயுவும் கருமேந்திரியமுங் கூடிப் பிராணமய கோசமாம்; (3) மனமும் ஞானேந்திரியமுங் கூடி மனோமய கோசமாம்; (4) பிரத்தியக் ஆத்ம சைதன்னிய சாயையோடு லோகாந்த குந்தம்போன்றுள்ள புத்தியும் ஞானேந்திரியமுங் கூடி விஞ்ஞானமய கோசமாம்; (5) காரணசரீர வடிவ அவித்தையும் சாக்கிரத்தில் வனிதாதி விஷயங்களைக் காண்டல் - அடைதல் - அனுபவித்த லென்பனவற்றால் முறையே யுண்டாகும் பிரியம் - மோதம் - பிரமோதமென்னும் திரிவித சுக விருத்தியும் கூடி ஆனந்த மயகோசமாம்.

இவ்வாறு கூறியதனால், ஆத்மா சரீரத்திரய விலக்ஷணமாம்; பஞ்சகோசத்திற் கப்பாற் பட்டதாம்; அவஸ்தாத்திரய

சாட்சியாம்; சச்சிதானந்த சங்கா வடிவமாமென்பது பெறப் பட்டவா றறிக.

நம்மனோர்க்குத் தேகத்திலும், இந்திரியத்திலும், பிராண வாயுவிலும் ஆத்மபுத்தி மிகு பிரசித்தமா யிருத்தலின், இச் சூத்திரம் 'எனதுட லென்றலின்', 'ஐம்புல னொடுக்க மறித லின்','கண்படில் உண்டிவினை யின்மையின்' என்று தொடர் பாகக்கூறி, அதனால், அவை ஆன்மாவாகா வென்ற தென்க.

"ஆற்று மிவ்வுடம் பிற்பா மைம்புலன்
மாற்று மைம்புல னிற்பா மாமனம்
போற்றும் புத்தி யதிற்பாம் புத்தியிற்
றேற்று கின்றது காண்பது தொல்பாம்."

என்று பாமார்த்த தரிசனம் (பகவத்கீதை) கூறுவதும்,

"பாராதி பூதநீயல்லை - யுன்னிப் - பாரிந்திரியங்
கரண நீயல்லை,ஆரா யுணர்வுநீ யென்றான் -
ஐய - னன்பா யுரைத்தசொல் லானந்தந் தோழி."

என்று தாயுமான சுவாமிகள் கூறுவதும்,

"விரோசன சித்தாந்தம்.

1 - (அன்னமயகோசமே ஆத்மா.)

அங்குச் சில பாமரர்களாகிய விரோசனமதத்தை யனு சரித்தவர்கள் ஸ்தூல சரீரவடிவ அன்னமய கோசத்தையே

ஆத்மாவென்கிறார்கள். அவர்கள் தம் சித்தாந்தத்திற்கு இவ்வாறு யுக்தி சொல்லுகின்றார்கள்:—

எதில் நான் என்னும் புத்தி யுண்டாகின்றதோ அஃது ஆத்மாவாம். அந்த நான் என்னும் புத்தி ஸ்தூல சரீரத்திலுண்டாகின்றது.

நான் மனுஷ்யன், நான் பிராமணன் என்னும் உணர்ச்சி எல்லோருக்கும் உண்டாகின்றது. மனுஷ்யத் தன்மை பிராமணத் தன்மைகள் ஸ்தூல சரீரத்திற்றான் இருக்கின்றன; ஆதலால், ஸ்தூல சரீரமே நான் என்னும் புத்திக்கு விஷயமாதலால் ஆத்மாவாம்.

அல்லது, எதில் முக்கியமான பிரீதி உண்டாகின்றதோ அஃது ஆத்மாவாம்.

ஸ்திரீ புத்திரன் தனம் பசு முதலியன ஸ்தூல சரீரத்திற்கு உபயோகப்படுமாயின், அவற்றில் பிரீதி யுண்டாகின்றது; ஸ்தூல சரீரத்திற்கு உபயோகமாகாவிடின், பிரீதி உண்டாகின்றதில்லை.

எதன் நிமித்தமாக அன்னிய பதார்த்தங்களில் பிரீதி யுண்டாகின்றதோ, அந்த ஸ்தூல சரீரத்திலேயே முக்கியமான பிரீதி யிருக்கின்றது; ஆகையால், ஸ்தூல சரீரமே ஆத்மாவாம். அதனை வஸ்திரம் பூஷணம் அஞ்சனம் மஞ்சனம் நாநாவித போஜனங்கள் முதலியவற்றால் சிங்காரித்துப்

போஷித்தலே பரம புருஷார்த்தமாம். இந்த அசுர ஸ்வாமியாகிய விரோசனனது சித்தாந்தமாம்.

## இந்திரிய ஆத்மவாதியின் மதம்.

## 2 - (இந்திரியமே ஆத்மா.)

வேறு சிலர் இவ்வாறு கூறுகின்றனர் :—ஸ்தூல சரீரம் ஆத்மாவன்று; ஆனால்,

ஸ்தூல சரீரத்தி லெது விருத்தலால் ஜீவன வியவகாரமுண்டாகின்றதோ, எது வில்லாவிட்டால் மரண வியவகாரமுண்டாகின்றதோ, அந்த ஆத்மா ஸ்தூல சரீரத்தினும் வேறாம். ஜீவனமும் மரணமும் இந்திரியங்களின் அதீனமாயிருக்கின்றன. சரீரத்தில் இந்திரியமுள்ள வரையில் ஜீவனமுண்டு; இந்திரியங்களி லேதேனுமொன் றில்லாவிட்டால் அப்போது மரணம் சொல்லப்படுகின்றது.

நான். பார்க்கின்றேன், பேசுகின்றேன், கேட்கின்றேன் என்றிவ்வாறு நான் என்னும் புத்தி இந்திரியத்திலிருக்கின்றது; ஆகையால், இந்திரியமே ஆத்மாவாம்.

## இரணியகர்ப்பனை உபாசிப்பவர் மதம்.

## 3 - (பிராணனே ஆத்மா.)

ஹிரண்யகர்ப்ப உபாசகர் பிராணனை ஆத்மாவென்று சொல்லுகின்றார்கள்; அதில் இந்த யுக்தியைக் கூறுகின்றார்கள்.

மரண சமயத்தில் ஒருவனுக்கு மூர்ச்சையுண்டானல் அப்போது அவனது சமீபத்தி லிருக்கும் புத்திரர் முதலி யோர் பிராணனிருந்தால் அவன் ஜீவித்திருக்கின்றனென் றும் பிராண னில்லாவிட்டால் இறந்துபோய்விட்டா னென் றும் கூறுகின்றனர்.

அல்லது, சரீரத்தில் நேத்திரேந்திரியம் இல்லாவிடின், குருடன் சரீரமிருக்கின்றது; சுரோத்திரேந்திரிய மில்லை யாயின், செவிடன் சரீரம் இருக்கின்றது; வாக்கிந்திரிய மில்லையாயின், ஊமையன் சரீரம் இருக்கின்றது என்றிவ் வ்வாறு எவ்விந்திரியங்களின் வியாபார மில்லாமலும் சரீரம் நிலைத்தே யிருக்கின்றது. பிராணனில்லாமற் போனல் தேகம் அந்த க்ஷணமே மயானம்போல அமங்களமும் பயங்கரமுமாய் விழுகின்றது.

நான் பார்க்கின்றேன், கேட்கின்றேன் என்னுமுணர்ச் சியினுலும் இந்திரியங்களுக்கு வேருகவே ஆத்மா இருப்ப தாகச் சித்திக்கின்றது; ஏனெனின், நேத்திர ஸ்வரூபமான நான் பார்க்கின்றேன், சிரவண ஸ்வரூபமான நான் கேட் கின்றேன் என்று பிரதீதியுண்டாயின், இந்திரியமே ஆத் மாவாதல் சித்திக்கும்; ஆனல், நேத்திரமுடைய நான் பார்க் கின்றேன், காதுடைய நான் கேட்கின்றேன் என்று பிர தீதியாகின்றது.

ஆதலால், இந்திரியத்திற்கு வேருகவே ஆத்மா இருக் கின்றது.

சுழுத்தியில் சகல இந்திரியங்களும் இல்லை; அங்ஙன மாயினும், பிராணனிருத்தலால் ஜீவன வியவகார முண்டா கின்றது; ஆகையால், ஜீவித்தலும் மரித்தலும் இந்திரியங் களின் அதீனமன்று; ஆனால், ஸ்தூல சரீரமும் பிராணனும் பிரிதலை மரணமென்பர். ஆகையால், ஜீவன மரணங்கள் பிரா ணன் அதீனமா யிருக்கின்றன. அந்தப் பிராணனே ஆத்மா வாம்.

## மன ஆத்மவாதி மதம்.

## 4 - (மனமே ஆத்மா.)

வேறு சிலர் இவ்வாறு கூறுகின்றனர்:—

பிராணன் ஜடமாம்; ஆகையால், அது கடம்போல அனாத் மாவாம். பந்த மோக்ஷங்கள் மனத்தின் அதீனமாயிருக்கின் றன. விஷயத்தில் ஆசக்தியடைந்த மனம் பந்தத்திற்கு ஹேதுவாம்; விஷயவாசனை யின்றிய மனம் மோக்ஷத்திற்கு ஹேதுவாம். மனத்தின் சம்பந்தத்தினாலேயே இந்திரியம் ஞானத்திற்கு ஹேதுவாம்; மனத்தின் சம்பந்தமின்றி இந்திரி யத்தால் ஞான முண்டாகின்றதில்லை. ஆகையால், சகல வியவகாரங்களுக்கும் மனமே ஹேதுவாம்; அதுவே ஆத்மா வாம்.

## விஞ்ஞானவாதி பௌத்தர் மதம்.

## 5 - (புத்தியே ஆத்மா.)

க்ஷணிக விஞ்ஞானவாதி என்னும் பௌத்தர் இவ்வாறு கூறுகின்றனர்:—மனத்தின் வியாபாரம் புத்தியின் அதீனமா

யிருக்கின்றது; ஏனெனின், புத்தியின் ஆகாரமே மனமாம். ஆதலால், க்ஷணிக விஞ்ஞானரூப புத்தியே ஆத்மாவாம்; மனது ஆத்மாவன்று. அவர்கள் அபிப்பிராயம் இதுவாம்:—

சகல பதார்த்தங்களும் விஞ்ஞானத்தின் ஆகாரமாகவே யிருக்கின்றன. அந்த விஞ்ஞானம் பிரகாச ரூபமாம். ஒவ்வொரு க்ஷணத்திலும் விஞ்ஞானம் உற்பத்தியாய் நாசமடைகின்றது. முன் விஞ்ஞானத்திற்குச் சமானமான வேறு விஞ்ஞானம் உற்பத்தி யாவதால் முன் விஞ்ஞானம் நாசமடைகின்றது. அங்ஙனமே மூன்றாவது விஞ்ஞானத்தின் உற்பத்தி இரண்டாவது விஞ்ஞானத்தின் நாசமாம்; நான்காவதின் உற்பத்தி மூன்றாவதின் நாசமாம். இவ்வாறு நதியின் பிரவாகம் போல விஞ்ஞானத்தின் தாரை தொடர்ந்துகொண்டே யிருக்கின்றது. அந்த விஞ்ஞான தாரை இருவகையாம்; அவற்றுள், ஒன்று ஆலய விஞ்ஞான தாரையாம்; மற்றொன்று பிரவிர்த்தி விஞ்ஞான தாரையாம்.

நான் நான் என்னும் விஞ்ஞானதாரையை ஆலயவிஞ்ஞானதாரை என்பர்; அதனையே புத்தி யென்பர்.

இதுகடம், இது சரீரம் என்னும் விஞ்ஞானதாரையைப் பிரவிர்த்தி விஞ்ஞானதாரை என்பர்.

ஆலய விஞ்ஞானதாரையி னின்றும் பிரவிர்த்தி விஞ்ஞானதாரை உற்பத்தியாகின்றது. மனத்தின் ஸ்வரூபமும் பிரவிர்த்தி விஞ்ஞானதாரையி லிருக்கின்றது; ஆதலால்,

அஃது ஆலய விஞ்ஞானதாரைவடிவ புத்தியின் காரியமாம். அந்தப்புத்தியே ஆத்மாவாம்.

ஆலய விஞ்ஞானதாரையில் பிரவிர்த்தி விஞ்ஞான தாரையின் பாதத்தைச் சிந்தனை செய்தலால், நிர்விசேஷ க்ஷணிக விஞ்ஞான தாரையின் ஸ்திதியே சித்திக்கின்ற தென்பது அவர்கள் மதத்தில் மோட்சமாம். இவ்விதத்தால் விஞ்ஞானவாதிகள் புத்தியையே க்ஷணிக ரூபமாயும் ஸ்வயம் பிரகாசரூபமாயும் கற்பித்து ஆத்மாவென்கின்றார்கள்.

## பட்டர் மதம்.

## 6 - (ஆநந்தமயகோசமே ஆத்மா.)

பூர்வமீமாம்சகர்களுள் ஒருவரான வார்த்திககார பட்டர் இவ்வாறு கூறுகின்றார்:—மின்னல்போல ஆத்மா க்ஷணிகரூப மன்று; ஆனால், ஸ்திரஸ்வரூபமான ஆத்மா ஜடரூபமாயும் சேதனரூபமாயும் இருக்கின்றது. பட்டருடைய அபிப்பிரா யம் இதுவாம்:—

சுழுத்தியிலிருந்து விழித்துக்கொண்டவன் நான் ஜட மாகத் தூங்கினேன் என்று கூறுகின்றான்; அதனால், ஆத்மா ஜடரூபமென்பது சித்திக்கின்றது.

விழித்தவனுக்கு ஸ்மிருதி யுண்டாகின்றது; அறியப் படாத பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகாது. சுழுத்தியில் ஆத்ம ஸ்வரூபத்திற்கு வேறாக யாதொரு ஞானசாதனமு

யில்லை; ஆகையால், ஸ்மிருதிக்குக் காரணமாவது சுழுத்தியி லுள்ள ஞானமேயாம். அஃது ஆத்மாவின் ஸ்வரூபமேயாம்.

இவ்விதமாக ஆத்மா மின்மினிபோலப் பிரகாச ரூபமாயும் அப்பிரகாசரூபமாயு மிருக்கின்றது; ஞானரூபமாயிருத்தலால் பிரகாசரூபமா யிருக்கின்றது; ஜடரூபமா யிருத்தலால் அப்பிரகாச ரூபமாயிருக்கின்றது. அந்தப் பிரகாசரூபமாயும் அப்பிரகாசரூபமாயு மிருப்பது ஆநந்தமயகோசமாம்; ஏனெனின், சுழுத்தியிலுள்ள சேதனத்தின் ஆபாச சகித அஞ்ஞானம் ஆநந்தமயகோச மெனப்படுகின்றது. அங்கு ஆபாசமோ பிரகாசரூபமாயும், அஞ்ஞாநம் அப்பிரகாசரூபமாயும் இருக்கின்றன; ஆதலால், பட்டர் மதத்தில் ஆநந்தமய கோசமே ஆத்மாவெனச் சித்திக்கின்றது.

## மாத்தியமிக பௌத்தர் மதம்.

## 7- (ஆநந்தமயகோசமே ஆத்மா.)

சூனியவாதி பௌத்தர் இவ்வாறு கூறுகின்றனர்:— ஆத்மா நிரம்சமாம்; ஆதலால், ஒரே ஆத்மாவிற்குப் பிரகாச ரூபமும் அப்பிரகாச ரூபமும் கூறுதல் பொருந்தாது. மின் மினியின் ஓரம்சம் பிரகாசமாயும் மற்றோரம்சம் அப்பிரகாசமாயு மிருக்கின்றன; அதுபோல, அம்சமில்லாத ஆத்மாவில் இரண்டு ரூபங்களைக் கூறுதல் அயுக்தமாம். ஆதலால், இரண்டு ரூபங்கள் சித்தித்தற்பொருட்டு ஆத்மாவை அம்சமுடைய

தாகக் கொள்ளல் வேண்டும். அம்சமுடைய பதார்த்தங்களாய கடாதிகள் உற்பத்தி நாச முடையனவா யிருக்கின்றன; அதுபோல, ஆத்மாவும் அம்சமுடையதா யிருந்தால் உற்பத்தி நாசமுடையதாகவே யிருத்தல் வேண்டும்.

உற்பத்தி நாச முடையதான பதார்த்தம் உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் அசத்தாம். ஆதியந்தங்களில் அசத்தாயிருப்பது எதுவோ அது மத்தியிலும் சத்தாயிராது; ஆனல், மத்தியிலும் அசத்தாகவே யிருக்கும். ஆகையால் ஆத்மா அசத்ரூபமாம்.

அங்ஙனமே ஆத்மாவிற்கு வேருன சகல பதார்த்தங்களும் உற்பத்தி நாச முடையனவாம்; ஆதலால், அசத்ரூபமாம்.

இவ்விதத்தால் ஆத்மாவும் அநாத்மாக்களுமான ஸகல வஸ்துக்களும் அசத்ரூபமா யிருத்தலால் சூனியமே பரமதத்துவமாம். இது சூனியவாதியாகிய மாத்தியமிக பௌத்தரது மதமாம்.

அவர்களும் அஞ்ஞானரூப ஆநந்தமய கோசத்தைப் பிரதிபாதிக்கின்ருர்கள். அஞ்ஞானம் மூன்றுவிதமாய் விளங்குகின்றது:—

1. அத்வைத சாஸ்திரத்தின் சம்ஸ்கார மில்லாத மூடர்களுக்கோ ஜகத்ரூப பரிணமத்தை யடைந்த அஞ்ஞானம் சத்தியமாய்த் தோன்றுகின்றது;

2. அத்வைத சாஸ்திரா நுசாரமான யுக்தியில் நிபுணர்களாகிய பண்டிதர்களுக்கு அஞ்ஞானமும் அதன் காரியமான ஜகத்தும் சதசத்திற்கு விலட்சணமான அநிர்வசநீய ரூபமாய் விளங்குகின்றன;

3. ஞாநநிஷ்டையை யடைந்த ஜீவன் முக்த வித்வானுக்குக் காரியசகிதமான அஞ்ஞானம் துச்சமாகத் தோற்றுகின்றது. துச்சம் - அசத்து - சூனியம் என்பன ஒருபொருட்கிளவிகளாம்.

இவ்விதமாக ஜீவன் முக்தனுக்குத் துச்சமாகத் தோற்றும் அஞ்ஞாநத்தில் மோகமடைந்து சூன்யவாதி பௌத்தர் பரம புருஷார்த்தத்தை யடைகின்ற தில்லை; ஆனால், துச்ச வடிவஆநந்தமய கோசத்தினையே ஆத்மா வென்பர்.

## பிரபாகர நையாயிகர் மதம்

## 8 - (ஆநந்தமய கோசமே ஆத்மா.)

பூர்வ மீமாம்சகர்களின் ஏகதேசிகளாகிய பிரபாகரநையாயிகர் இவ்வாறு கூறுகின்றனர்:—ஆத்மா சூனியரூபமன்று; ஏனெனின், ஒருவன் ஆத்மாவைச் சூனிய ரூபமாகக் கொள்ளின், அவனை இது கேட்பாம்; சூன்யரூபத்தை நீ அநுபவித்(அறிந்)திருக்கின்றாயா? இல்லையா?

சூன்ய ரூபத்தை யநுபவித்தேனென்று கூறும்பட்சத்தில் எதனால் சூன்யம் அநுபவிக்கப் படுகின்றதோ அந்த ஆத்மா சூன்யத்திற்கு விலட்சணமாமென்பது சித்திக்கின்றது.

சூன்யத்தை யநுபவிக்கவில்லை யெனின், சூன்யமில்லை யென்பது சித்தித்தது.

இவ்விதத்தால் சூன்யத்திற்கு விலட்சணமானது ஆத்மா வாம்; அதில் மனத்தின் சையோகத்தினால் ஞான முண்டாகின் றது; அந்த ஞானகுணத்தால் ஆத்மா சேதனமெனப்படுகின் றது. ஸ்வரூபமாக ஆத்மா ஜடமாம். அவ்வாறு சுகம் - துக்கம் - இச்சை - த்வேஷம் - பிரயத்தனம் - தர்மம் - அதர்மம் முத லிய குணங்கள் ஆத்மாவி லிருக்கின்றன.

அவர்கள் மதத்திலும் ஆநந்தமய கோசமே ஆத்மாவாம். விஞ்ஞாநமய கோசத்திலுள்ள புத்தி ஆத்மாவின் ஞாநகுண மெனப்படுகின்றது ; ஏனெனின், ஆநந்தமய கோசத்தில் சேதனம் கூடமா யிருக்கின்றது; விவேக மில்லாதவனுக்குத் தோற்றுகின்ற தில்லை. பிரபாகர நையாயிகர்கள் சுழுத்தியில் ஆத்மாவை ஞாநமில்லாததென்று கருதி ஸ்வரூபமாக ஜட மென்கின்றார்கள்; ஆகையால், கூடசேதனத்தை யுடைய ஆநந்தமய கோசத்திலேயே அவர்களுக்கு ஆத்மப் பிராந்தி யிருக்கின்றது.

அன்றியும், அவர்கள் ஆத்ம ஸ்வரூபமான நித்திய ஞானத்தை ஜீவனிடத்தில் கொள்ளவில்லை; ஆனால், அநித்திய ஞாநமென்று கொண் டிருக்கின்றார்கள். அந்த அநித்திய ஞாநம் சித்தாந்தத்தில் அந்தக்கரணத்தின் விருத்தியாகிய புத்திரூபமா யிருக்கின்றது. இவ்விதத்தால் பிரபாகர நையா

யிக மதத்தில் ஆநந்தமய கோசம் ஆத்மாவாம்; புத்தி அதன் குணமாம். அவர்கள் மதமும் நலமுடையதன்று; ஏனெனின், ஞானத்துக்கு வேருன ஜடவஸ்துக்களாகிய கடாதிகள் அநித்தியமாயிருக்கின்றன. ஆன்மாவும் ஞானஸ்வரூபமாகாவிடின், கடாதிகள்போல ஜடமாய் அநித்தியமாய்விடும். ஆத்மா அநித்தியமானுல், மோக்ஷத்தின்பொருட்டான சாதனங்கள் நிஷ்பிரயோஜனமாய் விடும்." என்று விசாரசாகரம் கூறுவதும் இங்குணர்தற்பாலனவாம். 3

## அவதாரிகை.

மாயா வியந்திர தனுவினுளுளது என்று அனுமானப் பிரமாணத்தால் துணியப்பட்ட ஆன்மா அதனுள் பஞ்சாவஸ்தை யுடையதாக விருக்கின்ற தென்று அதனியல்பினைக் கூறல்.

4. அந்தக் கரண மவற்றினென் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவைத் தைத்தே.

(இ - ள்.) ஆன்மா - (சகசமலமென்னும் அஞ்ஞானத்தால் சீவரூபமாக விளங்கும்) ஆத்மா, அந்தக்கரண மவற்றினென்றன்று - அந்தக்கரணமாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் அந்நான்கனுள் ஒன்றன்றாம், (அவற்றுள் எதுவு

மாகாது அவற்றிற்கு வேறாக விருப்பினும்), அரசு அமைச்சு ஏய்ப்ப - அரசன் அமைச்சரோடு கூடிநிற்பது போல, சகச மலத்து - (ஆணவமென்றும் அஞ்ஞானமென்றும் கூறப்படும்) சகசமலத்தினால், உணராது- (தனது நிசவடிவம் சச்சிதானந்த சிவமாமென்பதை) அறியாது (இருத்தலால்), அவை சந்தித்தது நின்று- அம்மன முதலியவற்றோடு கூடிநின்று,ஐஞ்சவத்தைத்து - சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமென்னும் ஐந்தவஸ்தைகளை யுடையதாயிருக்கின்றது,(எ-று)

மாயா வியந்திர தனுவினுள் உளது என்று அனுமானப் பிரமாணத்தால் துணியப்பட்ட ஆன்மா சூனியம் - உடம்பு - இந்திரியம் - பிராணவாயு - அஞ்ஞான மென்பனவற்றிற்கு வேறாயிருத்தல்போல, அந்தக்கரணத்திற்கும் வேறாயிருப்பினும், சகசமலத்தால் தனது நிசவடிவத்தை யறியாதிருப்பது காரணமாக அவ்வந்தக்கரணங்களோடுகூடிநின்று சாக்கிர முதலிய அவஸ்தை யைந்தனையு முடையதாயிருக்கின்றதென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

சந்தித்ததென்பது முற்றெச்சம்; சகசமலத் துணராது என்பது மூன்றாம்வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். ஏ - ஈற்றசை. ஆத்மா சாக்கிர முதலிய அவஸ்தைகளை யடைதலும் அதற்குத் தடத்த விலக்கணமாம். மூன்றாவது சூத்திரத்தில் ஆத்மாவின் தடத்த விலக்கணம் கூறப்பட்டதாயினும், அஃது அந்தக்கரணத்தின் வேறாய் ஐந்தவஸ்தைகளை

யுடையதா யிருக்கின்ற தென்பது ஆண்டுப் பெறப்படாமை யின், ஈண்டு அவ்விலக்கணம் கூறப்பட்ட தென்க.

'எனதுட லென்றலின்' 'ஐம்புலனொடுக்க மறிதலின்' 'கண்படில் உண்டிவினை யின்மையின்' என்னும் ஏதுக்களா லேயே எனது காணமென்றலின் ஆன்மா (அதற்கு வேருக) உளது என்பது குறிப்பாகப் பெறப்படுவதாக விருத்தலின், ஈண்டு ஆன்மா 'அந்தக்கரண மவற்றினுென் றன்று' என்று கூறுதல் வழுவாகாதோ வெனின், நம்மனோர்க்கு ஆத்மா 'அந்தக்கரண மவற்றினுென் றன்று' என்பதை யுணர்தல் மிகு அருமையாக விருத்தல் நோக்கி, இச்சூத்திரம் வெளிப்படை யாக ஆன்மா 'அந்தக்கரண மவற்றி னுென்றன்று' என்று கூறியது; அதனுல், அது வழுவாகா தென்க.

அந்தக்கரணம் ஆன்மாவன்று என்பதை யுணர்தல் மிக அருமையா மென்பது "எந்நாளு முடலிலே யுயிரா மூனைப் போ விருக்கவிலை யோமனதெனு மியானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம தென்றூனைச் சித்தென்றுமே, அந் நாளி லெவனே பிரித்தா னதைக்கேட்ட வன்றுமுத லின்று வரையு மணியாய மாயைமை யடக்கிக் குறுக்கே யடர்ந்தரசு பண்ணி யெங்கள்,முன்னுக நீயென்ன கோட்டைகொண் டா யென்று மூடமன மிகவுமேச" என்று தாயுமான சுவாமிகள் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

சகலத்தில் (சாக்கிர சொப்பனங்களில்) பிரத்தியக் ஆத் மாவின் (உள்ளுணர் வென்னும் சிவத்தின்) பிரதிபிம்பம்

அந்தக்கரணத்தி லிருத்தலால், அஃது ஆத்மாபோல விளங்குகின்றது; அதனல், சித்ஜட விசாரமில்லாதவர் அந்தக்கரணமே ஆத்மாவா மெனக் கூறுகின்றனர். அந்தக்கரணம் ஆத்மாவினும் வேறு; அல்லது ஆத்மா அந்தக்கரணத்தினும் வேறு என்னும் தொடர்ச்சியான வுணர்ச்சி தத்துவ சாஸ்திர விசாரமும் சமாதி யப்பியாசமு முடையவர்க்கன்றி மற்றவர்க்குத் தெளிவாக வுண்டாத லின்மையை நோக்கி இச்சூத்திரம் வெளிப்படையாக ஆன்மா 'அந்தக்கரண மவற்றினென்றன்று' எனக் கூறிய தென்க.

பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்தோடு கூடிய அந்தக்கரணத்தை ஆத்மாவென் றுணர்தல் பஞ்சக் கிலேசங்களுள் ஒன்றாயுள்ள அஸ்மிதையாம். அது புத்தி ஆத்மாக்களின் ஒருமை யுணர்ச்சியாம். இவ்வொருமை யுணர்ச்சி சாமானிய அகங்கார மென்றும் கூறப்படும். பஞ்சக்கிலேசங்களினியல்பை வேதாந்த சூடாமணி - வசன விறுவிடை 205-வது பக்கத்தில் காண்க.

அந்தக்கரணம் (உட்கருவி) மனம் - புத்தி - சித்தம் - அகங்காரமென நான்கு பகுதியதாம். அவற்றுள், மனத்தின் வியாபாரம் நினைத்தலாம்; புத்தியின் வியாபாரம் நிச்சயித்தலாம்; சித்தத்தின் வியாபாரம் சிந்தித்தலாம்; அகங்காரத்தின் வியாபாரம் அபிமானித்தலாம்.

மாயா வியந்திர தனுவினுள் எனது மனமென்றலின், ஆன்மா உளது; எனது புத்தியென்றலின், ஆன்மா உளது; எனது சித்தமென்றலின், ஆன்மா உளது; எனது அகங்கார மென்றலின், ஆன்மா உளது என அனுமானஞ் செய்து நோக்கின், ஆன்மா அந்தக்கரண மவற்றின்ஞென் றன்று மென்பது நன்கு விளங்குவதாம்.

ஆன்மா அந்தக்கரண மவற்றின்ஞென் றன்றென்பது பின்வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்குவதாம்.

## அவிரோத வுந்தியார்.

"ஆங்கார நிச்சயித் தப்புத்தி பற்றலான்
ஓங்குள ஞன்மன முந்தீபற
ஒன்றுநீ யன்றிவற் றுந்தீபற."

"அறிவா னினைவு மடங்கலாற் சித்தம்
அறிவன் றசித்தாமென் றுந்தீபற
அறிவுன் னுருவமென் றுந்தீபற."

## சசிவன்ன போதம்.

"இனமுற வெண்ண வுள்ள கரணத்தி
லொன்றி தெனலா லிதென்ன தெனலால்,
மனமுன மன்ன மென்ற வதனு
மல்ல மதியல்ல வந்த வகையே."

"இடரின் புளதாய் நிலையற் றறிவற்
றெண்ணுங்கா ணங்க ளிலாயெவரும்,
அடரும் பிறவிக் கடியென் றுணரும்
அகங்காரமு நீயல வென்றறியே."

"ஐயப் படலோர் பொருணிச் சயமா
யறியப் படல்யா னெனதென் றுமதஞ்,
செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ்
சித்தம் மதுவன் றெனநீ தெளியே."

ஆணவமலமென்னும் அஞ்ஞானம் ஆத்மாவின்கண் ஆகாயத்தின்கண் கறுநிற முற்பத்தியின்றிக் கற்பனையா யிருத்தல்போல இருத்தலின், சகசமலமென்று கூறப்படுகின்றது. சகசம் - இயற்கை. இம்மலம் ஆத்மாவின்கண் ஜீவனென்னும் வியவகார முள்ளவளவு மிருப்பதாம். இம்மலத்தால் ஆன்மா விஞ்ஞானகலர் - பிரளயாகலர் - சகலரென மூவகைச் சீவராக விளங்குகின்றது. ஆணவமலமாத்திர முடையவர் விஞ்ஞானகலரென்றும், அவ்வாணவ மலத்தோடு கர்மமலமு முடையவர் பிரளயாகலரென்றும், அவ்வாணவ கர்ம மலங்களோடு மாயாமலமு முடையவர் சகலரென்றும், அவர்களுள், விஞ்ஞானகலர் அஷ்டவித்தியேசுரர் - அணுசதாசிவர் - சத்தகோடி மகாமந்திரரென மூன்று திறத்தினராக விருப்பர்; பிரளயாகலர் நூற்றுப்பதினெட்டு உருத்திரராவர்; சகலர் பிரமதேவன் முதல் எறும்பீறாக விருப்பரென்றும், இறை

வன் விஞ்ஞானகலர்க்கு அவர்தம் அறிவிற்கறிவாய் நின்று தத்துவஞான வுபதேசஞ் செய்வான்; பிரளயாகலர்க்கு மான் மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரதாரியாகத் திருமேனி கொண்டு வந்து தத்துவஞான வுபதேசஞ் செய்வான்; சகலர்க்கு மானுட வடிவங்கொண்டு வந்து தத்துவஞான வுபதேசஞ் செய்வான் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஆணவமென்பது அஞ்ஞானமாமென்பது "ஆணவமே யஞ்ஞான மறியாமை யென்றறிநீ" என்று சிவஞானப்பிரகாச வெண்பா கூறுவதாலும் அறிதற்பாற்றும். சகசமலம் வியாபகமாயுள்ள ஆன்மாவை அணுத்தன்மை யுடையதுபோலச் செய்தலின், ஆணவமென்றும், வித்தையினால் (ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தால்) கெடுதலின், அவித்தை யென்றும் கூறப்படுகின்றது. பிரஹ்மம் - ஆத்மா என்பவற்றின் பொருள் வியாபகமென்பதாம். அஞ்ஞான நோக்கத்தில் வியாபகமாயுள்ள ஆகாயத்தை யாவர் அணுவடிவமாகச் செய்தற்குரியவராவர்? அஃது எவர்க்கும் ஆகாதென்க; அதுபோல, அஞ்ஞானம் ஆத்மாவை உண்மையில் எவ்வகையாகவேனும் அணுவடிவமாகச் செய்யாதென்க. அஞ்ஞானம் உண்மையில் ஆன்மாவை அணுவடிவமாகச் செய்யுமாயின், அது சங்கோச (சுருங்குதல்) - விகாச (விரிதல்) தருமமுடைய தாவதாம். சங்கோச விகாச தருமமுடையது ஆடை முதலியனபோலச் சடப்பொருளாம். ஆன்மா உண்மையில் அஞ்ஞானத்தால் சுருங்குதல் வடிவ

முடையதா மாயின், அது ஜடப்பொருள்களுள் ஒன்றாய் அநித்தியமா யொழிவதாம். கண்ணாடி தன்னுள் பிரதிபலித் துள்ள ஆகாயத்தைச் சுருங்கிய வடிவமுடையதுபோலக் காட் டுதல்போல், அஞ்ஞானமும் தன்னுள் பிரதிபலித்துள்ள ஆன் மாவைச் சுருங்கிய வடிவமுடையதுபோலக் காட்டுகின்றது; அதனால், பிரதிபலன ஆன்மா (சீவன்) சுருங்கிய வடிவமுடை யதுபோலச் சாஸ்திரக்கண் ணுள்ளவர்க்குத் தோன்றுகின்ற தென்க.

அஞ்ஞானம்: ஆவரணம் விட்சேபமென விரண்டு சத் திக ளுடையதாம்; அவற்றுள், ஆவரணத்தை (மறைப்பை)ச் செய்யும் சக்தி ஆவரண சக்தியாம்; விட்சேபத்தை (தோற் றத்தை)ச் செய்யும் சக்தி விட்சேப சத்தியாம். அஞ்ஞானம் ஆவரண சத்தியுடைமை நோக்கி ஆணவமென்றும், விட் சேப சத்தியுடைமை நோக்கி மாயையென்றும் கூறப்படு கின்றது. ஆணவமும் மாயையும் கடமும் படமும்போலத் தனித்தனிப் பொருளன்றாம். ஒருவனைப் பாடுவதுபற்றிப் பாடகனென்றும், வர்த்தகஞ் செய்வதுபற்றி வர்த்தகனென் றும் பிறர் கூறுதல்போல, அஞ்ஞானத்தை ஆவரண சத்தி யுடைமைபற்றி ஆணவமென்றும், விட்சேப சத்தி யுடைமை பற்றி மாயையென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. அசத்து - சடம் - துக்கம் - அநித்தியம் - கண்டிதம் - தமசு - மோகம் - அநிருதம் - பாசம் எனப் பலபெயர்கள் அஞ் ஞானத்திற்கு வந்திருத்தல் பல காரணம்பற்றியா மென்க.

சுவேதாசுவதா உபநிஷத்து "பிறப்பில்லாதது; ஒன்று; செம்மை - வெண்மை - கருமை (இராசத - சத்துவ - தாமத குணம்) உடையது" என்று மாயையைக் கூறுதலின், அஞ்ஞானம் பலவென்பதற்குப் பிரமாண மின்றென்க.

பொன்னும் களிம்புங்கூடிச் செம்பாய் விளங்குதல்போல ஆத்மாவும் அஞ்ஞானமுங் கூடிச் சீவராக விளங்குகின்றது. பொன்னும் களிம்புங்கூடிச் செம்பாய் விளங்கிய காலம் அறிதற் கரியதாயிருத்தல்போல, ஆத்மாவும் அஞ்ஞானமும்கூடிச் சீவராய் விளங்கியகாலம் அறிதற் கரியதா யிருக்கின்றது; அதனுல், செம்பில் களிம்பு சகசமா யிருக்கின்றது ; ஆத்மாவில் அஞ்ஞானம் சகசமா யிருக்கின்ற தென்று கூறப்படுகின்றது. செம்பின்கண் களிம்பு நீங்கியபோது அது பொன்ஞகவே விளங்குதல்போல, ஆன்மாவின்கண் அஞ்ஞானம் நீங்கியபோது அது சிவமாகவே விளங்குகின்ற தென்பதாம்.

இது "(அரிசி) உமியால் கட்டுப்பட் டிருக்கும்போது நெல்லா யிருக்கின்றது; உமியற்றதாயின், அஃதரிசியாகின்றது; அங்ஙனமே, சீவனும் கட்டுப்பட் டிருக்கின்ருன்; கருமம் நாசமாயின், எப்போதும் (மங்கள சொரூபமாயுள்ள) சிவனுயிருக்கின்ருன்; (கரும) பாசத்தால் கட்டுப்பட்டுள்ள வளவும் சீவனு யிருக்கின்ருன்; (அந்தப்)பாசத்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனு யிருக்கின்ருன்" என்று ஸ்கந்தோபநிஷத் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

நல்வினையினா லுண்டாய்ச் சுகத்திற் கேதுவாயுள்ள தருமமும், தீவினையா லுண்டாய்த் துக்கத்திற் கேதுவாயுள்ள அதருமமும் கருமமலமாம். இஃது அபூர்வமென்றும் அதிர்ஷ்ட மென்றுங் கூறப்படும்.

ஆணவமலம் - மாயாமலம் - கருமமலமென்னும் மல பேதங்களால் சிவத்தின்கண் விஞ்ஞானகலர் முதலிய சீவ பேதங்கள் கற்பிக்கப்பட் டிருக்கின்றன. கயிற்றை யறிந்த காலத்து அதன்கண் கற்பிதமாயுள்ள அரவு கெடுதல்போல, சிவத்தை யறிந்த காலத்து அதன்கன் கற்பிதமாயுள்ள சீவ பேதங்கள் கெடுவனவா மென்பதிங் குணர்தற் பாலதாம். வேதாந்த தத்துவக்கட்டளை "ஆணவம் உடம்பை நானென் றிருக்கை; காமியம் கண்டவற்றிற் கெல்லாம் ஆசைப்படுதல்; மாயை தனக்கு வருவதை யறியாமற் கோபங்கொண் டிருக்கை." என்று கூறுவதால், ஆணவ மலமாத்திர முடைய விஞ்ஞானகலர் பெரும்பாலன்மையும் விருப்பும் வெறுப்புமின் றித் தேகாபிமான முடையவரா யிருப்பர்; அவ்வாணவ மலத் தோடு கர்ம மலமுமுடைய பிரளயாகலர் தேகாபிமானமும் விருப்பு முடையவரா யிருப்பர்; ஆணவம் - கர்மம் - மாயை யென்னும் மும்மலமுமுடையசகலர் தேகாபிமானமும்விருப்பு வெறுப்பு முடையவரா யிருப்பரென்பது பெறப்படுவதாம்.

ஆன்மாவென்னும் பரியாய நாமமுடைய சிவம் ஆணவ மலமென்னும் அஞ்ஞானத்தால் அளவிறந்த சீவர்களாக

விளங்குகின்றது; அவர்கள் தமது நிஜவடிவ சிவத்தைச் சகச மலமென்னும் ஆணவமலத்தா லறியாதிருக்கின்றனர்; அதனல், அவர்களுள், ஒவ்வொருவரும் யான் சீவன், யான் மனிதனென்றற் றொடக்கத்து விபரீதவுணர்வினராய், அது காரணமாகச் சுகதுக்கங்களால் மொத்துண்டு, மனம் புத்தி முதலியவற்ரோடு கூடியிருத்தலை விடாது, சாக்கிர முதலிய அவஸ்தைகளை யடைந்து வருகின்றனர்; அரசர் அமைச்சரோடு கூடிநின்று நட்டாரைக் காத்தல் பகைத்தாரை யழித்தல் முதலிய தமது வியவகாரங்களைச் செய்வதுபோல, சீவர்களும் மனமுதலியவற்ரோடு கூடிநின்று நனக்காண்டல்கனக் காண்டல் முதலிய தமது வியவகாரங்களைச் செய்து வருகின்றனரென்ப துணர்த்துதற் பொருட்டு 'அவை சந்தித்த தான்மாச் சகசமலத்துணரா, தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே' என்று கூறப்பட்டதென்க.

"மானத நினைத்த தைம்பொறி யியற்று
மன்னவர்க் கமைச்சர் போல்"

என்று ஞானவாசிட்டம் கூறுவதுமிங் குணர்தற்பாற்றும்.

ஆன்மா அந்தக்கரணங்களோடு கூடிநின்று சாக்கிர முதலிய அவஸ்தைகளை யடைந்து வருகின்றதென்பது அது கருமவயத்தால் ஒருநிலையினதாகாது வருகின்றதென்பதை யுணர்த்துவதாம்.

ஆணவமலம் ஒன்றாக விருப்பினும் இருள்போலத் தன்னம்சத்தால் பலவாயிருக்கின்றது; விளக்கு எந்தவிடத்து வருகின்றதோ அந்தவிடத்தன்றி வேறிடத்தின்கண் இருள் நீங்காமைபோல, அகம்பிரஹ்மாஸ்மி என்னும் தத்துவஞானம் எவரிடத்துண்டாகின்றதோ அவரிடத்தன்றி மற்றவரிடத்து ஆணவமலம் நீங்குவதில்லையாம்; இதனால், ஆணவமலம் தத்துவ ஞானத்தாலன்றிப் பிறிதொன்றால் கெடுவதில்லையாமென்பது பெறப்படுவதாம். இது திருஞான சம்பந்த சுவாமிகள்

"ஊனத் திருணீங் கிடவேண்டில்
ஞானப் பொருள்கொண் டடிபேணும்
தேனைத் தினியா னமருஞ்சேர்
வானம்மயி லாடு துறையே"

என்று கூறுவதாலும்,

"சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகரு நெறிதா னதுவாகும்"

என்று பிரமகீதை கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

'சகசமலத் துணராது' என்பதனால் சிவரூபமாக விளங்கும் ஆன்மா தன்னுண்மையை மறந்து அந்தக்கரணங்களோடு கூடி நின்று, சாக்கிர முதலிய அவஸ்தைகளை யடைந்து, அவ்

வவ்வவஸ்தைக் கேற்ப விருக்கின்ற தென்பதும், 'அமைச்சர சேய்ப்ப(அரசு அமைப்பு ஏய்ப்ப)' என்பதனால் ஆன்மா அரசன் போலவிருந்து அந்தக்கரணங்களை அமைச்சர்போலக் கொண்டு சாக்கிர முதலிய அவஸ்தைகளை யுடையதாய் வருகின்ற தென்பதும் விளங்குவனவாம்.

(1) சீவரூப ஆன்மா சுரோத்திர முதலிய இந்திரியங்களால் சப்த முதலிய விஷயங்களை யறியுங்காலம் சாக்கிராவஸ்தையாம்; (2) அவ்வான்மாவிற்குச் சாக்கிராவஸ்தையின் வாசனையால் நித்திராகாலத்தி லெதிலுலகந் தோன்றுகிறதோ அது சொப்பனுவஸ்தையாம்; (3) யான் யாதொன்று மறியேன்; நித்திரை யென்னுற் சுகமாயனுபவிக்கப்பட்ட தென்னும் நினைவிற்கேதுவாய அனுபவகாலம் சுழுத்தியவஸ்தையாம். சாக்கிராவஸ்தை ஸ்தூல சரீரத்திலும், சொப்பனுவஸ்தை சூக்கும சரீரத்திலும், சுழுத்தியவஸ்தை காரண சரீரத்திலும் நிகழுவனவாம். சீவரூப ஆன்மாவிற்குச் சாக்கிராவஸ்தையில் ஸ்தானம் நேத்திரமாம்; சொப்பனுவஸ்தையில் ஸ்தானம் கண்டமாம்; சுழுத்தியவஸ்தையில் ஸ்தானம் இருதயமாம். இம்மூன்றவஸ்தையும் சீவர் யாவர்க்கும் பொதுவாயிருப்பனவாம்,

(1) சாக்கிராவஸ்தை: சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தியென மூவகைத்தாயும்; (2) சொப்பனுவஸ்தை: சொப்பன சாக்கிரம், சொப்பன சொப்பனம்,

சொப்பன சுழுத்தியென மூவகைத்தாயும், (3) சுழுத்தி யவஸ்தை: சுழுத்தி சாக்கிரம், சுழுத்தி சொப்பனம், சுழுத்தி சுழுத்தியென மூவகைத்தாயு மிருப்பனவாம்; (1) வர்த்தமான (நிகழ்கால) சாக்கிரத்திலுண்டாகும் பதார்த்த ஞானம் சாக்கிர சாக்கிரமாம்; (2) சாக்கிரத்திலுண்டாகும் சென்ற அல்லது இனிவரும் விஷயங்களைச் சிந்தித்தலாகிய மனோராஜ்யம் சாக்கிர சொப்பனமாம்; (3) சாக்கிரத்தில் பிராந்தியா லுண்டாகும் ஜடசொரூபமாகிய விருத்தி சாக்கிர சுழுத்தியாம் ; (4) சொப்பனத்தில் யதார்த்தமாய பொருளைக் காண்டல் சொப்பன சாக்கிரமாம்; (5) சொப்பனத்தில் கயிற்றரவு முதலிய பிராந்தி வஸ்துக்களைக் காண்டல் சொப்பன சொப்பனமாம்; (6) கண்ட சொப்பனத்தை மறத்தல் சொப்பன சுழுத்தியாம்; (7) சாத்வீக விர்த்தி பூர்வகமாகிய சுகசுழுத்தி சுழுத்தி சாக்கிரமாம்; (8) இராசசவிர்த்தி பூர்வகமாகிய துக்க சுழுத்தி சுழுத்தி சொப்பனமாம்; (9) தாமசவிர்த்தி பூர்வகமாகிய காட (ஆழ்ந்த) சுழுத்தி சுழுத்திசுழுத்தியாம் என்று கூறுவாருமுளர்.

> ''எந்தக்கர ணங்களு மேவனறு
> இதன்வாதனை யால்விட யங்களொடே
> அந்தக்கர ணங்கள் பொருந்தல்களு
> அவைமாய்தல் சுழுத்தி யவத்தையதே''

என்று சசிவன்னபோதம் கூறுகின்றது.

(1) சீவரூப ஆன்மா சாக்கிரத்தில் உலக வியாபாரஞ் செய்யாது, பரமான்ம சிந்தனை (அகம்பிரஹ்மாஸ்மி யென்று பாவனை) செய்வது துரியமாம்; (2) அது சாக்கிரத்திலேயே மனோ வியாபாரஞ் சிறிதுமில்லாது தான் மாத்திரமாக (தனது நிஜவடிவமாயுள்ள சிவமாகவே) இருத்தல் துரியாதீதமாம். இவ்விரண்டும் யோகாப்பியாசமுடையார்க்கன்றி மற்றையோர்க்குச் சித்திப்பதில்லையாம். சீவரூப ஆன்மாவிற்குத் துரியாவஸ்தையில் ஸ்தானம் நாபியாம்; உச்சியாமென்பாருமுண்டு; துரியாதீத அவஸ்தையில் ஸ்தானம் மூலாதாரமாம்.

இவ்விரண்டவஸ்தைகளுள், முன்னது சவிகற்ப சமாதியாம்; பின்னது நிர்விகற்ப சமாதியாம்; (1) ஞாதா - ஞான - ஞேய திரிபுடி விளக்கத்தோடுகூடிய அத்துவிதீயப் பிரஹ்மத்திலுள்ள அந்தக்கரண விர்த்தியி னிலைமை சவிகற்ப சமாதியாம்; (2) திரிபுடித் தோற்றமில்லாத அகண்டப் பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தியி னிலைமை நிர்விகற்ப சமாதியாம். இவ்விரண்டனுள், சவிகற்ப சமாதி சாதனமாம்; நிர்விகற்ப சமாதி பயனும். சவிகற்ப சமாதி சம்பிரஞ்ஞாத சமாதியென்றும், நிர்விகற்ப சமாதி அசம்பிரஞ்ஞாத சமாதியென்றும் கூறப்படும்.

சீவரூப ஆன்மாவிற்கு அந்தக்கரணங்கள் அரசர்க்கு அமைச்சர்உதவியாயிருத்தல் போல விருக்கின்றன; அதனால், அது சாக்கிராதி யவஸ்தைகளாய வியவகாரங்களையுடையதா,

யிருக்கின்றது; அவை தத்துவ ஞானத்தால் அவிச்சை நீங்கு வது வாயிலாக நீங்கிவிடுமாயின், அது யாதோரவஸ்தையுமின் றிப் பரமானந்த போத சொரூபமாகவே விளங்குவதாமென் பது இங்கு முடிவாக வுணர்தற்பாலதாம்.

"கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினருக் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்."

"போத மென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிரு ளாம், தீதி லாவிளக் கெடுத்திருள் தேடவுஞ் சிக்கா, தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை, யேது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்."

என்று தாயுமான சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருப் பது இங்கு ஊன்றி யுணர்தற்பாலதாம்.

(1) சீவரூப ஆன்மா (மனம் - புத்தி - சித்தம் - அகங் காரமென நான்கு பாகுபாடுடைய) அந்தக்கரண மன்று; என தந்தக்கரணமென்றலின்; யாது அந்தக் கரணமன்றன்று அஃது எனதந்தக்கரண மென்பதன்று; இந்திரியம்போல என் னும் வியதிரேக அனுமான வடிவமாகவும், (அந்தக்கரணம் தனக்குத்தான் வேறாக விருப்பதின்மையின், அதன்கண் என தந்தக்கரணமென்னும் வியவகாரம் நிகழாதென்க.)

(2) சீவரூப ஆன்மா ஐந்தவஸ்தை யுடையது; சகசமலத் துணராமையால்; யாது ஐந்தவஸ்தையுடையதன்று அது சகசமலத் துணராததன்று, சிவம்போல

என்னும் வியதிரேக அனுமான வடிவமாகவும் இச்சூத்திரம் இருப்பதறிக.

சாக்கிர முதலிய ஐந்தவஸ்தைகளுள், சாக்கிரமும் சொப்பனமும் சகல நிலையென்றும, சுழுத்தி கேவல நிலையென்றும், துரியமும் துரியாதீதமும் சுத்த நிலையென்றும் சொல்லப்படுகின்றன; இவற்றுள், சுத்தநிலை பெற்றவர்க்கே பிறவி வருவதில்லையாம். இது தாயுமான சுவாமிகள்

“சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றேமே நெஞ்சே பெரும்பிறவி சாராமல்
கற்றேமே மோனக் கரு.”

என்று திருவாய் மலர்ந்திருப்பதால் நன்குவிளங்குவதாம்.

---

## அவதாரிகை.

அவித்தை அல்லது அந்தக்கரணத்தில் ஆன்ம வடிவ சிவத்தின் பிரதிபிம்பமாயுள்ள சீவர்கள் விஷயங்களைச் சுதந்தரமா யறிதலின்றித் தமக்கதிஷ்டானமாயுள்ள சிவத்தின் சந்நிதானத்தா லறிகின்றனவெனல்.

5. விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்விற் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

(இ - ள்.) விளம்பிய - (முன்னர்க்) கூறிய, உள்ளத்து - (சிதாபாச வடிவ) சீவர்களால், மெய் வாய் கண்மூக்கு (செவி)- மெய் - வாய் - கண் - மூக்குச் செவியென்னும் - (ஞான) இந்திரியங்கள், அளந்து - (தத்தமக்குரிய விஷயங்களை இஃ தித்தன்மையதென்று) அளவிட்டு, அறிந்து-(செவ்வையாக) அறிந்து (வருகின்றனவே யன்றித் தாமே சுதந்தரமாக), அறியா - அறிவதில்லையாம், அவைபோல - அவ்விந்திரியங் களைப்போல, அவை - அச்சீவர்களும், தம் தமியருள் - தமக்கு (அதிஷ்டானமாய்) ஏகமாயுள்ள சிவத்தின் சந்நிதானத்தால் (தத்தமக்குரிய விஷயங்களை இஃதித்தன்மையதென்று அள விட்டுச்செவ்வையாகஅறிந்து வருகின்றனரேயன்றி), தாமே - தாமே, உணர்வில் - (சுதந்தரமாக) அறிவதில்லையாம், (சிவத் தின் சந்நிதானத்தால் சீவர்கள் விஷயங்களைச் சுதந்தரமின்றி யறிதல் எவ்வாறெனின், அது), காந்தங்கண்ட பசாசத்து - காந்தத்தைக்கண்ட இரும்புபோல்வதாம், (எ-று).

காந்தத்தின் சந்நிதான மாத்திரத்தால் இரும்பு அசையு மியல்புடையதாதல்போல, சிவத்தின் சந்நிதானமாத்திரத்தால்

சீவர்களும் விஷயங்களையறியு மியல்புடையவ ராகின்றன ரென்பது இவ்வுவமையின் விளக்கமாம்.

இந்திரியங்கள் விஷயங்களைச் சீவர்களா லறிகின்றன வன்றித் தாமே சுதந்தரமாக அறிவதில்லையாம்; அவ்விந்திரியங்களைப்போலச் சீவர்களும் விஷயங்களைச் சிவத்தா லறிகின்றனரன்றித் தாமே சுதந்தரமாக அறிவதில்லையாம்; காந்தக்கல்லின் சந்நிதானத்தால் இரும்பு அசையுமியல்புடைய தாதல்போல, சிவத்தின் சந்நிதானத்தால் சீவர்கள் விஷயங்களையறியுமியல்புடைய ராகின்றனர்; இரும்பு அசைவதற்குக் காந்தக்கல் காரணமாயிருந்தும் அது செய்வதும் செய்விப்பதுமாகிய விகாரமடையாதிருப்பதுபோல, சீவர்கள் விஷயங்களை யறிவதற்குச் சிவம் காரணமா யிருந்தும், அது செய்வதும் செய்விப்பதுமாகிய விகாரமடையாதிருக்கின்ற தென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம். இச்சூத்திரத்தின் முன் மூன்றடி * மறுபொருளுவமையணியாம்; ஈற்றடி § ஒட்டணியாம்.

---

* உவமானத்தையும் உவமேயத்தையும் தனித்தனி வாக்கியங்களாக நிறுத்தி, இடையில் உவமவுருபு கொடுத்துக் கூறுவது மறுபொருளுவமை யணியாம்; உவமவுருபு கொடாமற் கூறின், எடுத்துக்காட் டுவமையணியாம்.

† உவமானமாத்திரங் கூறி, அதனுல் உவமேயத்தைப் பெறவைத்தல் ஒட்டணியாம்; இவ்வொட்டுப் பிறிதுமொழிதலென்றும், நுவலாநுவற்சி யென்றும் கூறப்படும்.



செவியென்பது சொல்லெச்சமாம். ஆங்கு அசைநிலை அத்திரண்டும் சாரியையாம்; ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது; தம் என்பதும் பிரித்துக்கூட்டப்பட்டது. இல் - எதிர் மறைக் குறிப்பு வினைமுற்று. தமி - தனிமை; இங்கு அது தனிமையா (ஏகமா) யுள்ள சிவத்தையுணர்த்தி நின்றது.

'மெய் - வாய் - கண் - மூக்கு - (செவி)' என ஞானேந்திரியம் கூறப்பட்டதாயினும், இனம்பற்றிக் கருமேந்திரியத்தையும், அந்தக்கரணத்தையும் கொள்க. அவையும் சீவர்களாலன்றித் தாமே யியங்குவனவன்றும். அருளென்றது இங்குச் சந்நிதானத்தை; அஃதாவது நேர் அல்லது எதிரென்பதாம்.

மெய் - துவக்கிந்திரியமாம்; அதற்கு விஷயம் பரிசமாம். வாய் - சிஙுவை யிந்திரியமாம்; அதற்கு விஷயம் சுவையாம். கண் - சட்சு விந்திரியமாம்; அதற்கு விஷயம் உருவமாம். மூக்கு - கிராணேந்திரியமாம்; அதற்கு விஷயம் வாசனையாம். செவி - சுரோத்திரேந்திரியமாம்; அதற்கு விஷயம் சத்தமாம்.

சீவர்களை நோக்க இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் சுதந்தரமில்லாதிருத்தல் போல, சிவத்தை நோக்கச் சீவர்களும் சுதந்தரமில்லாதிருக்கின்றன ரென்பதன்றி, அவர்கள் அவைபோலச் சடமாயிருக்கின்றன ரென்பதன்றாம். சீவர்கள் எவ்வாற்றானும் தம்மையும் பொருள் (விஷயங்) களையு மறிதலில்லாத இந்திரிய அந்தக்கரணங்கள்போன் றிருப்பா

ராயின், அவர்தமக்குச் சடத்தன்மை வாய்க்குமே யன்றிச் சித்துத் தன்மை வாய்ப்பதில்லையாம். சீவர்கள் சடத்தன்மை யுடையவராயின், அவர்கள் உணர்த்த உணர்தற்குரியாராத லெங்ஙனமாம்? மேலும், இந்நூல் 'உணர்த்த வுணர்தலின்' என்று கூறுவதும் பழுதாமன்றோ?

ஒருகாலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்த முண்டாயிற்று; யுத்தமுடிவில் தேவர்களுக்கு வெற்றியுண்டா யிற்று; அதனால், அவர்கள் கருவங்கொண்டு இந்தவெற்றி நம் முடைய ஆற்றலா லுண்டாயிற்றென் றெண்ணித் தம்மையே தாம் வியந்து பேசிக்கொண்டனர்; அப்போது இறைவன் அவர்தம் கருவத்தை யடக்குதற்பொருட்டு யட்சவடிவங் கொண்டு அவர்களுக்கெதிரே வந்துநின்றனன்; தேவர்கள் இறைவன் யட்சவடிவங்கொண்டுவந்திருக்கின்றானென்பதை யறியாது அக்கினிதேவனை நோக்கி,'இந்தயட்சபுருஷன்யார்? அவனை நீ இன்னானென் றறிந்துவரக் கடவாய்' என்று கூறி யனுப்பினர். அவன் அவர்கள் கூறியவாறே சென்று யட்ச புருஷனை நோக்கி, 'நீ யார்?' என்று வினவினான்; அதற்கு அந்த யட்சபுருஷன் 'நீ யார்?', என்று வினவினான்; அதற்கு அவன் 'யான் அக்கினி தேவன்' என்று கூறினான். அது கேட்டயட்சபுருஷன்'உனது ஆற்றலெத்தன்மையது? அதனை நீ கூறக்கடவாய்' என்று வினவினான். அதற்கு அக்கினி தேவன் 'இவ்வுலகத்துள்ள பொருளனைத்தையும் யான்

எரித்துவிடுவேன்; அதுதானெனதாற்றல்' என்று கூறினான்; அதுகேட்ட யட்சபுருஷன் ஒரு துரும்பையெடுத் தவனெதிரேபோட்டு, 'உனக்காற்றலிருக்குமாயின், நீ இதனை எரித்துவிடக்கடவாய்' என்று கூறினான்; அக்கினிதேவன் அத்துரும்பினுள் பிரவேசித்து, அதனை எரித்துவிட முயன்றான்; முயன்றும், அவனுக் கதனை யெரித்துவிடுவது முடியாதாயிற்று; அதனால், அவன் நாணமடைந்து அவனிடத்தி னின்றும் திரும்பித் தேவர்களிடத்திற்கு வந்து 'அந்த யட்ச புருஷன் இன்னானென்பதறித லெனக்கு முடியாது' என்று கூறினான். பின்னர் வாயுதேவன் தேவர்களது வேண்டுகோளால் யட்சபுருஷனிடத்துச் சென்று 'நீ யார்?' என்று வினவினான்; அதற்கு அந்த யட்ச புருஷன் 'நீ யார்?' என்று வினவினான்; அதற்கவன் 'யான் வாயுதேவன்' என்று கூறினான். அதுகேட்ட யட்சபுருஷன் 'உனதாற்றலெத்தன்மையது? நீ அதனைக் கூறக் கடவாய்' என்று வினவினான்; அதற்கு வாயுதேவன் 'யான் இவ்வுலகத்துள்ள பொருளனைத்தையும் அதிசீக்கிரத்தில் நிலைகுலையச் செய்துவிடுவேன்' என்று கூறினான்; அதுகேட்ட யட்சபுருஷன் ஒருதுரும்பையெடுத் தவனெதிரே போட்டு 'உனக்காற்றலிருக்குமாயின், நீ இதனை நிலைகுலையச் செய்துவிடுவாய்' என்று கூறினான்; வாயுதேவன் அத்துரும்பினுள் பிரவேசித்து, அதனை நிலைகுலையச் செய்துவிட முயன்றான்; முயன்றும், அவனுக்கதனை நிலைகுலையச் செய்துவிடுவது முடியாதாயிற்று; அதனால், அவன்

ஞாணமடைந்து, அவனிடத்தினின்றுந் திரும்பித் தேவர்க ளிடத்திற்கு வந்து, 'அந்த யட்சபுருஷனை இன்னானென்ப தறிதலெனக்கு முடியாது' என்று கூறினான். அப்பால் தேவர்கள் இந்திரனை நோக்கி, 'நீ சென்று அந்த யட்சபுருஷ னின்னானென்பதை யறிந்து வரல்வேண்டும்' என்று பிரார்த் தித்தனர்; இந்திரன் அவர்தம் பிரார்த்தனைக் கிணங்கி, யட்ச புருஷ னிருக்குமிடத்திற்குச் சென்றான். உடனே அந்த யட்சபுருஷன் மறைந்து விட்டான். இந்திரன் முதலிய இமையவர் யட்சபுருஷன் மறைந்துவிட்டமையைக் கண்டு மயங்கி நிற்கும்போது, உமாதேவியார் அவர்களுக்கெதிரே ஆகாயத்தில் வந்து நின்றனர். அவர்கள் அவரை நோக்கி 'அந்த யட்சபுருஷன் யார்?' என்று வணக்கமாகக் கேட்டனர். அதற்கு அவர் 'உங்கள் கருவத்தை யடக்க இறைவன் யட்ச வடிவங் கொண்டு வந்தான்; அவனது கருணையாலே உங்க ளுக்கு வெற்றி யுண்டாயிற்று; உங்களுக்குச் சுதந்தரமாக வெற்றியடைதற்குரிய ஆற்றலில்லை' என்று கூறினார். அது கேட்ட அவர்கள் இறைவனே யட்சபுருஷனாக வந்தான்; அவனன்றி ஓரணுவு மசையாது என்பதுணர்ந்து கருவ மின்றி வாழ்ந்து வந்தனர் என்று கேனோபநிஷத்துக் கூறுவ தால், சிவத்தின் பிரதிபிம்பங்களாயுள்ள சீவர்கள் "செய்கை யுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச்சிலைமலை" போலிருக் கும் தமது அதிஷ்டானத்தின் (சிவத்தின்) சந்நிதியால் தத் தங் கருமத்திற்கேற்றவாறு காண்டல் கேட்டல் முதலிய வியா

பாரங்களை யுடையவராய், தத்தங் கருமபலன்களை யனுபவித்து வருகின்றனரென்பது விளங்குவதாம்.

சீவர்கள் சிவத்தின் பிரதிபிம்பங்களாக விருக்கின்றனரென்பது,

"நித்திய மாகு மான்மா யேகமாய் நிகழ்த்து மாயா, சத்தியா யளப்பில் பேத மாமுறு பேதஞ் சாற்றில், வைத்த நீர்க் குடங்க டோறுந் தோன்றிடு மதியம் போல, உய்த்திடு மூபாதி தன்னாற் பற்பல வுருவந் தோன்றும்."

என்று கூர்ம புராணம் கூறுவதாலும்,

"இடம்பெறுஞ் சோதி ரூப மேகமா கியும்பல் கோடி, உடம்புக டோறு மங்கங் குறைகின்ற தெவ்வா றென்னில், படர்ந்தொளி பரப்புஞ் சோதிப் பரிதியொன் றாயுந் தெண்ணீர்க், கடந்தொறு மோரோர் விம்பங் காட்டுதல் போலு மன்றே."

என்று பிரபோத சந்திரோதயங் கூறுவதாலும்,

"கண்ட புனற்கடத்திற் கதிரொளிகள் பாய்ந்தாற்போல்,
கொண்ட சொரூபமதைக் கூர்ந்தறிவ தெக்காலம்."

என்று பத்திரகிரியார் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் நிகழும் சரீரத்துள்ள அந்தக்காணத்துள் (அகங்காரத்துள்) சிவத்தின் பிரதிபிம்பங்களாயுள்ள சீவர்கள் தமது அதிஷ்டானமாயுள்ள சிவத்தின்

சந்நிதான விசேஷத்தால் உள்விஷயமாயுள்ள சுகதுக்க முத லியவற்றைப் புத்தியாலறிகின்றனர்; வெளி விஷயமாயுள்ள கடபட முதலியவற்றைப் புத்தியோடு கூடியுள்ள சட்சு முத லிய இந்திரியங்களா லறிகின்றனர்; வசனித்தல் முதலிய செயல்களை வாக்கு முதலிய கருமேந்திரியங்களாற் செய்கின்ற னர்; சுழுத்தியில் அவித்தையில் சிவத்தின் பிரதிபிம்பங்களா யுள்ள அவர்கள் தமது அதிஷ்டானமாயுள்ள சிவத்தின் சந்நி தான விசேஷத்தால் அங்கு நிகழும் சுகத்தையும் இருளையும் அவித்தியாவிருத்தியா லறிகின்றன வென்பது இங்குச் சாஸ் திரார்த்தமாம்.

நம்மனோர் கடபட முதலியவற்றைக் கண் முதலியவற்று லறிவதற்குச் சூரியனது சந்நிதான விசேடம் காரணமாயிருத் தல்போல, சீவர்கள் சுகதுக்க முதலியவற்றைப் புத்தி முத லியவற்று லறிவதற்குச் சிவத்தின் சந்நிதான விசேடம் காரணமா யிருக்கின்றதென்பது இங்குணர்தற்பாற்றும்.

சிவம் வியாபகமா யிருத்தலின் அஃது ஒன்றற்குச் சந்நிதானமா யிருப்பது எவ்வாறு பொருந்துமெனின், வியா பகமா யுள்ள ஆகாயத்திற்குக் கடபட முதலியவற்றினிருப் பால் சந்நிதானம் கற்பிக்கப்படுவதுபோல, சிவத்திற்கும் தேகேந்திரிய முதலியவற்றின் இருப்பால் சந்நிதானம் கற் பிக்கப்படுகின்றது; அதனுல், அது பொருந்துமென்க.

சட்சு முதலிய இந்திரியங்கள் சடப்பொருளா யிருத்த லின், அவை சீவர்களால் தத்தம் விஷயங்களை யறிகின்றன

வென்பது எவ்வாறு பொருந்துமெனின்'இவ்வெழுத்தாணி யா னெழுதியது' என்புழி, கருவியாகிய எழுத்தாணி கருத்தா வாகக் கூறப்படுதல்போல, இங்குக் கருவியாகிய இந்திரியங் கள் கருத்தாவாகக் கூறப்பட்டன; அதனால், அவ்வாறு கூறு தல் பொருந்துமென்க. இவ்வாறு கூறுதல் கருத்தாவின் தரு மத்தைக் கருவியின்மேலேற்றிக் கூறும் உபசார வழக்காம். " ஆன்மா மனத்தோடும், மனம் இந்திரியத்தோடும், இந்திரி யம் பொருளோடும் கூடும்; அதனாற் காட்சியுணர்வு நிகழும்." என்று தருக்க நூல் கூறுவது மிங்குணர்தற்பாற்றும்.

பிரதிபிம்ப விளக்குப் பிம்பவிளக்கைவிட்டிராமைபோல, பிரதிபிம்பராகிய சீவர்கள் பிம்பமாகிய சிவத்தைவிட் டிருப்ப தில்லை; பிரதிபிம்ப விளக்குப் பிம்ப விளக்கால் விளங்குவது போல, பிரதிபிம்பராகிய சீவர்கள் பிம்பமாகிய சிவத்தால் விளங்குகின்றனர்; பிரதிபிம்ப விளக்கும் கடாதி விஷயங் களை விளக்குவதுபோல, பிரதிபிம்பராகிய சீவர்களும் கடாதி விஷயங்களை யறிகின்றனர்;பிரதிபிம்ப விளக்கின் தருமம்(கட பட முதலியவற்றை விளக்குதல்) பிம்பவிளக்கிற் கில்லாமை போல, பிரதிபிம்பராகிய சீவர்களின் தருமம் (கடபட முதலிய வற்றைக் காண்டல் முதலியன) பிம்பமாகிய சிவத்திற்கில்லை ; பிம்பவிளக்குப் பிறிதொன்றால் விளங்காது சுவயம் பிரகாசமா யிருப்பதுபோல, சிவம் பிறிதொன்றால் விளங்காது சுவயம் பிரகாசமா யிருக்கின்றது; பிரதிபிம்ப விளக்கின் பிரகாசமும்

கடபட முதலியவற்றின் பிரகாசமும் பிம்பவிளக்கை யாதார மாகக் கொண்டிருத்தல்போல, பிரதிபிம்பராகிய சீவர்களின் விளக்கமும் கடபட முதலியவற்றின் விளக்கமும் பிம்பமாகிய சிவத்தை யாதாரமாகக் கொண்டிருக்கின்றனவென்பது இங்கு நன்குணர்தற்பாலதாம்.

தேகத்துள்ள அந்தக்கரணத்துள் சிவத்தின் பிரதிபிம்ப மாயுள்ள சீவர்கள் இந்திரியங்கள் வாயிலாக விஷயங்களை யறிதல் ஒரு வீட்டிலுள்ள நிலைக்கண்ணுடியுள் தீபத்தின் பிரதி பிம்பமாயுள்ள விளக்கு (அவ்வீட்டின்) பலகணிவாயிலாகப் பொருள்களை விளக்குவது போலாமென் றிங்குணர்தற் பாற்றும்.

சப்த முதலிய விஷயங்களை யிந்திரியங்களும், அவற்றை அந்தக்கரணங்களும், அவற்றைச் சீவர்களும், அவர்களைச் சிவமும் முறையே விளக்குகின்றன; அவற்றுள்ளும், இந்திரியங்கள் விஷயங்களையும், அந்தக்கரணங்கள் விஷயங்களோடு இந்திரியங்களையும், சீவர்கள் விஷய இந்திரியங்களோடு அந்தக்கரணங்களையும், சிவம் விஷய - இந்திரிய - அந்தக்கரணங்களோடு சீவர்களையும் விளக்குகின்றன. விஷயம் இந்திரியத்தையும், இந்திரியம் அந்தக்கரணத்தையும், அந்தக்கரணம் சீவர்களையும், சீவர்கள் சிவத்தையும் எதிரிட்டு விளக்குவதில்லையாம்; சிவம் தனக்கு மேற்பட்டதொன் றின்றிச் சுவயம் பிரகாசமா யிருத்தலின், அதனை விளக்குவதொன்றில்

லையாம்; அதுவே சுதந்தர ஞானசொரூபமா யிருப்பதாம்; அதன் சந்நிதானத்திலே காந்தங்கண்ட பசாசம் போல இந்திரிய முதலியவனைத்தும் தத்தம் வியாபாரங்களைச் செய்கின்றனவென்பதை அதிகாரி புருஷர்க் குணர்த்துதற்பொருட்டு இச்சூத்திரம் கூறப்பட்டதென்க.

காந்தங் கண்ட பசாசம்போல, சிவ சந்நிதானத்திலே சர்வ வியவகாரமும் நிகழுகின்றனவென்பது பின்வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்குவதாம்.

## கூர்மபுராணம்.

"மாயையைக் கடிந்த வான்மா மாயையாஞ் சகத்தை நாளும்,ஒய்வற நடத்தே னென்னை யன்றிமற் றதுவு மொல்லா, தாயவை யென்கொ லென்னிற் காந்தமுன் றூடு மூசி, யேயுற வென்மு னிந்த விருஞ்சக நடக்கு மன்றே."

## பிரபோத சந்திரோதயம்.

"போந்துவிகா ரஞ்சிறிதும் பொருந்தாது தன்னியல்பிற் பொருந்தி நிற்பக், காந்தமசை யாதிருந்து மக்காந்தத் தெதிரூசி கம்பித் தாற்போல், வாய்ந்தவதன் சந்நிதியில் மாயை விகா ரம்புரிந்து மணிச்சூன் முற்றி, யேய்ந்தபெயர் மானதனென் றெடுத்தோத வொருமகவை யீன்றாள் மன்னோ"

## விவேக சிந்தாமணி-வேதாந்த பரிச்சேதம்.

"அசேதன அகங்காரம் பாகியாப்பியந்தர விஷயங்களை யறிவதெப்படி யெனின், காந்தக் கல்லின் சந்நிதானத்

தில் ஊசி சேஷ்டிப்பதுபோலும், வெயிலிற்பிடித்த கண்ணுடியினுல் உள்மனையிருள் நீங்குவதுபோலும், பிரத்யகாத்ம சந்நிதானத்தில் அச்சைதந்யப் பிரதிபிம்பந் தன்னிடத்திருக்கப் பெறுதலால் அச்சடமான அகங்காரமே பாகிய விஷய அறிவோடு கூடிச் சாக்கிர சொப்பனங்களிற் சஞ்சரித்துச் சுழுத்தியி லடங்கும்.''

## திருமந்திரம்.

''மெய்வாய்கண் மூக்குச் செவியென்னு மெய்த்தோற்றத், தவ்வாய வந்தக் கரண மகிலமும், எவ்வா யுயிரு மிறையாட்ட வாடலால், கய்வாயி லாநிறை யெங்குமெய் கண்டதே.''

## பட்டினத்தடிகள்.

''ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன்ருெடொன்றை, மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை, காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி, ஆட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே.''

''மறையோ ஞெருவன் றன்னுடைய மகிமை கடந்து சூத்திரனுய், முறைதீர் வதுபோல்'' (அநாதி அஞ்ஞானத்தால்) தன்னுடைய மகிமை கடந்து சீவனுய் முறை தீர்ந்துள்ள ஆன்மா அந்தக்கரண முதலியவற்றின் கற்பித சம்பந்தத்தால் அப்பிரகாச வடிவம்போன் றிருக்கின்றது; அதனுல், அது தனது நிஜவடிவத்தின் சந்நிதானத்தாலே விளங்குவதற்

சூரியதா யிருக்கின்றது; அது காண்டல் கேட்டல் முதலிய வியாபாரங்களைச் செய்வதற்கு அந்தக்கரணங்களும் இந்திரியங்களும் அதற்குக் கருவியா யிருக்கின்றன; அது தத்துவ ஞானத்தால் தன்னை உள்ளவாறறியுமாயின், "ஆசைவன் பாசத் திரளினுற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக்கணுங்கி,எசுறு போகக் கதைகளால் மொத்துண் டிச்சைமுட் கோலினு லுலைந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே சுழன்று, வீசுமா மோகத் தளிர்நிழற் றுயிலும் வீரனே சீவனு மெருது."

என்னும் நிலைமையினின்றும் நீங்கிப் பரமாநந்த போத சொரூபமாகவே விளங்குவதா மென்பது இங்கு முடிவான பொருளாமென்க. இது

## திருமந்திரம்.

"சீவ னென்னச் சிவனென்ன வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலார்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே"

"சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்று னுலகுறு நம்பனு மாமே."

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை."

என்று கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

அவதாரிகை.

காரியமாய உலகத்திற்கும் அதன் பரிணாமி யுபாதான காரணமாய மாயைக்கும் விலட்சணமா யுள்ள ஆன்மவடிவ சிவத்தின் சொரூபவிலக்கணங் கூறல்.

**6.** உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

(இ - ள்.) மன்னுலகு - நிலைபெற்ற மெய்யுணர்வினை யுடைய பெரியோர், உணருருவெனின் - (சிவம் இன்ன தன்மைய தென்று சுட்டி) அறியப்படுவதாகிய பொருளா மெனின், அசத்து - அசத்தாகிய (சத்தின் வேறாகிய) உலகமாம், உணராதெனின் - (இன்ன தன்மையதென்று சுட்டி) அறியப்படுத லில்லாத பொருளாமெனின், இன்மை - (உண்மையில்) இல்லாமையைத் தனக்கு வடிவமாகவுடைய மாயையாம், (அதனால்), இருதிறனல்லது - இவ்விரண்டு பகுதியுமல்லாத பொருள், சிவசத்தாம் - சத்ரூபப் பிரஹ்ம (சிவ)மாம், என - என்று (அதனை அதிகாரி புருஷர் அறியு மாறு), இரண்டு வகையின் - இவ்விரண் டேதுக்களாலும், இசைக்கும் - கூறுவர், (எ - று).

சிவம் இன்ன தன்மையதென்று குறித்தறியப்படும் பொருளாயின், உலகமாம்; இன்ன தன்மையதென்று குறித்

தறியப்படாத பொருளாயின், மாயையாம்;அஃது அவ்விரண்டற்கும் வேறாய்ச் சச்சிதாநந்த வடிவமாயிருக்கின்றதென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

ஆம் என்னும் ஆக்கச் சொற்களும், முற்றும்மைகளும் தொக்கு நின்றன; உணராது, அல்லது என்பன எதிர்மறை வினையாலணையும் பெயர்; உணராதது என்பது செய்யுள்விகாரத்தால் உணராது என வந்தது; எனின் என்பது உணராது என்பதனோடுஞ் சென்றியைந்து நின்றது;இன் என்பது அல்வழிக்கண் தவிர்வழிவந்த சாரியை. உலகு என்றது இங்குயர்ந்தோரை.

சிவம் சத்தாம் எனக் கூறப்பட்ட தாயினும், இனம்பற்றி அது சித்தும் ஆநந்தமுமாமெனக் கொள்க; என்னை? "சச்சிதாநந்த சங்கரன்" என ஆன்றோர் கூறுதலின். சிவம் சச்சிதாநந்த வடிவமா யிருக்கின்றதென்பது அதன் சொரூப லட்சணமாம்.

இச்சூத்திரம் கடம் படம் அன்று என்பதுபோல, சிவம் உணருரு (உலகம்) அன்று; உணராதது (மாயை) அன்று என்று அவ்விரண்டினுக்கும் வேறாகச் சிவத்தை யறிவித்தலின், சிவம் இருதிறனல்லது என்பது அதன் அதத்வியாவிருத்தி லட்சணமாம்; அஃதாவது சத்ரூபப் பிரஹ்மத்தை உலகத்தினின்றும் மாயையி னின்றும் வேறுபிரித் தறிவிப்பதாம்.முன்னர்ச் சிவத்தின் தடத்த லட்சணங் கூறிய இந்

நூல் இங்கு அதன் சொரூப லட்சணமும் அதத்வியாவிருத்தி லட்சணமும் கூறியதென்க.

சிவம் நிவிர்த்தியில்லாததாக விருத்தலின் சத்து என்றும், சடத்திற்கு விலட்சணமான பிரகாச வடிவமாக விருத்தலின் சித்து என்றும், துக்கத்திற்கு விலட்சணமான முக்கியப் பிரீதிக்கு விஷயமா யிருத்தலின் ஆநந்தமென்றும் கூறப்படுகின்றது. சிவம் சச்சிதாநந்த வடிவமாக விருப்பதன்றி, நித்தியம் - பூரணம் - ஏகம் - பரமார்த்தம் - நிதானம் - சாந்தம் - சத்தியம் - கேவலம் - துரியம் - சமம் - கூடஸ்தன் - சாட்சி - சுத்தம் - இலக்கியம் - சநாதநம் - தத்துவம் - விண் - சோதி - ஆன்மா - முத்தம் - விபு - சூக்குமம் - அசலம் - நிரஞ்சனம் - அமிர்தம் - அப்பிரமேயம் - விமலம் - வசநாதீதம் - அநாமயம் - அசங்கம் - அதுலம் - நிரந்தரம் - அகோசரம் - அகண்டம் - அசம் - அநந்தம் - அவிநாசி - நிர்க்குணம் - நிட்களம் - நிரவயவம் - அநாதி - அசரீரம் - அவிகாரம் - அத்துவிதம் என்றற்றொடக்கத்து வடிவமாகவு மிருக்கின்றதென்பதும் இங்குணர்தற் பாலதாம்.

சிவம் இவ்வாறு இருப்பதன் விளக்கம் கைவல்ய நவநீத வசன விறுவிடையில் (243-வது பக்கமுதல் 247-வது பக்கம் வரையில்) எழுதப்பட் டிருக்கின்றது; அதனை ஆண்டுக் காண்க.

இச்சூத்திரம் காரியமாகிய உலகத்திற்கும் அதன் பரிணாமி உபாதான காரணமாகிய மாயைக்கும் வேறாயுள்ள

சிவம் சத்வடிவமாமெனக் கூறினமையின், அவை சத்தினும் வேறானவையா மென்பது தானே பெறப்படுவதாம். சிவசத்தினும் வேறாயுள்ள உலகத்தையும் மாயையையும் இச்சூத்திரம் முறையே அசத்தென்றும் இன்மையென்றும் கூறினமையின், அசத் தென்பதற்கும் இன்மை யென்பதற்கும் பொருள் ஒன்றேயா மென்பது நன்கு விளங்குவதாம். அசத்தினும் வேறு சத்தாம்; இன்மையினும் வேறு உண்மையாம்; ஆகவே, சத்தே உண்மையாம்; அசத்தே இன்மையாம்; இதனால், சிவம் சத்வடிவ உண்மையா யிருக்கின்றது; உலகமும் மாயையும் அசத்வடிவ இன்மையா யிருக்கின்றன வென்பது பெறப்படுவதா மென்க.

உலகம் இது கடம் இது படமென்றற் றொடக்கத்து வடிவமா யின்னதன்மையதென்று சுட்டி யறியப்படுவதாக விருத்தலின், அதனை 'உணருரு' என்றும், மாயை யின்ன தன்மையதென்று சுட்டி யறியப்படாததாக விருத்தலின், அதனை 'உணரா(த)து' என்றும் இச்சூத்திரம் கூறியதென்க. பரிமேலழகர் திருக்குறளின் 'இருள்சே ரிருவினையும்' என்னும் செய்யுளி னுரையில் "இன்னதன்மைத்தென ஒருவரானுங் கூறப்படாமையின் அவிச்சையை இருள் என்றும்... கூறினர்" என்று கூறியிருப்பதும், விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்தில் "சிந்திக்கக் கூடாத சத்தியுள்ளதாயும் யுக்திக்கு நிற்காததாயு மிருத்தலின் மாயையெனப்படும்" என்று

கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம். தத்துவாநுசந்தானம் முதற் பரிச்சேதத்தில் "இனி அவ்வஞ்ஞானத்தினிலக்கணம் சொல்லப் படுகின்றது ; சத்ய பதார்த்தத்தினும் அசத்திய பதார்த்தத்தினும் விலட்சணமாவது யாதோ அஃதுஅஞ்ஞான மெனப்படும்; அஃதாவது சத்தியமாகவேனும் அசத்தியமாக வேனும் நிரூபிக்க முடியாதது அஞ்ஞான மெனப்படும். அஞ்ஞானத்தைச் சத்தியமெனக் கொண்டால், சத்தியமாகியபிரஹ்மத்தைப் போல அது நாசமாகாதிருத்தல் வேண்டும்; ஆனல், பிரஹ்ம ஞானத்தால் அது நாசமாய்விடுகின்றது; ஆகையால் அவ்வஞ்ஞானத்தைச் சத்தியமாகவும் நிரூபித்தல் முடியாது; அவ்வஞ்ஞானத்தை அசத்தியமாகக் கொண்டால், அசத்தியமான மலடி மகனைப்போல அது பிரத்தியட்சமாதல் கூடாது; ஆனல், அவ்வஞ்ஞானமோ 'நான் பிரஹ்மத்தை அறியேன்' என்னும் பிரத்தியட்ச அனுபவத்திற்கு (ஞானத்திற்கு) விஷயமாகவே தோன்றுகின்றது; ஆகையால், அவ்வஞ்ஞானத்தை அசத்தியமாகவும் நிரூபித்தல் முடியாது. இக்காரணம் பற்றி 'அவ்வஞ்ஞானம் அநிர்வசநீயம்' என்று கூறப்படுகின்றது. 'அசத்விலட்சணம் அஞ்ஞானம்' என்னு மிம்மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமா மெனின், மலடிமைந்தன் முதலிய அசத்திய பதார்த்தங்களினும் விலட்சணமான சத்தியப் பிரஹ்மத்தின்கண் அவ் விலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும்; அவ் வதிவியாப்தி தோஷத்தை நீக்குதற் பொருட்டு அவ்விலக்கணத்தில் 'சத் விலட்சணம்' என்

பது கூறப்பட்டது. பிரஹ்மம் சத்தினும் விலட்சண மன்று; ஆகையால், அதனிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. 'சத் விலட்சணம் அஞ்ஞானம்' என்னு மிம்மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமா மெனின், சத்தியப் பிரஹ்மத்தினும் விலட்சணமான மலடிமகன் முதலிய அசத்திய பதார்த்தங்களிடத்து அவ் விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ் வதிவியாப்தி தோஷத்தை நீக்குதற் பொருட்டு அவ் விலக்கணத்தில் 'அசத் விலட்சணம்' என்று கூறப்பட்டது: மலடிமகன் முதலியன அசத்தினும் விலட்சணமன்று; ஆகையால், அவற்றினிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. வாஸ்தவமாக விசாரித்துப் பார்த்தாலோ சத்விலட்சணம் அஞ்ஞான மென்னு மிம்மாத்திரம் அஞ்ஞானத்திற்கு இலக்கணமா மெனல் போதும்; அசத் என்னும் பதம் வீணேயாம்; ஏனெனின், அசத் வஸ்து ஒன்றுளதாயின், அதற்கு அசத்துத் தன்மை சம்பவியாதாகும். அசத் வஸ்துவே யாதுமில்லையாயின், எதனிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும்? அவ்வஞ்ஞானத்தி னிலக்கணத்தில் 'அசத் விலட்சணம்' என்னு மெப்பதங்கள் நூலாசிரியர்களால் கொடுக்கப்பட்டனவோ அவை கேவலம் சீடர்களின் புத்தி விருத்திக்காகக் கொடுக்கப் பட்டனவாம்." என்று கூறியிருப்பதை ஊன்றி நோக்குவார்க்கு உணராதது (மாயை) சத்ரூபப் பிரஹ்மத்தினும் வேறு என்று இச்சூத்திரம் கூறியதன் அழகு செவ்விதாக விளங்குவதாம். மாயை சத்ரூபப் பிரஹ்

மத்தினும் வேறு என்பதனுலேயே அதன் காரியமாய உலக மும் அதனினும் வேறு என்பது தானே பெறப்படுமாயினும், காரண காரிய கற்பனைகட்குச் சிவசத்து அப்பாற்பட்டதென் பது மாணவர்கட்கு நன்கு விளங்குதற் பொருட்டு, சிவசத்து உணருருவினும் வேறு என்று கூறப்பட்டதென்க. பரிமே லழகர் "எப்பொருளெத்தன்மைத் தாயினும்"என்னும் குறளி னுரையில் "அஃதாவது (மெய்யுணர்வாவது) * * காரண காரியங்களிரண்டு மின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம்" என்று கூறியிருப்பதும்,

"சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்புணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியு மன்றே."

என்று சிவஞான சித்தியார் கூறுவதும், இங்குணர்தற் பாலன வாம். இதனுல், காரண காரிய கற்பனையற்ற பொருள் சிவ சத்தாமென்பது நன்கு விளங்குவதாம்.

மாயையின் பரிணமமாகிய (திரிபாகிய) உலகம் இல்லை இருப்பது; பொய் மெய்; விளக்கம் அஃதின்மை யென்றற் ருெடக்கத்து வியவகார வடிவமாக விருத்தலின், கானல்நீர் - கிளிஞ்சில் வெள்ளி - கந்தர்ப்ப நகரம் - மலடிமைந்தன் - முயற் கோடுமுதலியவனைத்தும் உலகத்தினும் வேருனவையன்ரும்; அதனுல், அவை உணராதது என்பதன்கண் சேராவாம். இது

## சூதசங்கிதை.

“இல்லையிருப் பதுபொய்மெய் விளக்கமஃ தின்மை யென விவைமுன் ஞகச், சொல்லும்விவ காரமெலா மாயை யிறைற் ருனின்ப சொருப னென்னும், வல்லசிவன் கற்பித்த மாயாகா ரியப்பவஞ்ச மருவு தோற்றம், செல்லலுறு விவகார திசையினன்றிப் பரமார்த்தத் திசையி னில்லை.”

“வாசகவாச் சியபாவ மிலக்கியநல் லிலக்கணபா வங்கண் முன்ஞப், பேசவரு பவையாவும் விவகார தசையினன்றிப் பிறங்கா நின்ற, மாசகன்ற பரமார்த்த நிரூபணத்தி லில்லை” என்று கூறுவதால் செவ்விதாக விளங்குவதாம்.

சிவம் காரிய வடிவ உலகமும் காரணவடிவ மாயையு மாகா திருக்கின்றது; அது போதக்கண் விழிப்புடையார்க் கன்றி ஏனையோர்க்கு விளங்காதென்பது பின்வரும் பிர மாணங்களால் நன்கு விளங்குவதாம். அவை வருமாறு:—

### விவேக சூடாமணி.

“ஆனதா லறிபொருட்கு மறிபடாப் பொருளி னுக்கு
மேனிலை யறிவே மெய்யாய் மேவிய வான்மா நீயே”

### சசிவன்ன போதம்.

“அறியாப்பொருள் காரண மாயைகுறித்
தறியும்பொருள் காரிய மாமுலகிந்

நெறியாற்றிகழ் நான்மறை யந்தமெலாம்
நீயன்றென வோது நிரந்தரமே."

"அறியும் பொருளன் றறியாப் பொருளன்
றறிவாகிய நீயெனு மப்பொருள்தான்
பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக்கண்விழித் தறியும் பொருளே."

**கைவல்லிய நவநீதம்.**

"அறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை
அறிபொரு ளாகு முன்னை யனுபவித் தறிவாய் நீயே."

காரியமாகிய உலகுபோல, அதன் பரிணாமி உபாதான காரணமாகிய மாயையும் பாமார்த்த (உண்மை) நோக்கில் பொய்யாக விருக்கின்ற தென்பதை அதிகாரி புருஷர்க்கு நன்கு விளக்குதற் பொருட்டு இச்சூத்திரம் 'உணருரு' என்று கூறியதனோடு நில்லாது 'உணரா(த)து இன்மை' என்றும் கூறியதென்று இங்குணர்தல் வேண்டும்.

ஆகாயத்தில் நீலநிறம் கற்பிதமா யிருத்தல்போல, சிவத்தில் (சத்ரூபப் பிரஹ்மத்தில்) மாயையும் அதன் காரியமாகிய உலகமும் கற்பிதமா யிருக்கின்றன; ஆகாயத்தினும் வேருக நீலநிற மில்லாமைபோல,சிவத்தினும் வேருக மாயையும் அதன் காரியமாகிய உலகமுமில்லை; நீலநிறம் ஆகாயமாகாமைபோல, மாயையும் உலகமும் சிவமாகா திருக்கின்றன

வென்பது உணரப்படுமாயின், சிவம் உலகமாகாதும் மாயை யாகாதுமிருப்பினும், அவை சிவத்தினும் வேறாக இருப்ப தில்லை யென்பது நன்கு விளங்குவதாம்.

"பற்று மாகி வானு ளோர்க்குப் பல்கதி ரோன்மதிபார்
எற்று நீர்தீக் காலு மேலை விண்ணிய மானனொடு
மற்று மாதோர் பல்லுயிராய் மாலய னும்மறைகள்
முற்று மாகி வேறுமானான் மேயது முதுகுன்றே."

என்று திருஞான சம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந் திருப் பதும் இதனை நன்கு விளக்குவதாம்.

இச்சூத்திரம் அவாங்மனோகோசரமாயுள்ள சிவம் (வாக் கிற்கும் மனத்திற்கும் எட்டாதுள்ள சத்ரூபப் பிரஹ்மம்) உலகமும் மாயையும் அன்றெனக் கூறுவது வாயிலாக, அதனை அறிவித்தவாறு இங்குணரப் படுமாயின், அதிகாரி புருஷர் ஆன்மவடிவ சிவத்தை உலகமும் நானன்று அதன்காரணமாய மாயையும் நானன்று என்று அவற்றை நிஷேதித்தல் வாயி லாகத் தமது நிஜவடிவமா யறியலா மென்பது செவ்விதாக விளங்குவதாம். இது தாயுமானவர்

"வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து வாய்க்கும் படிக்குபாயம், வருவித் துவட்டாத பேரின்ப மானசுக வாரி யினை வாய்மடுத்துத், தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்று காண்."

என்று திருவாய்மலர்ந் திருப்பதாலும் விளக்குவதாம்.

இச்சூத்திரம் 'உணருருவசத்து' 'உணரா(த)து இன்மை' 'இருதிறனல்லது சிவசத்து' எனக் கூறியவாற்றால், நித்தியா நித்திய வஸ்து விவேகமும் கூறியவாறறிக. சிவம் நித்திய வஸ்துவாம்; ஏனையவை அநித்திய வஸ்துவாம். பின்னின்மைக் கெதிர்மறை யாகாதது (அழியாதது) நித்திய வஸ்துவாம்; பின்னின்மைக் கெதிர்மறையாவது (அழிவது) அநித்திய வஸ்துவாம்.

பாரமார்த்திக பதார்த்தம், வியாவகாரிக பதார்த்தம், பிராதிபாசிக பதார்த்தம், துச்ச பதார்த்தமென்னும் பதார்த்த வகை நான்கனுள், சிவம் பாரமார்த்திக பதார்த்தமாம்; உலகமும் மாயையும், வியாவகாரிக பதார்த்தமாம்; (உலகத்தின் ஒரு பகுதியாய) கயிற்றரவு - கானனீர் முதலியன பிராதிபாஸிக பதார்த்தமாம்; (பிறிதொரு பகுதியாய) மலடி மகன் - முயற்கொம்பு முதலியன துச்ச பதார்த்தமாம்; இந்நான்கனுள், சிவம் நித்திய பதார்த்தமாம்; ஏனையவை அநித்திய பதார்த்தமா மென்பது இங்கு நன்குணர்தற் பாலதாம்.

காரியமாகிய உலகம்போல அதன் பரிணாமி யுபாதான காரணமாகிய மாயையும் பாரமார்த்திக நோக்கில் அசத்தாம்; அல்லது இன்மையாம்; இவற்றிற்கு வேறாயுள்ள சிவம் சத்தாம்; அல்லது உண்மையாம்; அது தமது யதார்த்த வடிவமாம்; அதனிடத்துச் சம்சாரபந்தம் நீரினிடத்துப் புழுதி யெவ்வாற்றானு மில்லாமைபோலஇல்லையா மென்பதைச் சற்

குருவி னுபதேச வாயிலாகச் சமாதி கூடி யறிந்து,அச்சிவமாக விளங்குவார்க்குச் சம்சாரபந்தம் ஒளிமுன் இருள்போலக் கெடுவதா மென்பது இங்கூன்றி உணர்தற் பாலதாம்.

கயிற்றின்கண் கற்பிதமாயுள்ள அரவு தனததிஷ்டான மான கயிற்றினும் வேறாக விருப்பதில்லையாம்; உண்மையில் அதற்கென்றொரு வடிவமு மில்லையாம்; அங்ஙனமே, சிவத் தின்கண் கற்பிதமாயுள்ள மாயாப் பிரபஞ்சம் தனததிஷ்டான மான சிவத்தினும் வேறாக விருப்பதில்லையாம்; உண்மையில் அதற்கென்றொரு வடிவமு மில்லையாமென்ப துணர்வார்க் கன்றி மற்றவர்க்குச் சிவம் பூரணமா யிருப்பதென்பது ஒரு வாற்றானும் விளங்கா தென்க.

இச்சூத்திரம் சிவம் திருசியமாகிய மாயைக்கும் உலகத் திற்கும் வேறாயிருக்கின்ற தென்று குறிப்பித்தமையின், திருக்காயுள்ள ஆத்மா சிவமன்றிப் பிறிதன் றென்பதையும் குறிப்பித்ததாமென்க. ஆத்மா சிவமாகாதெனின், அஃதநான் மாவாம்; அநான்மா சிவமாவதெங்ஙனமாம்? இதனால், ஆன்மா உடம்பு முதலியவற்றினும் வேறாய்ச் சச்சிதாநந்த சங்கா வடிவமா யிருக்கின்ற தென்பது மாறுபாடின்றிப் பெறப் படுவதாம்.

மாயாப் பிரபஞ்சம் பொய்; சிவம் மெய்யென்பது கீழ் வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்கும். அவை வரு மாறு:—

### பிரமகீதை.

"எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை
ஒப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகில்
அப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ."

### தேவிகாலோத்தரம்.

"தோன்றுவதெல் லாமசத்து"

### திருமந்திரம்.

"ஆயும்பொய் மாயை யகம்புற மாய்நிற்கும்"
"பொய்கண்ட மாமாயை."

### பட்டினத்தடிகள்.

"மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ,
ஐயாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத் துள்ளே,
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்,
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனது வே."

### கந்தரநுபூதி.

"இல்லையெனு மாயையி லிட்டனை நீ."

### தாயுமானவர்.

"அண்டபகி ரண்டமு மாயா விகாரமே
யம்மாயை யில்லாமையே யாம்."
"சகம் பொய்யெனத் தம்பட்ட மடியே.

---

## சாதன சாத்திய விவேக இயல்

### அவதாரிகை.

மாயாப் பிரபஞ்சமும் அதனதிஷ்டானமாயுள்ள சிவமும் சாஸ்திரபலமாகிய மோக்ஷமடைதற்குரியன வன்றாகலின், அதனை யடைதற்குரிய சீவரூப ஆன்மா அவற்றிற்கு வேறுயுண்டெனல்.

**7.** யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

(இ - ள்.) *யாவையும்* - (இன்ன தன்மையதென்று சுட்டியறியப்படும் உலகம், இன்ன தன்மையதென்று சுட்டியறியப்படாத மாயை யென்னும்) சர்வ பதார்த்தமும், *சத்தெதிர்* - (வாக்குமன முங்கண்ணு மற்றுளவிந் திரியங்களுமே நோக்கரிய பரஞ்சுடராகிய) சிவசத்தின் (சத்ரூபப் பிரஹ்மத்தின்) சந்நிதானத்தில், *சூனியம்* - (விளக்கின்முன் இருள்போலப்) பாழாம், *ஆகலின்* - அதனல், *சத்து* - சிவசத்து (சத்ரூபப் பிரஹ்மம்), *அறியாது* - (அவற்றை) அறிவதில்லையாம், *அசத்து* - அசத்தென்னும் சூனியவடிவ மாயாப் பிரபஞ்சம், *இலது* - (அறிவு) இல்லாததாம் (சடமாம்), *ஆகலின்* - அதனல், *அறியாது* - (அது சிவசத்தை) அறிவ தில்லையாம்,

(ஆனல்), இருதிறனறிவுளது - (சத்ரூப சிவம் அசத்ரூப மாயாப் பிரபஞ்சம் என்னும்) இவ்விரண்டு வகையினையும் அறியுமறிவொன் றிருக்கின்றது, (அஃது) இரண்டலாத ஆன்மா - சத்ரூப சிவம் அசத்ரூப மாயாப் பிரபஞ்சமென்னும் இவ்விரண்டு மல்லாத சீவரூப ஆன்மாவாம், (எ - று).

சத்தாகிய சிவத்தின்கண் மாயாப் பிரபஞ்சம் கயிற்றின்கண் அரவுபோலக் கற்பிதமா யிருத்தலின், ஆரோபமாகிய அதனை அதிஷ்டானமாகிய அது (சிவம்) அறிவதில்லை; அசத்தாகிய மாயாப் பிரபஞ்சம் கடபடம்போலச் சடமாயிருத்தலின், அதனை (சிவத்தை) அது (மாயாப் பிரபஞ்சம்) அறிவதில்லை; அவ்விரண்டையும் அறியும் அறிவொன்றுளது; அஃது அவ்விரண்டுமெல்லாத சீவரூப ஆன்மாவாம்; அதுவே சாஸ்திரபலமாகிய மோட்சமடைதற் குரியதாமென்பது இச் சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

சத்தே என்னும் ஏகாரம் அசைநிலைப் பொருட்கண் வந்தது; ஆகலின் என்பது இலதென்பதனேடுஞ்சென்றியைந்து நின்றது; அலா என்பது ஈறுகெட்ட எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்; இருதிறனும் இரண்டுமென்னும் முற்றும்மைகள் தொக்குநின்றன.

பதி (சிவம்) சத்தாயும், பாசம் (மாயாப் பிரபஞ்சம்) அசத்தாயு மிருக்குமாயின், பசு (சீவரூப ஆன்மா) இவ்விரண்டனுள் ஒன்ருமோ வேருமோ வென்னும் ஐயப்பாட்டை

யொழித்தற் பொருட்டு இச்சூத்திரம் பதியி னியல்பையும், பாசத்தினியல்பையும், பசுவி னியல்பையும் வரையறை செய்து கூறியதென்க. இதனுல், சத்தாயிருப்பது பதி, அசத்தாயிருப்பது பாசம், சதசத் விலட்சணமா யிருப்பது பசு என்னும் சித்தாந்தம் பெறப்பட்டவாறறிக. இங்கு ஆன்மா வென்றது கைலாயத்தின்க ணெழுந்தருளியுள்ள உருத்திர மூர்த்தியினது பிரதிபிம்பமாயுள்ள சுந்தரமூர்த்தி சுவாமி களைப்போல, சிவசத்தின் (சத்ரூபப் பிரஹ்மத்தின்) பிரதி பிம்பமாயுள்ள சீவர்களை.

'அசத்தில தறியாது' என்பதற்கு அசத்து - அசத்தென் பதன் பொருள், இலது - இல்லாததாம்; (அதனுல், அசத்ரூப மாயாப் பிரபஞ்சம் சத்ரூப சிவத்தை), அறியாது - அறிவ தில்லையென்பதும்பொருளாம். அசத்து - இன்மை - சூனியம் - பாழ் - சத்தின் வேறு என்டன ஒருபொருட்கிளவிகளாம்.

சொப்பன வுலகத்துள்ள சீவர்கள் அவ்வுலகத்திற்கும் அதனதிஷ்டானமாயுள்ள புருஷனுக்கும் வேரு யிருத்தல் போல, சீவரூப ஆன்மாக்களும் இம்மாயாப் பிரபஞ்சத்திற்கும் இதனதிஷ்டானமாயுள்ள சிவத்திற்கும் வேருயிருக்கின்றன; அங்ஙனமிருப்பினும், அவை சிவத்திற்கு உண்மை நோக்கில் வேருயிருப்பனவன்று மென்பதிங்குணர்தற்பாற்றும். மாயை யால் சீவர்கள் சிவத்திற்கு வேருக இருப்பவர்போல விளங்கு கின்றனர்; தத்துவஞானத்தால் மாயை நீங்கியபோது சிவ மாகவன்றி வேருக விளங்குத லிலரென்பது

## பிரமகீதை.

"தற்பா னுருவஞ் சித்தே தற்பா னிடையேயக்
கற்பித சீவன் றானு மதானக் காலந்தச்
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ
அற்பமும் வேறா காது சிதாகா ரத்தாலே."

## திருமந்திரம்.

"அஞ்ஞதி சிவரூப மாகிய வான்மாத்
தஞ்ஞது மலத்தாற் றடைப்பட்டு நின்றது
தஞ்ஞது மலமுந் தடையற்ற போதே
அஞ்ஞதி சிவரூப மாகிய வாறே."

என்றுள்ள பிரயோகங்களால் நன்கு விளங்குவதாம்.

சதசத்விலட்சணமான சீவரூபஆன்மா சத்ரூப சிவத்தை யும் அசத்ரூப மாயாப்பிரபஞ்சத்தையும் அறிதலாவது சிவம் மாயாப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமா யிருக்கின்றது; அத ஞல், அதிஷ்டானமான சிவம் ஆரோபமான மாயாப் பிரபஞ் சத்தை யறிவதில்லை; ஆரோபமான மாயாப் பிரபஞ்சம் அதிஷ் டானமான சிவத்தை யறிவதில்லை; சிவத்தின் பிரதிபிம்பமா யுள்ள நாம் இவ்விரண்டிற்கும்வேறாயிருந்து, அவற்றை யறி கின்றோ மென்பதைச் சீவர்கள் சாஸ்திரக்கண்ணு லறிவதா மென்க. சத்ரூப சிவம் அசத்ரூப மாயாப் பிரபஞ்சத்தையறிவ தில்லை; அசத்ரூப மாயாப் பிரபஞ்சம் சத்ரூப சிவத்தை யறிவ

தில்லையென்பது எங்ஙனமாமெனின், ஒருவனிடத்து மற்றொருவனது வடிவம் வேறொருவனுக்குத் தோன்றுங்கால், ஒருவன் மற்றொருவனது வடிவம் தன்னிடத்துத் தோன்றுவதற்குத் தான் அதிஷ்டானமா யிருக்கின்றான்; மற்றொருவனது வடிவம் அவனிடத்து ஆரோபமா யிருக்கின்றது; அதிஷ்டானமான அவன் தன்னிடத்து ஆரோபமாயுள்ள மற்றொருவனது வடிவத்தை யறிவதில்லையாம்; ஆரோபமான மற்றொருவனது வடிவம் தனததிஷ்டானமான அவனை யறிவதில்லையாம்; அங்ஙனமே, சிவம் தன்னிடத்து ஆரோபமாயுள்ள மாயாப் பிரபஞ்சத்தை யறிவதில்லையாம்; ஆரோபமான மாயாப் பிரபஞ்சம் தனததிஷ்டானமான சிவத்தை யறிவதில்லையாமென்பது அதற்கு விடையாமென்க." இயம்புமுவ மானமெலா மேகதேசம்" என்பதிங் குணர்தற்பாற்றும்.

'யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர் (யாவையும் சத்தெதிர் சூனியம்)' ஆயின், சிவம் சகத்காரணமா யிருக்கின்றதென்பது எங்ஙனமா மெனின், கயிற்றின்கண் கற்பிதமாயுள்ள அரவு கயிற்றை நோக்கச் சூனியமா(அசத்தா) யிருப்பினும், அஃது அரவு தோன்றுவதற்குக்காரணமாயிருத்தல் போல, சிவத்தின்கண் கற்பிதமாயுள்ள மாயாப் பிரபஞ்சம் சிவத்தை நோக்கச் சூனியமாயிருப்பினும், அது மாயாப் பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரணமா யிருக்கின்றதென்பது அதற்கு விடையாமென்க.

விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்தில் "சுத்தப் பிரஹ்மத்தை யாசிரயித்துக் கொண்டிருக்கும் மாயையினை அவித்தை யென்றும் அஞ்ஞானமென்றும் கூறுவர். * * * மாயை ஆசிரயிக்கும் சேதனம் சாமானிய சேதனமாம்; அது மாயைக்கு விரோதமா யிருப்பதின்று; ஆனால், சாதகமா யிருக்கின்றது. (அது அதற்குச்) சத்தாஸ்புரணத்தை (இருத்தலையும் விளக்கத்தையும்) தருகின்றது. (அந்தக்கரண) விருத்தியிலிருக்கும் சேதனம் அல்லது சேதன சகித விருத்தி மாயைக்கு விரோதியா யிருக்கின்றது" என்று கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.

சிவம் அநாதியாகச் சத்துவகுண மாயையிற் பிரதி பலித்து ஈசுவரனாகவும், இராசதகுண மாயையில் (அவித்தையில்) பிரதி பலித்துச் சீவர்களாகவு மிருக்கின்றது; ஈசுவரன் சீவர்களின் பொருட்டு, தாமதகுண மாயையினின்றும் உலகத்தை அயனுருவாக விருந்து உண்டாக்கியும், அரியுருவாக விருந்து காத்தும், அரனுருவாக விருந்து அழித்தும் வருகின்றான்; இவ்வியவகார மனைத்தும் சிவத்தின் சந்நிதான மாத்திரத்தால் நடைபெறுகின்றன; சிவம் நிர்விகாரமா யிருத்தலின், இவ்வியவகாரங்களை யறியாதிருக்கின்றது; மாயாப் பிரபஞ்சம் சடமாயிருத்தலின், சிவத்தை யறியாதிருக்கின்றது; சீவர்கள் இவ்வியவகாரங்களை யறிந்து தத்துவ ஞான வாயிலாகச் சம்சாரபந்த நீக்க மென்னும் வீடு பெறுதற்குரியவரா யிருக்கின்றன ரென்பது இங்குச் சாஸ்திரார்த்தமாம்.

கண்ணாடியிலுள்ள நமது பிரதிபிம்பம் கண்ணாடி யாகாதும், நாமாகாதும், நமக்கு வேறாகாது மிருத்தல்போல, மாயையிலுள்ள சிவத்தின் பிரதிபிம்பம் (சீவரூப ஆன்மா) மாயையாகாதும், சிவமாகாதும், சிவத்திற்கு வேறாகாது மிருக்கின்றது; கண்ணாடி நீங்கியபோது அதிலுள்ள நமது பிரதிபிம்பம் நாமாக வாவதன்றிப் பிறிதொன்ருக ஆகாமைபோல, மாயை நீங்கியபோது அதிலுள்ள சிவத்தின் பிரதிபிம்பம் சிவமாக ஆவதன்றிப் பிறிதொன்ருக ஆவதில்லையா மென்பது இங்கூன்றி யுணர்தற்பாலதாம்.

சிவம் சத்ரூபமாம்; மாயாப் பிரபஞ்சம் அசத்ரூபமாம்; இவ்விரண்டையு மறியும் சீவரூப ஆன்மா சதசத் விலட்சணரூபமாமென்பதுஇச்சூத்திரத்தால் தெளிவாகப் புலப்படுவதாகவிருக்க, சிலர்ஆன்மா சத்தை யறிவதால் சத்தாயும் அசத்தை யறிவதால்அசத்தாயு மிருக்கின்றது; அதனுல், அது சதசத் வடிவமாயிருக்கின்றது எனக் கூறுகின்றனர். இவரிங்ஙனங் கூறுவது ஒருவன் பொன்னை யறிவதால் பொன்னாயும்,இரும்பையறிவதால் இரும்பாயு மிருக்கின்ருன்; அதனுல், அவன் பொன் - இரும்பு வடிவமா யிருக்கின்ருனென்று கூறுவது போல்வதா மென்க; கடத்தையும் படத்தையும் அறிபவன் கடபட வடிவமாவனே? ஆன்மா சதசத்தா யிருக்கின்றதென்பது சூரியன் ஒளியிருள் வடிவமாயிருக்கின்ருன், என் தாய் மலடி, எனக்கு நாக்கில்லை என்று கூறுவதுபோல்வதாம்.

இவ்வாறு கூறுவது வியாகாத தோஷமுடையதாம். ஒன்றற்கொன்று விரோதமுள்ள இரண்டு தருமங்கள் ஓரதிகரணத்தில் (ஒரு தருமியில்) கூடி இருக்கின்றனவென்பது வியாகாத தோஷமுடையதாம். இங்குச் சத்தும் அசத்தும் தம்முள் விரோதமுள்ள தருமங்களாம்; அவை ஒரு தருமியில் (ஆத்மாவில்) எங்ஙனம் கூடியிருப்பனவாம்?

சித்தாந்தபிந்து "ஆபாசனும் (சீவரூப ஆன்மாவும்) ஜடாஜட விலக்ஷணமாயிருப்பதால், அநிர்வசநீயமாயிருக்கின்றான்" "ஆபாசனுக்கே பந்தம்; கேவல சைதந்யமோ முக்தம்; ஆகையால், பந்தமோட்சங்கள் ஓரதிகரணத்தி லில்லையாம்." என்று கூறுவதாலும் சீவரூப ஆன்மா சதசத் விலட்சணமாய் (சத்திற்கும் அசத்திற்கும் வேறாய்) இருக்கின்றதென்பது நன்கு விளங்குவதாம்.

சிவமே சத்தாயிருப்பது; மாயாப் பிரபஞ்சம் சூனியமாய் அல்லது அநித்தியமாயிருப்பதென்பது பின்வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்குவனவாம். அவை வருமாறு:—

## சூதசங்கிதை.

" ஒத்தசட மநித்தியமல் லாது சித்திற்
கநித்தியம்வந் துறுத லின்றே"

" சொற்ற சத்தைக் கயல்யாவுஞ் சூனியமா கையி னாலும்"

## கூர்ம புராணம்.

" ஆதலால் பிரமமொன்றே நித்தியம்"

## பிரபுலிங்கலீலை.

" மெய்ம்மைச் சிவமே யல்லாமல்
விரியு மூலகம் பொய்யென்பார்."

அதிஷ்டானமாயுள்ள சிவமும் ஆரோபமாயுள்ள மாயாப் பிரபஞ்சமும் தம்முள் வேறுபாடுடையனவாயினும், உண்மையில், ஆரோபமாயுள்ள மாயாப் பிரபஞ்சம் அதிஷ்டானமாயுள்ள சிவத்திற் கன்னியமா யிருப்பதில்லையாம் ; ஆரோபமாயுள்ள மாயையில் சிவத்தின் பிரதிபிம்பங்களாயுள்ள சீவர்கள் தமது பிம்பமாகிய சிவத்தினும் வேறாகா திருக்கினும், மாயை தத்துவ ஞானத்தால் கெடுமளவும் அதற்கு வேறு போல விளங்குகின்றனர்; அதனால், அவர்கள் சத்து இது, அசத்து இது என்று விசாரணை செய்வது வாயிலாகத் தமக்குபாதியாயுள்ள மாயையினின்றும் நீங்கிச் சிவசொரூபமாகவே விளங்குதற்குரியவராகின்றன ரென்பது இச்சூத்திரத்தின் பரம தாத்பரியமா மென்பது இச்சூத்திரப் பொருளை ஊன்றி நோக்குவார்க்கு நன்கு விளங்குவதா மென்க. (7)

---

## அவதாரிகை.

சதசத் விலட்சணமாயுள்ள சீவரூப ஆன்மா தத்துவ ஞானத்தாலன்றிப் பிறிதோன்றல் சிவத்தை யடைவதின்றெனல்.

8. ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

(இ - ள்.) தவத்தினில் - (சென்ற சன்மங்களில் பய ேனக்காது செய்த) தவவிசேடத்தால், (இருவினையொப்பு - மலபரிபாகம்-சத்தி நிபாதமென்னும் மூன்றனையும் முறையே பெற்றுச் சிவஞானத்தைப் பெறுதற்கு அதிகாரியாயுள்ள புருஷனுக்குத் தத்துவோபதேசஞ் செய்தற் பொருட்டு), தம் முதல் - பிரபஞ்ச மனைத்திற்கும் காரணகர்த்தாவாயுள்ள பரம்பொருள், குருவுமாய் - (அவனுக் கந்தரியாமியா யிருந்து அநுக்கிரகஞ் செய்துவந்த தன்றிச்) சற்குருமூர்த்தியுமாய் (எழுந்தருளிவந்து"தன்னகங்கருதி நோக்கித் தட" வுதலென் னும் தீட்சை மூன்றனையுஞ் செய்து, சிவகுமாரனாகிய நீ), ஐம்புலவேடரின்=சுரோத்திரம் - துவக்கு - சட்சு - சிங் ஙுவை- கிராணம் என்னும் ஐந்திந்திரியங்களாகிய வேடரோடு (கூடி), வளர்ந்து - வளர்ந்து (வருதலால்), அயர்ந்தனையென - (உனது நிஜவடிவமாகிய சிவத்தை யறியாது) மயங்கி யிடர்ப் பட்டிருக்கின்றாயென்று (கூறி, பின்), உணர்த்த - (நினை வரிய ஒரு பிரமம் நீயேயென்றுள்ள நிலையை) உபதேசஞ் செய்ய, (அதனால், அப்புருஷன்), விட்டு - (ஐம்புல வேட ரோடு கூடிவளர்ந்து வருதலை) ஒழித்து, அன்னியமின்மை யின் - (சிவம் தனக்கு) அன்னியமாக வில்லாமையால், அரன்

கழல் செலும் - சிவபதமடைகின்றான் (சிவமாகவே விளங்கு கின்றான்), (எ - று).

சரியை முதலியவற்றைப் பயனோக்காது செய்து, அதனால் சித்தசுத்தி பெற்றிருப்பவர்க்குப் பரமேசுவரன் குரு வடிவமாகவந்து, தீட்சை மூன்றனையுஞ் செய்து தத்துவோபதேசஞ் செய்கின்றான்; அதனால், அவர் தம்மைச் சிவமென்றுணர்ந்து, இந்திரிய முதலியவற்றோடு கூடி வியவகாரஞ் செய்வதொழிந்து, சிவம் வேறு ஆத்மா வேறு என்னும் பேதபுத்தி சிறிதுமில்லாது சிவமாகவே விளங்குகின்றனரென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

சீவரூப ஆன்மாவைச் சிவகுமாரனாக உருவகஞ் செய்யாது ஐம்புலன்களை வேடராக வுருவகஞ் செய்தமையின், 'ஐம்புலவேடர்' என்றது ஏகதேசவுருவகமாம். தம் என்றது இங்குப் பிரபஞ்சத் தொகுதியை. உம்மை இறந்து தழீஇய வெச்சவும்மை; உயர்வுசிறப்பும்மையுமாம். வேடரின் என்னும் ஐந்தனுருபு இங்கு உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது. அயர்ந்தனை என்னும் வினை இங்கு இறந்தகாலங் காட்டாது நிகழ்காலங் காட்டிநின்றது.

குரு என்பதன்பொருள் அஞ்ஞானத்தை ஞானத்தால் ஒழிப்பவனென்பதாம்; கு என்பதன் பொருள் அஞ்ஞானமென்பதாம்; ரு என்பதன் பொருள் அதனை யொழிப்பதென்பதாம். அரன் என்பதன் பொருள் (தன்னை யடைந்த

வரின் பாசங்களை) அரிப்பவன் (கெடுப்பவன்) என்பதாம். வேடரென்பதன் பொருள் இம்சிப்பவரென்பதாம். தவமாவது மனவிந்திரியங்களின் ஏகாக்கிரமாம்; அஃதாவது மனமும் இந்திரியங்களும் ஒருமுகப்பட் டிருத்தலாம். அன்னிய மின்மை - வேற்றுமையில்லாமை. அன்னியமின்மை - அத்து விதம் (துவிதமின்மை) என்பன ஒருபொருட்கிளவிகளாம்.

தவம் என்றது இங்குச் சரியை - கிரியை - யோகங்களை. நித்திய - நைமித்திக - பிராயச்சித்த கருமங்களும், உபாசனை களும் இம்மூன்றனு ளடங்குவனவாம். சரியை கிரியைக ளால் பாவம் ஒழிவதாம்; யோகத்தால் (உபாசனையால்) மனக் கலக்கம் ஒழிவதாம்.

ஞானேந்திரியம் 'ஐம்புல வேடரின்' என்று கூறப்பட்ட தாயினும், இனம்பற்றிக் காணமென்னும் கடிகுரல் ஞாளி (நாய்) முதலியவற்றையுங் கொள்க. அவை அந்தக்கரணங் களும் கருமேந்திரியங்களுமாம்.

தீட்சை தன்னகங் கருதல் - நோக்கல் - தடவல் என முத்திறத்ததாம்; இவை முறையே மானத தீட்சை - சட்சு தீட்சை - பரிசதீட்சை எனப்படும். தீக்ஷை யென்பதன் பொருள் தத்துவ ஞானத்தைக் கொடுத்து அஞ்ஞானத்தைக் கெடுத்தலென்பதாம். தீ என்பதன் பொருள் கொடுப்பது' க்ஷை என்பதன் பொருள் கெடுப்பது. (1) " ஆமைபோற் சிந்தித் தருளுருவ மாக்குமால், காமாதி நீத்தவரைக் காண்.'

(2) "மீன்போற் றிருநோக்கால் விமல னுருவாக்கும், தான் போக்கி நின்ற தாம்." (3) "கோழிபோற் றீண்டியுயிர்க் குற்ற மறுத்தாளும், ஆழிவிட முண்ட வான்" என்று சித்தாந்த தரிசனம் கூறுவதிங் கூன்றி யுணர்தற் பாலதாம்.

"விந்து மோகினி மானென விரிந்த
தத்துவக் காட்டிற் றனித்திடு முயிரை
ஆணவ வேங்கை யொருபா லடர்ப்ப
மாயைக் குடாவடி யொருபான் மயக்கக்
காமியக் கடமா வொருபாற் கறுவ
இருவினை மலைப்பாம் பொருபா லிழுக்க
ஆசையா மண்ணை யொருபா லறையக்
குலமெனு ஞமலி யொருசார் குரைப்பக்
கல்விக் கானியா னொருசார் கவரச்
சமயச் சூறை யொருசார் தாக்க
அவாவெனும் படுதீ யறிவைக் கொளுவ
*மாயா வாத வனசரர் வெருட்ட
இன்னண மாவி யிடருறுங் காலை
உயிரிடை யொளிபுக் கிருந்த வொருவாத்
தாயினுஞ் சாலத் தயாநிதி யிரங்கிக்

---

* "மனமே புருடனன்றி மற்றிலையென் றோதும்
கனமாயா வாதிமதங் காண்"

என்று சித்தாந்த தரிசனம் கூறுகின்றது.

கட்கடை வாளாற் காடற மாற்றலும்
உட்கின யாவு முயிர்பிழைத் தன்றே"

என்றும்,

" ஐம்புல வேட ராற்றனை மறந்து
காண மென்னுங் கடிகுரன் ஞாளி
சூழ்தரப் போதத் துணிவிற் பிடித்திட்
டிரக்க மின்றிய வீமிசைக் குயிற்றிப்
பிறவியங் கானிற் பேதுறுங் காலைச்
சிவநா பாலன் றிருவுளத் திரங்கிச்
சீவ வேடு நீக்கித் தேற்றித்
தன்னருள் காட்டித் தாஞக் கும்மே"

என்றும், சத்தியஞானபோதம் கூறுவதாலும் இச்சூத்திரத்தின் பொருள் நன்கு விளங்குவதாம்.

" தத்துவ ஞானத்திற்குத் தபசே மூலம்" என்று சுருதி கூறுதலின், 'தவத்தினி லுணர்த்த' என்று கூறப்பட்டது.

"'சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச் சாதனங்கள் நிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்" என்று ஞானவாசிட்டம் கூறுவதனுல், சரியை - கிரியை - யோகம் என்பன ஞானசாதனமாமென்பது பெறப்படுவதாம்; படவே, அவற்ருல் நேரே மோட்சமுண்டாகாதென்பது ஒரு தலையாகத் துணியப்படுவதாம். இது

## பிரபுலிங்கலீலை.

"உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப்பொருளென் றெண்ணிக்களிப்பவர் கயவரன்றே."

## ஞான விளக்கம்.

"உற்ற சரியையனுக் கோரா யிரம்பிறப்பு
மற்றையர்க்கு நூறுகும் வன்பிறப்பு—முற்றுகின்ற
யோகிக் கொருபிறப்பு வுண்மைச் சிவஞான
மோகிக்கு விப்பிறப்பின் முத்தி"

என்றுள்ள பிரயோகங்களால் நன்கு விளங்குவதாம்.

(1) சிவாலயத்தில் திருவலகிடுதல், திருமெழுகிடுதல், மலர்கொய்தல், மலர்மாலை தொடுத்தல், சிவபெருமானைத் தோத்திரஞ் செய்தல், திருவிளக்கிடுதல், நந்தவனம் வைத்தல், சிவனடியாரைச் சிவமெனக் கண்டு பணிதல், அவர்க்குத் தொண்டு செய்தல், சிவஸ்தல யாத்திரை செய்தல், புண்ணிய தீர்த்த ஸ்நானம், புண்ணியஸ்தல வாச முதலியன சரியையாம்.

(2) சிவபூசைக் குரிய பொருள்களைக் குறைவில்லாது சேகரஞ் செய்துகொண்டு, சுத்தமான விடத்திருந்து, மனமொழி மெய்க ளொத்திருக்க, அவற்றால் சிவபெருமானை விதிப்படி பூசித்தல் கிரியையாம்.

(3) சிவபெருமானிடத்துச் சித்தத்தை விஷயங்களிற் செல்லாவாறு யோககுரு கூறியவாறு நிறுத்துதல் **யோகமாம்.** சர்வப் பிரபஞ்சத்தையும் சிவ சொரூபமாகக் கண்டு பேதபாவனையின்றி யிருத்தலும் **யோகமாம்.**

சரியை முதலியவற்றை மேற்கொண்டொழுகுவோருள் யோகிகள் அல்லது உபாசகர் மறுமையில் தேவயானமார்க்கமாகப் பிரமலோகத்தை யடைகின்றனர்; அவர்களுள், சிலர் அவ்வுலகம் முடிவு பெறுமளவு மிருந்து, போகத்தை யநுபவித்து, அது முடிவுபெறும்போது தத்துவஞான முடையவராகி மோட்சமடைகின்றனர்; சிலர் தமக்குரிய போகத்தை யநுபவித்தபின் நல்லவர் குலத்திற் பிறந்து, சற்குரு வாயிலாகத் தத்துவ விசாரஞ்செய்து, சமாதிகூடி, தன்னை (ஆத்ம வடிவ சிவத்தை) யுள்ளவாறறிந்து, அதனால் தன்னைமறைத்த பந்தமென்னும் அஞ்ஞானத்தைக் கெடுத்து, ஜீவன்முத்தராகி விதேகமுத்தி யடைகின்றனரென்னும் சாஸ்திரார்த்தம் இங்கு நன்குணர்தற்பாலதாம்.

"கர்ம உபாசனைகளால் இரண்யகர்ப்ப (பிரம) லோகத்தினை யடைகின்றனர்; ஆண்டு (வைராக்கியமுள்ள) சிலர் மோட்சமடைகின்றனர்; போகேச்சை யுடையோர் மீண்டும் மீண்டும் ஜன்ம மடைகின்றனர்" என்று சுவாராஜ்யசித்தி கூறுவதும், "உத்தம உபாசகர்கள் விதேக முத்திக்கு அதிகாரிகளாயிருத்தலின், தேவயான மார்க்கமாக அவர் யாவரும் பிரம

லோகத்திற்குப் போகின்றனர் ; ஆனால், ஒரே பிரமலோகம் விஷ்ணு உபாசகனுக்கு வைகுண்டரூபமாகவும், அங்குள்ள வர்கள் சதுர்ப்புஜங்களோடு கூடியவராகவும் தோன்றுகின்ற னர் ; தானும் சதுர்ப்புஜனாகவே யாகின்றான் ; அங்ஙனமே, சிவ உபாசகனுக்குப் பிரமலோகமே சிவலோகமாகவும், அங் குள்ளவர்கள் திரிநேத்திர சொரூபிகளாகவும் தோன்றுகின்ற னர் ; அவன் தன்னையும் அங்ஙனமே பார்க்கின்றான். இவ் வாறு எல்லா உபாசகர்களுக்கும் பிரமலோகமே தமது உபா ஸியத்தின் லோகமாகக் காணப்படுகின்றது " என்று விசார சாகரம் ஏழாவது தரங்கம் கூறுவதும்,

"ஈசனியோ கக்கிரியா சரியையினின் முயன்றோர், ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லா மொடுங்குபோ தான்முனிலா தொழிலினாற் பவித்து, ஞானநெறி யடைந் தடைவர் சிவனை யங்கு, நாதனே முன்னிற்கி னணுகுவர்கற் றானே" என்று சிவஞான சித்தி. கூறுவதும் இங்கு நன்கு ணர்தற் பாலனவாம்.

(1) இருவினை யொப்பாவது நல்வினையின் பயனாகிய சுகமும் தீவினையின் பயனாகிய துக்கமும் தராசுதட் டிரண்டி லும் வைத்த பொருளிரண்டும் சமமாகத் தோன்றுவதுபோலச் சமமாகத் தோன்றுதலாம். ஸ்ரீ சங்கரபூச்சிய பகவத்பாத ஆசாரிய சுவாமிகள் வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகத்தில் 'தனமுதலியனவும் அழகிய மங்கையரு மடையும்போது சுக மென்னும் புத்தியும், சுர முதலியன அடையும்போது துக்க

மென்னும் புத்தியுமில்லாதிருப்பதே சுகதுக்க சமத்துவமாம்." என்றருளிச்செய் திருப்பது மிங்குணர்தற் பாலதாம்.

(2) மல பரிபாகமாவது மலமென்னும் அஞ்ஞானந் தான் கெடுதற்குரிய காரணங்களோடு கூடுதலாம். இது

"மாறாத வஞ்ஞான முழுதுமகல் வதுகூறின் வையந் தன்னின், வேறாகுற் காலகலு முடன்மூன்றுஞ் சீவனுக்கு வேற தானல், நீறாகும் பாதிதற்சாட் சியைக்காணின் முக் காலு நீங்குந் தானாய்ப், பேறான சொரூபபரி பூரணமா னன் முழுதும் பேசொணதே" என்று உபநிடதங் கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

(3) சத்திநிபாதமாவது பரமசிவத்தின் கருணையுண் டாதலாம். சத்தி - (பரமேசுவரனது) கருணை, நி - மிகுதி யாக, பாதம் - பதிதலாம்.

இருவினை யொப்பால் மலபரி பாகமும், அதனல் சத்தி நிபாதமும், அதனல் சற்குரு கருணையும், அதனல் பிறப் பொழிதலு முண்டாமென்பது சாத்திர நிச்சயமாம். இது

"இருவினை யொப்பா லிருண்மல பாகம், மலபா கத்தின் மருவும் பாதம், பாதம் பயில்வால் பயிலுங் குரவன், குரவன் வாலுங் கொடும்பவ மேழும், தனித்தனி யோடுந் தலைகெட் டன்றே" என்று சத்தியஞான போதம் கூறுவதாலும் விளங்குவதாம்.

(4) தத்துவோபதேசமாவது சற்குருமூர்த்தி தன்னைச் சரணாகதியாக வடைந்த அதிகாரியின் பக்குவத்தை நன்ருகப் பரிசோதித்துப் பார்த்து, அவனுக்குச் சாமவேத மகாவாக்கியத்தை (தத்துவமசி மகா வாக்கியத்தை) உபதேசஞ் செய்தலாம். இது

"அனையவன் றதிகாரந் தெரிந்தருளா ளேக்கி யஞ்சலோம் பென்றபய கரஞ்சிரத்தி லிருத்திப், புனையவருஞ் சுருதியுத்தி யாலவன தனுன்ம புத்தியினை யொழித்துத்தா ரான்மியவாக் கியத்தால், நினைவரிய வொருபிரம நீயே யென் றுள்ள நிலையையுணர்த் துதல்குரவ னுபதேசமாகும்" என்று வேதாந்த சூடாமணி கூறுவதாலும் நன்கு விளங்குவதாம். தத்துவமசி யென்பதன் பொருள் அது (சிவம்) நீயா யிருக்கின்ரு யென்பதாம். "சிவத்துவமசி" என்பது ஆகம உபதேச மகாவாக்கியமாம்; "தத்துவமசி" என பது வேத உபதேச மகா வாக்கியமாம்; "சிவோகம்" என்பது அநுபூதி மகா வாக்கியமாம்.

பரமேசுவரன் சீவர்களுக் கந்தர்யாமியா யிருந்து அனுக்கிரகஞ் செய்து வருகின்ருன்; அவர்களுள், அதிதீவிர பக்குவமுடையவர்க்குத் தத்துவோபதேசஞ் செய்யச் சற்குருமூர்த்தியுமாய் வருகின்ருனென்பதுணர்த்த 'தம் முதல் குருவுமாய்' என்று கூறப்பட்டது. இது கைவல்லிய நவநீதம்

"ஐயனே யெனதுள் ளேநின் றநந்தசன் மங்க ளாண்ட
மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்
செய்யுமாறொன்றுங் காணேன் திருவடி போற்றி போற்றி"

என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

பரமேசுவரன் சற்குருமூர்த்தியாக வெழுந்தருளி வந்து சீவர்களுக்குத் தத்துவோபதேசஞ் செய்யும்போது விஞ்ஞானகலர்க்கு அவர் சித்தத்தின்கண் சற்குருமூர்த்தியாக வெழுந்தருளியிருந்து உபதேசஞ் செய்வன்; பிரளயாகலர்க்கு மான் மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திரதாரியாகத் திருமேனிகொண் டெழுந்தருளி வந்து உபதேசஞ் செய்வன்; சகலர்க்கு மானுட வடிவங்கொண் டெழுந்தருளி வந்து உபதேசஞ் செய்வன் என்பதிங் குணர்தற்பாலதாம்.

"மன்னையு மறந்து மிக்க வனசர வடிவ மாகித்
தன்னையு மறந்தி ருந்த தனையனைப் போன்று நீயும்
என்னையு மறந்தைம் போத வெயினர்தம் வடிவ மாகி
உன்னையு மறந்தாய்நீயென் னுருவென வுணர்ந்துகொள்ளே"

என்று பதிபசு பாச விளக்கம் கூறுகின்றவாறுபரமேசுவரனே அதிகாரி புருஷர்களுக்குத் தத்துவோபதேசஞ் செய்ய வருகின்றானென் றுறுதி கொண்டு, ஒழுகுகின்றவரன்றி மற்றவர் பரமேசுவரனது கருணைக்கு ஒருவாற்றானும் பாத்திரராவ தில்லையாமென்பது இங்குக் கவனித்துணர்தற்பாலதாம். இது.

சர்வதரிசன சங்கிரகம் - சாங்கர தரிசனத்தில் "எங்ஙனம் வேடர் முதலாயினோரால் தங்கள் புத்திரரோடு பால்ய முதற்கொண்டு வளர்க்கப்பட்ட இராஜகுமாரன் அச்சாதியுடையவனாகத் தன்னை யறிந்து, காலாந்தரத்தில் தனது பந்துக்களால் நீ வேடனன்று, க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவனென்று போதிக்கப்பட்ட பிறகு, தன்னிடத்திற் றன்னை யெவ்வாறடைந்தானோ, அவ்வாறே வேசியைப் போன்ற அநாதி அவித்தையினால் அந்நிய சுபாவத்தை யடைந்த ஆன்மா மாதுர்ஸ்தானத்தை யடைந்த தத்துவமசியாதி சுருதியினால் சுபாவத்தை யடைகின்றது. 'நீசர்க (வேடர்க) ளுடைய கிருகத்தில் அவர்களுடைய குமாரர்களோடு வெகு காலம் வளர்ந்த இராஜகுமாரன் தன்னை அச்சாதியானென் றறிந்தான்; அஞ்ஞானத்தால் மகதாதிகளோடு சேர்ந்து வசித்த புருஷன் அதுபோலாகின்றான்; சுகதுக்கங்களோடு கூடியவனாகத் தன்னை மித்தையாகவே நினைக்கின்றான். துஷ்டர்களைச் சிட்சிக்கின்றவனாகவும், தாதாவாகவும், போகபானாகவும், சர்வ வியாபகனாகவு மிருக்கின்றவன் யாவன் அவனே (அவ்வரசனே) நீயாகின்றாயென்று இரட்சிக்கின்றவன் வாயிலாகக்கேட்டு எங்ஙனம் குழந்தை இராஜாவாய் வெற்றியின் பொருட்டே முயற்சிக்கின்றதோ, அங்ஙனம் புருஷனும் தத்துவமசியென்னும் சுருதியால் போதிக்கப்பட்டுப் பாவத்தை (அஞ்ஞானத்தை) நிவிர்த்தித்துப் பிரஹ்மமே யாகின்றான்' என்று பெரியோர் கூறுகின்றனர்" என்று கூறுவதனால் நன்கு விளங்குவதாம்.

இந்திரன் பிராமண வடிவங்கொண்டு கர்ணனிடத்து வந்து, அவனது கவசகுண்டலங்களை யாசித்தபோது சூரியன் கர்ணனைநோக்கி, கர்ண! நீ ராதையின் புத்திரனன்று, குந்தியின் புத்திரனென்று கூற, அதனால், அவன் யான் ராதையின் புத்திரனன்று,குந்தியின் புத்திரனென்று தன்னை யறிந்துகொண்டாற்போல, சற்குருமூர்த்தி அதிகாரி புருஷனை நோக்கி, அன்பனே! நீ சீவனன்று, சிவமென்று கூற, அதனால், அவன் யான் சீவனன்று, சிவமென்று தன்னை யறிகின்றான்; அதனால், தன்னிடத்துச் சீவபுத்தி சிறிதுமின்றிச் சிவமாகவே விளங்குகின்றான்; அவனங்ஙனம் விளங்கும் நிலை பேரானந்த வடிவமாக விருத்தலின், 'அரன்கழல் செலுமே (சிவபதமடைகின்றான்)' என்று கூறப்பட்டது. அரனாக விளங்குகின்றானென்பது உபசார வழக்கால் 'அரன்கழல் செலுமே' என்று கூறப்பட்டது. இவ்வர்த்த விசேடம்,

"கன்னனான் புளினு னென்றே கவலையுற் றழுங்குங் காலைக்
கன்னநீ கிராத னன்று கௌந்திபுத் திரனென் றாற்போல்
அன்னிய வுடனு னென்றே யயர்ந்துள மழியேன் மைந்த
அன்னிய மென்று கண்ட வறிவுநீ யுணர்ந்து கொள்ளே."

என்று பதிபசுபாச விளக்கம் கூறுவதனால் நன்கு விளங்குவதாம்.

சற்குருமூர்த்தியின் தத்துவோபதேசத்தால் அதிகாரி புருஷன் தன்னை யுள்ளவாறறிந்து தனக்கு அன்னியக்

தோன்றாமையால் சிவத்தை யடைந்து அச்சிவமாகவே விளங்குகின்றான்; அவன் அவ்வாறு விளங்குதல் ஆறு கடலை யடைந்து, அக்கடலாகவே விளங்குதல் போல்வதா மென்பதிங் குணர்தற்பாலதாம். இது

**கந்தபுராணம் - சூதசங்கிதை - பிரமகீதை.**

"நலமிகு மந்த ஞானி நாமரூ பாதி விட்டுக்,குலவுவா ருதியிற் கூடுங் குரைபுனற் குடினை யேபோல், இலகுறு பரசிவத்தி லேகமா குவன்" என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

"பொய்யாக்கப் பொய்யைப் பொருளைப் பொருளாக்க, மெய்யாக் குருவொருத்தன்" அதிகாரி புருஷனுக்கு அத்தியாவசியகமாக வேண்டும்; அவனால், அவன் தன்னைச் சிவமாக வறிந்து, தனக்கன்னிய மென்ப துண்மையில் தோன்றுவதில்லாது, சச்சிதாநந்த சங்கர வடிவமாகவே விளங்குகின்றான்; அதனால், சாதல் பிறத்தலென்னும் சங்கடமில்லாதவனாகின்றானென்பது இச்சூத்திரத்தின் பரம தாற்பரியமாமென்பது "ஆசாரியனையுடைய புருஷனறிகின்றான்" "பிரஹ்மவித்து (பிரஹ்மத்தை யறிந்தவன்) பிரஹ்மமேயாகின்றான்" என்று உபநிடதங்கள் கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

இச்சூத்திரத்தின் பொருளைக் கீழ்வரும் பிரமாணங்களாலு மறிக. அவை வருமாறு:—

## திருவாசகம்.

"இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா வாநந்த மணிகொடில்லை கண்டேனே."

## உபதேசமாலை.

"சீவ பரமிரண்டுந் தேருமிடத் தேகமென்று,
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தால்—ஓவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்காத்தி லேந்தியவெம் மான்."

## சிந்தனை வெண்பா.

"சிவன்வேறு சீவன்வே றென்றிரண்டாச் செப்பும்
அவன்சிவனை யென்று மறியான்—தவமில்லா
உள்ளத்தார்க் கெய்துமோ வூர்க்குருவி யாகாசம்
மெள்ளப் பறந்தறியு மோ"

## பிரமானுபவ அகவல்.

"நானு னெனவே ஞானசற் குருவை
வினவிடி லித்தகை விளங்கிய பிரமம்
நீயே யென்று நிச்சய மாகத்
தத்துவ மசிகொடு சாற்றின னன்றே."

## அவதாரிகை.

சற்குரு மூர்த்தி நீயே சிவமென வுணர்த்த, அதனால், நானே சிவமென வுணர்ந்த அதிகாரி புருஷன் இந்திரியங்களின் வயமாகாது தான்பெற்ற தத்துவ ஞானத்தைத் திடமாக்கிக் கொள்ளுஞ் சாதனங் கூறல்.

9. ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

*(இ - ள்.) பாசம் ஊனக்கண்ணினின் - (சற்குரு மூர்த்தி நீயே சிவமெனவுணர்த்த, அதனால், நானே சிவமெனவுணர்ந்த அதிகாரி புருஷன்) சம்சார பந்தத்தை விளைவிக்கும் ஊனக் கண்ணால், உணராத பதியை - உணர்தற்கரிய சிவத்தை, ஞானக் கண்ணினின் - ஞானக்கண்ணால், சிந்தைநாடி - ஆத்மாவாகிய தன்னிடத்தில் (அபேதமாக) ஆராய்ந் தறிவானாகில், (அங்ஙனம் ஆராய்ந்தறிவானாயின், அவனுக்கு), பாசம் - மாயாப் பிரபஞ்சம், உராத்துனைத்தேர்த்தென - பேய்த்தேரின் தன்மையதாக, (மித்தையா யொழிவதாம்), ஒருவவே - (அஃதங்ஙனம் மித்தையாய்) ஒழியவே, (அவன் இந்திரிய வியாபாரம் கரண வியாபாரம் என்பவற்றுள் ஒன்றுமின்றி), தண்ணிழலாம் - பரமானந்த பரிபூரண சிவசொரூபமாகவே*

விளங்குவன், (அவனங்ஙனம் விளங்குவது பழைய பயிற்சி வசத்தால் புலன்களென்னும் விஷயங்களின்மீது அவனது நினைவு செல்லுமாயின், மாறுவதாம்; அப்போது அவன் அந் நினைவு நீங்குமாறும் தான்பெற்ற தத்துவஞானம் திடமா மாறும்),பதி அஞ்செழுத்து - (தத்துவமசிமுதலிய மகா வாக்கி யங்களின் பொருளை யுணர்த்துவனவாய மந்திரங்களுள்) தலை மை வாய்ந்துள்ள ஸ்ரீ பஞ்சாக்கரத்தை, விதியெண்ணும் - (சற்குருமூர்த்தி உபதேசித்த) முறைப்படி தியானஞ் செய் வானுக,(எ-று).சம்சாரபந்தம்-யானென தென்னுஞ்செருக்கு.

சற்குருமூர்த்தி நீயே சிவமெனவுணர்த்த,அதனுல்,நானே சிவமென வுணர்ந்த அதிகாரிபுருஷன் ஊனக்கண்ணு லறிதற் கரிய தனது நிஜவடிவ சிவத்தை ஞானக்கண்ணுல் தனக்கபே தமாக வறியுமிடத்து அவனுக்கு மாயாப் பிரபஞ்சம் கானல் நீர்போல மித்தையாகத் தோன்றுவதாம்; அப்போது அவன் இந்திரிய வடக்கமும் மனவடக்கமும் உடையவனுய்ப் பரமா னந்த பரிபூரண சிவசொரூபமாக விளங்குகின்முன்; அவ னங்ஙனம் விளங்குவது பழைய பயிற்சி வயத்தால் விஷயங் களில் அவனது நினைவு செல்லுமாயின், மாறுவதாம்; அப் போது அவன் அந்நினைவு நீங்குமாறும், தான்பெற்ற தத்துவ ஞானம் திடமாமாறும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி தியா னஞ் செய்யக் கடவன்; அதனுல், அவன் விஷயங்களில் செல்லும் நினைவொழியப் பெற்றுத் திடஞான முடையவ

ஞய், பரமானந்த பரிபூரண சிவசொரூபமாகவே விளங்குதற் குரியவஞவனென்பது இச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

சிந்தை-ஆன்மா. இச்சூத்திரத்தின்கணுள்ள பாசமிரண்டனுள் முன்னது தானல்லாதவுடம்பை யானென்றும் தன்னேடியைபில்லாத பொருளை யெனதென்றுங் கருதி அவற்றின்கண் பற்றுச் செய்வதற்கேதுவாகிய சம்சார பந்தத்தையும், பின்னது மாயையையும் அதனது காரியமாகிய பிரபஞ்சத்தையும் உணர்த்தி நின்றன. சிவத்தின்கண் கற்பிதமாயுள்ள மாயை பிரபஞ்சத்திற்குப் பரிணுமியுபாதான காரணமாம்; சிவம் விவர்த்தோபாதான காரணமாமென்பது இங்குணர்தற் பாற்ரும். விவர்த்தோபாதான காரணம் - அதிஷ்டானமென்பன ஒருபொருட்கிளவிகளாம். 'ஞானக் கண்ணினின்' என எதுப்பொருட்கண் வந்த ஐந்தனுருபு 'ஊனக்கண்' என்பதனேடுஞ் சென்றியைந்து நின்றது. ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. 'ஒருவ' என்பது மழைபெய்ய நெல் விளைந்தது என்பது போலக் காரணப்பொருளில் வந்த செயவெனெச்சமாம். நாடி என்பது இகரவீற்று வியங்கோள் வினைமுற்று; எண்ணும் என்பது உம்மீற்று வியங்கோள் வினைமுற்று. 'ஞானக்கண்' என்றமையின், 'ஊனக்கண்' என்பது அஞ்ஞானக் கண்ணுமென்பது சொல்லாமலே பெறப்படுவதாம். ஊனக்கண் - குருட்டுக்கண் ; மாமிசக் கண்ணுமாம்;

இப்பொருளில் பாசம் என்பதற்குப் பொருள் துன்பமாம். "உராத்துனே' என்பது பேயின் பரியாயப் பெயர்களுள் ஒன்ரும். கானல் நீர், பேய்த்தேர், உராத்துனைத்தேர், வெண்டேர் என்பன ஒருபொருட் கிளவிகளாம். உராத்துனைத் தேர் என்பதன்பொருள் ஒருவரால் ஊர (செலுத்த)ப் படாத வேகத்தையுடைய தேரென்பதாம். தண்ணிழ லென்பது குளிர்ச்சியாகிய நிழலாம். தண்ணிழல் தன்னையடைந்தவரது தேகவெப்பத்தை நீக்கி, அதற்குக் குளிர்ச்சியைத் தருவது போல, பரமாநந்த பரிபூரணசிவம் தன்னை யடைந்தவரது மன வெப்பத்தை நீக்கி (காமாதி விருத்திகளை யொழித்து), அதற்குக் குளிர்ச்சியை (சாந்தவிர்த்தியை)த் தருதலின், அது 'தண்ணிழல்'என்று கூறப்பட்டதென்க. பரமாநந்த பரிபூரண சிவம் நமதுண்மைவடிவமாக விருப்பினும், அது மனங்குவிந்த போது அதிகாரி புருஷனுக்குப் புதுவதாக அடைந்தாற்போல விளங்குதலின், அவ்வியைபுபற்றி அதிகாரி புருஷன் பரமானந்த பரிபூரண சிவத்தை யடைகின்ருனென்று கூறப்படுகின்றதென்க. இது

"சொல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றுங் கிணற்றிஞ காசம்போலே
ஒல்லையாம் பிரம நூலா லுற்றது போலே தோன்றும்
எல்லையி ளுமெப் போது மேகமென் றிருந்து வாழ்வாய்."

என்று கைவல்லிய நவநீதம் கூறுவதாலும் நன்கு விளங்குவதாம். தன்னைப் பரமானந்த பரிபூரண சிவமாக வறிந்தவனுக்கு மாயாப் பிரபஞ்சம் கானனீர்போல மித்தையாகத் தோன்றுவதாமென்பது "இந்திரசா லங்கனவு கானலினீரெனவுலக மெமக்குத் தோன்ற" என்று தாயுமானவ ரருளிச் செய்திருப்பதாலும் நன்கு விளங்குவதாம்.

மாயாப் பிரபஞ்சம் 'ஊராத்துனைத் தேர்த்து' (கானனீர் போல்வது) என்றமையால், கானனீரால் அதற்கதிஷ்டானமாயுள்ள பூமி நனையாமைபோல, மாயாப் பிரபஞ்சத்தால் அதற்கதிஷ்டானமாயுள்ள சிவம் பந்தமடையா திருக்கின்றதென்பது பெறப்படுவதாம். கானலில் (சூரிய கிரணத்தால் மிகு வெப்பமாயுள்ள மணற்றடத்தில்) தோன்றும் நீர் மித்தையா யிருத்தல்போல, சிவத்தில்தோன்றும் மாயாப்பிரபஞ்சம் மித்தையா யிருக்கின்றதென்ப துணர்ந்தவன், அதனையடைய விரும்பானென்பது இங்குணர்தற்பாலதாம். இங்கு மகோபநிஷத்து "மருபூமியில் (கானலில்) தோன்றும் அந்த நீர் முழுவதும் மருபூமி மாத்திரமேயாம்; அதுபோல, இவ்வுலகமனைத்தும் தனது விசாரத்தினால் சின்மாத்திரமேயாம்" என்று கூறுவது நன்குணர்தற்பாலதாம்.

ஊனக்கண் அசுத்தமனமாம்; ஞானக்கண் சுத்தமனமாம். ஆசை கோபம் அகந்தை முதலியன வுடைய மனம் அசுத்தமனமாம்; அவையின்றிய மனம் சுத்தமனமாம். அசுத்த

மனம் ஊனக்கண் என்றும், குருட்டுக்கண் என்றும், வெளி விழிப்பார்வை யென்றும், சோகமனம் என்றும், உருவமனம் என்றும், பசுகரணம் என்றும் சொல்லப்படுகின்றது; சுத்த மனம் உணர்விழி என்றும், உள்விழிப்பார்வைஎன்றும், அருவ மனம் என்றும், தாய் என்றும், சிவகரணம் என்றும் சொல்லப் படுகின்றது. அசுத்தமனம் தாமத இராசத குணங்களுள் யாதாவதொன்று அடங்காதிருக்க, சத்துவகுணம் அடங்கி யுள்ள மனமாம்; சுத்தமனம் சத்துவகுணம் அடங்காதிருக்க, தாமத இராசத குணங்கள் அடங்கியுள்ள மனமாம் என்பது மிங்குணர்தற்பாலதாம்.

சத்துவகுணம் பிரகாசவடிவமாகவும், இராசதகுணம் பிர விர்த்தி வடிவமாகவும், தாமதகுணம் மோகவடிவமாகவு மிருப் பனவாம்.

அசுத்தமனம் தாமதகுணம் மிக்கபோது அஞ்ஞானமய மான மூடவிர்த்தியுடையதாயும், இராசதகுணம் மிக்கபோது இராகமயமான கோரவிர்த்தி யுடையதாயு மிருப்பதாம்; அம் மனம் சரியை - கிரியை - யோகமென்பவற்றை முறையாக மேற்கொண்டொழுகுவோ ரிடத்து அவ்விருகுணமு மடங்கி நிற்க, சத்துவகுணம் மேம்பட்டு நிற்கவிருப்பதாம். அம்மனம் சத்துவகுணம் மிக்கிருத்தலால், வைராக்கிய மயமான சாந்த விர்த்தி யுடையதாக விருப்பதாம்; இந் நிலைமையில் அது ஞானக்கண் என்று கூறப்படுகின்றது. இம்மனம் அதிகாரி

புருஷன் தன்னில் சிவத்தை அபேதமாக வறிதற்குச் சாதன மா யிருக்கின்றமைபற்றி,ஞானக்கண் என்று கூறப்பட்டு வரு கின்ற தென்க.

சிவம் சத்துவகுணமனத்திற்கு விஷயமாவதன்றி, தாமத குண இராசத குண மனத்திற்கு விஷயமாவதின்றென்பதை விளக்க 'ஊனக்கண் பாச முணராப் பதியை, ஞானக் கண்ணி னிற் சிந்தை நாடி' என்று கூறப்பட்டது. சத்துவகுண மனத் திற்குச் சிவம் விஷயமாதலாவது அது கலங்குதலில்லாது ஆத்ம வடிவ சிவத்தையே நோக்கிநின்று நெருப்பைச்சேர்ந்த இரும்பு நெருப்பு மயமாகவே விளங்குதல்போலச் சிவ (ஆநந்த) மயமாகவே விளங்குதலாம். இது கைவல்லிய நவ நீதம்

"மனதுசத் துவசொரூப மற்றிரண்டும் வந்துகலந் தனவவற்றை மாற்றி னுற்போம், தனதுசன்மார்க் கத்தை விடா திருந்த போது தமோகுணமும் ரசோகுணமுஞ் சமிக் கும் பின்னைக், கனபரிணு மஞ்சலனம் போம்போ னக்காற் களங்கமற்று நின்றவா காயம் போலும், நினதுளமப் படியாமப் பிரமத் தொன்ருய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே."

"களங்கமற்ற கண்ணுடி தன்முன் வேருேர் களங்க மற்ற கண்ணுடி காட்டும் போது, விளங்கியதன் மயமாகி யபேதமாகி விகற்பமின்றி நிருவிகற்ப மாஞற் போல, அளந் தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா யாநந்த மாம்பிரமத்

தைக்கிய மான, உளந்தெளிந்த படியிருந்தா லுலகமெங்கே யுலவெங்கே யென்றுசங்கை யொழித்தி டாயே."

என்று கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

"இருகுணமு மிகந்தமல சத்வ மேலா யிருக்கின்ற சூக்க மனோ விருத்தி கொண்டே, பரமசிவன் பரிபூன்ற சொரூபந் தன்னைப் பார்த்திடலா மற்றொன்றாற் பார்க்க வொண்ணா."

"சித்துருவாம் பரப்பிரம சொரூபத்தின்கண் க்ஷீரசல நியாயம்போற் சேர்ந்து நிற்கும், புத்தியுடை விருத்தியினிற் பிரதிபிம் பிக்கும் பூரணசை தன்னியமே சாட்சாத் காரம்" என்று ரிபுகீதை கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள், அகத்திற் கண்கொண்டு காண்பதே யாநந்தம்" என்று திருமந்திரம் கூறுவதால், சிவத்தை முகத்திற் கண்கொண்டு காணலாமென்றிருப்பவரைத் திருப்புதற்பொருட்டு, 'ஊனக்கண் பாச முணராப் பதியை' என்று கூறப்பட்டதென்றுங் கொள்ளலாம்.

'ஊனக்கண் பாச முணராப் பதியை (சிவம் ஊனக்கண்ணென்னும் தாமத இராசத குணம் மிக்குள்ள மனத்திற்கு விஷயமாவதில்லை; ஞானக்கண்ணென்னும் சத்துவகுணம் மிக்குள்ள மனத்திற்கு விஷயமாகும்)' என்றமையால், இனம் பற்றிச் சிவம் மகாவாக்கியத்தின் சக்திவிருத்திக்கு விஷயமாவதில்லையாம்; இலட்சணா விருத்திக்கு விஷயமாமென்பது மிங்

குணர்தற் பாலதாம். இங்குச் சிவத்தை யறிதற்கு ஞானக் கண் என்னும் சுத்தமனம் சககாரிகாரணமாயும், தத்துவமசி யென்னும் மகாவாக்கிய உபதேசம் கரண (சிறந்த காரண) மாயு மிருக்கின்றனவென்க.

"வாக்கியந் தனக்கெட் டாத வத்துவென் றுரைத்த வேதம், வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றோ" என்று கைவல்லிய நவநீதம் கூறுவதிங் குணர்தற் பாற்றாம்.

'ஊனக்கண் பாச முணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை(யில்) நாடு'தலாவது சீவனையும், அதற்குச் சாட்சியா யுள்ள ஆத்மாவையும் (கூடஸ்தனையும்), அதற்கு வேறாகா துள்ள சிவத்தையும் சுருதியுக்தி வாயிலாக ஆராய்ந்துநோக்கி, சீவன் ஆத்மாவைத் தவிரவில்லை; ஆத்மாவிற்கும் சிவத்திற்கும் தம்முள் அற்பமாகவேனும் வேற்றுமையில்லையென் றுணர்த லாம். இது கைவல்லிய நவநீதம் "தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல், பின்னையத் தலைவன் றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்" என்றும், திருமந்திரம் "தொம்பதந் தற்பதந் தோன்று மசிபதம், நம்பிய சீவன் பரன்சிவனாய் நிற்கும்" என்றும் கூறுவதால்செவ்விதாகவிளங் குவதாம். இங்ஙனமன்றி, மகாகாயத்தைக் கடாகாயத்தில்அபே தமாக வறிவதுபோல, சிவத்தை ஆத்மாவில் அபேதமாக அறி தலுமாம்; அஃதாவது மகாகாயமும் கடாகாயமும் தம்முள்

பேத முடையனவன்றென்று அவற்றை யறிவதுபோல, சிவமும் ஆத்மாவும் தம்முள் பேதமுடையன வன்றென்று அவற்றை யறிதலாம்.

ஆத்மா பிரஹ்மாபின்னம் (பிரஹ்மத்தினும் வேருயதன்று); சச்சிதாநந்த வடிவமா யிருத்தலின்; யாது சச்சிதாநந்தவடிவம், அது பிரஹ்மாபின்னம், ஈசுவரசேதனம்போல; யாது பிரஹ்மாபின்னமன்று, அது சச்சிதாநந்தவடிவமன்று, கடம்போல என்னும் அந்துவய வியதிரேகி அனுமானமிங் குணர்தற்பாலதாம். பிரஹ்மம் (சிவம்) ஆத்மாவிற்கு வேருயிருக்குமாயின், அஃதனுன்மாவாம்; ஆகவே, அது கடபடமுதலியனபோல ஜடபதார்த்தமாம். இதனுல், சிவம் ஆன்மாவிற்கு வேருமென்பது அசங்கதமாமென்பது பெறப்படுவதாம். "ஆன்மாவிற்குப் பின்னமாய்ப் பிரஹ்ம மிருக்குமாயின், அஃது அநாத்மாவாம். அநாத்ம கடாதிகள் ஜடமாயிருக்கின்றன; அதனுல், ஆத்மாவிற்கு வேருன பிரஹ்மமும் ஜடமேயாம்; ஆதலால், பிரஹ்மம் ஆத்மாவிற்கு வேறன்று; பிரஹ்மஸ்வரூபமே ஆத்மாவாம்" என்று விசாரசாகரம் ஆறுவது தரங்கத்திற் கூறுவதிங் கூன்றியுணர்தற்பாலதாம்.

அதிகாரிபுருஷன் சிவத்தைத் தன்னில் அபேதமாக வாராய்ந்தறிந்து, மாயாப்பிரபஞ்சத்தைக் கானல் நீர்போல் மித்தையாகக் கண்டு, அதன்மீது பழைய பயிற்சியினால் செல்லும் நினைவைத் தடுத்து, சமாதிசெய்து சிவாநந்தவடிவ

மாக விளங்குகின்றா னென்பதைப் பத்துவகையாகக் கூறு தலு முண்டு. அவை (1) தத்துவரூபம், (2) தத்துவதரிசனம், (3) தத்துவசுத்தி, (4) ஆன்மரூபம், (5) ஆன்ம தரிசனம், (6) ஆன்மசுத்தி, (7) சிவரூபம், (8) சிவதரிசனம், (9) சிவ யோகம், (10) சிவபோகம் என்பனவாம். இவை தசகாரிய மெனக் கூறப்படும். இவற்றைப் பதிபசுபாச விளக்கம்

(1) "தரைமுத லுத மீறாய்த் தனித்தனி காண்டல் ரூபம்,
(2) தரைமுத லுத மீறாய்த் தற்செயல் காண்டல் காட்சி,
(3) தரைமுத லுத மீறாய்ச் சடமய மென்று கண்டு, குரு
பர னருளா னீங்கல் சுத்தியாய்க் குறித்துக் கொள்ளே."
(4) "தத்துவா தீதந் தன்னிற் சகசவா ணவம லந்தான்
உற்றிடு மிதற்குச் சாட்சி நானென லுயிர்க்கு ரூபம்
(5) சித்துரு நானே யென்று தேறலே தெரிச னந்தான்
(6) முற்றுண ரீசன்முன்னர் முகிழ்த்திடா தடங்கல் சுத்தி."
(7) "எங்கணுஞ் சிவனு ளானென் றுணர்தலே யிறைவன் ரூபம், (8) அங்கவன் றொழிலெங் கண்ணு மறிதலே தரிச னந்தான், (9) திங்கள்வே ணியனோ டொன்றல் சிவயோகம் (10) மலர்ம ணம்போல், புங்கநே யத்த ழுந்தல் போகமென் றறையு நூலே," என்று கூறுவதா லறிக.

மித்தியா வஸ்துவன்றிச் சத்தியவஸ்து எவ்வகையாலும் பொய்யாகத் தோன்றுவதில்லை; கானல் நீர்போல மாயாப்பிர பஞ்சம் மித்தியா வஸ்துவாவ தன்றிச் சத்தியவஸ்து வாவ

தில்லை; கானனீர்க்குக் கானல் அதிஷ்டானமாயிருத்தல் போல, மாயாப்பிரபஞ்சத்திற்குச் சிவம் அதிஷ்டானமாயிருக்கின்றது ; கானலை யறிந்தவிடத்து நீர் மித்தையாகத் தோன்றுவதுபோல,சிவத்தை யறிந்தவிடத்து மாயாப்பிரபஞ்சம் மித்தையாகத் தோன்றுவதாமென்னு முணர்ச்சி யுடையவர்தாம் ஞானயோக சித்தராய் விளங்குவரென்பது கூர்ம புராணம்

"ஆதலால் பிரம மொன்றே நித்திய மலகைத் தேரில்
பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்ச மருண்டு தோன்றும்
தீதுறு மனத்தர் தீய பிரபஞ்சம் பிரமம் வேறென்
றோதுவ ரொக்க நோக்கும் யோகிய ரொன்றாய்க் காண்பர்."

என்று கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

ஞானக் கண்ணால் பதியைத் தன்னில் அபேதமாக ஆராய்ந்தறிந்து, மாயாப் பிரபஞ்சத்தைக் கானனீர்போல மித்தையாகக் கண்டு பந்தமற்றிருப்பவன் பரமானந்த பரிபூரண சிவமாக விளங்குவா னென்பது மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில்

"பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்
கூத்தாவுன் சேவடி கூடும்வண்ணந் தோணேக்கம்."

என்று திருவாய்மலர்ந்தருளி யிருப்பதனால் நன்கு விளங்குவதாம்.

தன்னைச் சிவமாகவறிந்து மாயாப் பிரபஞ்சத்தைக் கானனீர்போல மித்தையாகக் கண்டவனது மனம் தன்னை (ஆத்மாவை) நோக்கி நிற்பதொழிந்து, பழைய பயிற்சிவயத்தால் புலன்களின்மீது செல்லுமாயின், அவன் அதனை யடக்குதற்குரிய சாதனம் ஸ்ரீ பஞ்சாக்கரத் தியானமன்றிப் பிறிதொன்றன்று மென்பதனைத் தெரிவிக்க, 'பதிவிதி யெண்ணுமஞ்செழுத்தே' என்று கூறப்பட்டதென்க. ஸ்ரீ பஞ்சாக்கரம் உலகியலை (பொருளைத் தேடுதலையும் போகத்தை யனுபவித்தலையும்) நினையாது தன்னையே நினைப்பவர்க்கன்றி மற்றவர்க்குப் பயன் தருவதில்லையா மென்ப தொருதலையாம். இப் பஞ்சாக்கரத் தியானம் மந்திர யோகமென்று கூறப்படுகின்றது.

பஞ்சாக்கரம் நமசிவய என்பதாம்; இது ஓம் என்னும் பிரணவாட்சரத்தைக் கூட்டி 'ஓம் நமசிவய' என்று கூறப்படும்போது சடாக்கரம் என்று கூறப்படுகின்றது; ஏனைய மந்திரங்களைப் பிரணவாட்சரத்தைக் கூட்டி உச்சரிக்காவிடத்து அவை பயன்தருவ தில்லையாம்; பஞ்சாக்கர மந்திரமோ தன்னைப் பிரணவாட்சரத்தோடு கூட்டாது உச்சரித்தவிடத்தும் பயன்தருவதாக விருத்தலின், அது பதிமந்திரமென்றும், ராஜ மந்திரமென்றும், மந்திர ராஜமென்றும் கூறப்படுகின்றது. பஞ்சாட்சரத்தை முறையாக உச்சரிக்குமிடத்து அது ஜபமாம்; அதனை முறையாக நினைக்குமிடத்து

அது தியானமாம். மந்திர மென்பதன் பொருள் நினைக்கப்படுவது, நினைவிப்பது, உபசரிக்கப்படுவது, உபசரிப்பது என்பதாம். மந்திர மென்பதன்கண் மந் - (மதித்தல்) என்பது பகுதியாம்; திரம் என்பது விகுதியாம். பஞ்சாக்கர ஜபம் அல்லது பஞ்சாக்கரத் தியானம் சத்தியம் (மெய்யுரை), அஸ்தேயம் (திருடாமை), க்ஷமை (பொறுமை), சௌசம் (சுத்தம்), தானம் (ஈகை), வைராக்கியம், ஈசுவரபத்தி, தீர்த்தஸ்நானம், ஜீவகாருண்ய முதலியவற்றை யுடையார்க்கு மிகு எளிதாகப் பயன் தருவதாம். மந்திரத் தியானத்தை மந்திர ஜபமென்றுங் கூறுவதுண்டு. மந்திரத்தை ஆசிரியர் உபதேசித்தவாறு உச்சரிப்பது அல்லது நினைப்பது ஜபமாம். அது வாசிகம் மாநசமென இருவகைத்தாம்; அவற்றுள், வாசிகம்: உச்சம் உமாம்சு என இருவகைத்தாம்; மாநசம்: மநநம் தியாநமென இருவகைத்தாம்.

(1) உச்சம் - மந்திரத்தைப் பிறர் கேட்குமாறு உரத்து உச்சரிப்பதாம்; உச்சஜபம் பயன்தருவ தாயினும், கீழ்மக்கள் கேட்பதற் குரியதாயின், பயன்தருவ தில்லையாம்; அதனால், உச்சஜபம் செய்வது தகுதியான தன்றாம். (2) உமாம்சு - மந்திரத்தைப் பிறர் கேளாவாறு உச்சரித்தலாம். (3) மநநம் - மந்திராட்சரங்களை நாவசையாதிருக்க, எழுத் தெழுத்தாக வெண்ணுதலாம்; (4) தியாநம் - மந்திரத்தை மன மொருமுகமாகவிருந்து, தைலதாரைபோலத் தொடர்ச்சியாகச் சிந்தித்த

வாம். இவற்றுள், உச்சத்தினும் உமாம்சும், அதனினும் மநந மும், அதனினும் தியாநமும் கோடிமடங்குப் பயன் தருவன வாம்.

இப்பஞ்சாட்சரம்: ஸ்தூல பஞ்சாட்சரம், சூக்கும பஞ் சாட்சரம், காரண பஞ்சாட்சரம், மகாகாரண பஞ்சாட்சரம், முத்தி பஞ்சாட்சரமென ஐவகைத்தாம். அவற்றுள், (1) நம சிவய (நமசிவாய) என்பது ஸ்தூல பஞ்சாட்சரமாம்; (2)சிவய நம (சிவாயநம) என்பது சூக்கும பஞ்சாட்சரமாம்; இஃதொரு தலை மாணிக்கமென்றும் சொல்லப்படும்; இம்மந்திரத்தின் முதலிலுள்ள 'சி' என்பது மாணிக்கமாம். (3) சிவயவசி என் பது காரண பஞ்சாட்சரமாம்; இஃது இருதலை மாணிக்கமென் றும் சொல்லப்படும்; இம்மந்திரத்தின் முதலிலும் கடையிலு முள்ள 'சி' என்பது மாணிக்கமாம். (4) சிவ என்பது மகா காரண பஞ்சாட்சரமாம்; இது வசியென்றும், வாசியென்றும் சொல்லப்படும்.வசி வசி-வாசிவாசி எனத் தொடர்பாகக் கூறு மிடத்து, அவை சிவ சிவ - சிவாசிவா எனத் தொடர்பாக வருவனவாம். (5) சி என்பது முத்தி பஞ்சாட்சரமாம்; இது மகாமனு என்றும் நாயோட்டு மந்திரமென்றும் சொல்லப் படும். இவ்வைந்தனுள், யாதாவதொன்றனைச் சற்குருமூர்த்தி உபதேசித்தவாறு, உலக நாட்டமில்லாமலும், தூங்காமலும், சரீரம் ஸ்தம்பம்போன் றசையாதிருக்க, சுத்தமானவிடத்தில் வடக்கு முகமாகவேனும், கிழக்குமுகமாகவேனு மிருந்து, நாபி

ஸ்தானத்தி லிருத்தித் தியானஞ் செய்பவனுக்கு மகத்தான பயனுண்டாவதாம்.

நமசிவய என்பதன்கணுள்ள ம (மகாம்) என்பது மௌனாட்சரமாம்; இவ்வெழுத்தோடு ங் என்பதைச் சேர்த்து 'மங்' எனத் தியானஞ் செய்பவனுக்கு மனோவிருத்தி (உலகவெண்ணம்) மிகுவிரைவாக அடங்கிப் போவதாம். முத்தி பஞ்சாட்சரமாகிய சி (சிகாம்) என்பதனோடு ங் என்பதைச் சேர்த்துச் 'சிங்' எனத் தியானஞ் செய்பவனுக்கு மனோவிருத்தி மிகு விரைவாக அடங்குவதோடு சிவாநந்தம், பிரஹ்மாநந்தம், அறிவாநந்தம், அானந்த மெனப்படும் ஆத்மாநந்தம் மிகு விரைவாக விளங்குவதாம். இவ்விளக்க முடையவன்றான் அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்) என்னும் தத்துவ ஞானத்தைச் சற்குரு உபதேசித்தவாறு பெற்று, மாயாப் பிரபஞ்ச மயக்கமின்றி அறிவாநந்த வடிவமாகவே விளங்குதற் குரியவனாவன்.

நமசிவய என்பதில், சிவ என்பது பிரஹ்ம வாசகமும், ய என்பது ஆத்ம வாசகமும், நம என்பது ஐக்கிய வாசகமுமாம்; இதன் றிரண்ட பொருள் நான் சிவமாயிருக்கின்றேனென்பதாம். நமசிவய என்பது தத்துவமசி (அது நானயிருக்கின்றேன் என்னும்) மகாவாக்கியப் பொருளுடையதாம். சிவயநம என்பது (நீ அதுவாயிருக்கின்றா யென்னும்) துவந்தத்தசி மகாவாக்கியப் பொருளுடையதாம். சிவயவசி என்பது

ஆத்மா மலமும் (பாவமும்) விட்சேபமும் (மனக்கலக்கமும்) நீங்கியவிடத்துப் பிரஹ்மைவாகம் அல்லது சிவோகம்என்னும் அகண்டாகார விருத்தியுடையதாய், சிவத்தை (ஆறு கடலைச் சென்றடைவது போல) அடைந்து சிவமாக விளங்குமென்னும் பொருளுடையதாம். இப்பொருளில் ந என்பது மல வாசகமாம்; ம என்பது விட்சேப வாசகமாம்; ய என்பது ஆத்ம வாசகமாம்; வ என்பது அகண்டாகார விருத்தி வாசகமாம், சி என்பது சிவ வாசகமாம். சிவ என்பது அகண்டாகார விருத்தியில் சிவாநந்தம் விளங்கு மென்னும் பொருளுடையதாம். சி என்பது அகண்டாகார விருத்தி பூரணபாவத்தையடைந்தபோது காண்பான் காட்சி காணப்படும் பொருளென்னும் திரிபுடியின்றி ஆத்மா சிவமாகவே விளங்குமென்னும் பொருளுடையதாம். நமசிவய அல்லது சிவயநம (சிவாயநம) என்பதற்குச் சிவனுக்கு நமஸ்காரம் என்பதும் ஒரு பொருளாம்.

"நமச்சி வாயவென் றுரைத்த மந்திரம்
நவ்வொடு மவ்வும்பேராய் மாயை வலமதாய்
யவ்வான சீவன் வவ்வி லுறைந்திடச்
சிவ்வினி லொன்றாய்ச் சிவமென லாமே."

என்னும் செய்யுள் இங்குணர்தற் பாலதாம்.

பஞ்சாட்சர மென்பதற்குப் பொருள் விஸ்தார(வியாபக) மாகிய ஸாசரகிதப் பொருள் என்று கூறுவதுமுண்டு. இம்

பொருளில் பஞ்ச என்பதன்பொருள் விஸ்தாரமாகிய என்ப தாம்; அட்சரமென்பதன் பொருள் நாசரகிதப் பொருள் என் பதாம். விஸ்தாரமாகிய நாசரகிதப் பொருளைத் தெரிவிக்கும் நமசிவய என்பது ஆகுபெயரால் பஞ்சாட்சரமெனக் கூறப்படு கின்ற தென்க. பஞ்சாட்சரத்தின் பொருளை மிக விரிவாக அறிய விரும்புவோர் ஸ்ரீ சிவ பஞ்சாட்சர பாஷியம், ஸ்ரீ சிவ பஞ்சாட்சர விளக்கம் என்னும் நூல்களிற் காண்க. வேம் பினைத் தின்னும் புழு அதனைவிட்டுக் கரும்பினைத் தின்னத் தொடங்கிய விடத்தும், அது பழைய பயிற்சிவயத்தால் வேம் பினைத் தின்ன விருப்பமுடையதாவதுபோல, உலகியல்பை யனுபவிக்கும் புருஷன் அதனைவிட்டுச் சிவாநந்தத்தை யனுப விக்கத் தொடங்கியவிடத்தும்,அவன் பழைய பயிற்சிவயத்தால் உலகியல்பை யனுபவிக்க விருப்பமுடையவ னாகின்றான்; அவ்விருப்பத்தைத் தடுக்காது விடுவானாயின், அவன் பெற்ற தத்துவஞானம் திடமாவ தில்லையாம்; அவ்விருப்பம் பஞ்சாட் சரத் தியானத்தால் ஒழிவதாக விருத்தலின், அதனை அவன் தவறாதும் மறவாதும் செய்தல் வேண்டுமென்பது இங்குத் தாற்பரியமாம்.

நம்மனோர் கிரகண காலத்தில் சூரியனிடத்து அல்லது சந்திரனிடத்துச் சாயாக்கிரகத்தைக் காண்பதுபோல, அதி காரி புருஷன் பஞ்சாட்சரத் தியானத்தால் மனம் ஒருமுக மான காலத்தில் ஆன்மாவினிடத்து (தன்னிடத்து)ச்

சிவத்தை (அபேதமாக)க் காணுகின்றா னென்பது இங்குணர் தற் பாலதாம். சாயாக்கிரகம் - இராகுவும் கேதுவுமாம்.

"மீது தெரியா விராகுமதி மேவித் தெரிதல் போல வனு, பூதி யளவா முயிர்காணும் பொருளாய்க் காணப் படுமன் றே." என்று ஞானவாசிட்டம் கூறுகின்றது.

பாசிபடர்ந்த குளத்தில் கல்லைவிட் டெறியும்போது அப்பாசி விலகுவதுபோல, பஞ்சாக்கரத் தியானஞ் செய்யும் போது புலன்களின்மீது செல்லும் நினைவு நீங்குவதாம்; அதனை மறவாது தொடர்பாகச் செய்து, பஞ்சாக்கரப் பொருளாய் விளங்கும்போது அந்நினைவு முற்றும் நீங்குவதாமென்றும் இங்குணர்தல் வேண்டும்.

"ஓதிய பாசிக் கொத்தை யுதகநின் றொதுக்குங் காலைச்
சாதுவே புருட னுக்குச் சலிலமே தூய்தாய்த் தோன்றித்
தீதுறு தாகந் தாபந் தீர்ப்பதாய்ச் சுகம ளிக்கும்
எதுவா யுதவு கின்ற வியல்பினை யிங்குக் கண்டோம்."

என்று விவேகசூடாமணி கூறுகின்றது.

இங்குக்கூறிய பஞ்சாட்சர மைந்தனுள் எதனையாவது சற்குருவி னுபதேசப்படியே தியானஞ் செய்தல் வேண்டு மென்ப துணர்த்துதற் பொருட்டே எண்ணுமஞ் செழுத்தே என வாளாகூறாது 'விதி யெண்ணுமஞ் செழுத்தே' எனக் கூறப்பட்டதென்க.

'ஊனக்கண் பாச முணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி, உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத், தண் ணிழ' லாக இருக்கும் அதிகாரி புருஷனுக்குப் பழைய பயிற்சி வயத்தால் புலன்கண்மேல் நினைவு செல்லுமாயின், அவன் அதனைப் பஞ்சாக்கரத்தியானத்தா லொழித்தல் வேண்டுமென்பது திருக்குறளின் அவாவறுத்தலதிகார அவதாரிகையில் பரிமேலழகர் "மூன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேதனைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்கண் மேற் பழைய பயிற்சிவயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினைவும் அவிச்சையெனப் பிறவிக்கு வித்தாமாகலின், அதனை யிடைவிடாத மெய்ப்பொரு ளுணர்வா னறுத்தல்" என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

"அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டும், நிசத்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா யிடின்மைந்தா, கசத்த தேகத்தி லிருக்கினு மாநந்தக் கடல்வடி வாவாயே." என்று கைவல்லிய நவநீதம் கூறுவதும் இங் குணர்தற் பாலதாம்.

சிவம் ஊனக்கண்ணிற்கு விஷயமாவ தில்லையாம்; ஆனால், ஞானக்கண்ணிற்கு விஷயமாவதாம்; மாயாப் பிரபஞ்சம் பேய்த் தேர் போல்வதாம்; ஆன்மா பரமாநந்த பரிபூரண சிவசொரூப

மாக விருப்பதாம்; பஞ்சாட்சரத் தியானம் உலகியல் நினைவை யொழிப்பதற்குச் சிறந்த சாதனமாமென இச்சூத்திரம் கூறி யது பின்வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்குவதாம். அவை வருமாறு:—

## ஞானசித்தி.

"வாக்கினுன் மனத்தான் மதிக்கொணுப் பொருளை மதி வகுப் புக்களால் வருந்தி, நோக்குமா முயல்வர் முயலுகின் ருரொன் ஞெக்கிட லாகுமா றுண்டோ, தாக்கிலா தெங்கு மியாவையுந் தாஞய்த் தானவை யொன்றலாப் பொருளை, நீக்கிலா ஞான விழியிஞ லங்கைக் கனியெனக் காணலா நேரே."

## திருவாய்மொழி.

"சக்க ரத்தண் ணலேயென்று தாழ்ந்துகண் ணீர்ததும் பப், பக்க நோக்கி நின்றலர்ந்தேன் பாவியேன் காண்கின் றிலேன், மிக்க ஞான மூர்த்தியாய வேத விளக்கினையென், தக்க ஞானக் கண்களாலே கண்டு தழுவுவனே."

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

"மணமென மகிழ்வர் முன்னே மக்கடாய் தந்தை சுற்றம்,
பிணமெனச் சுடுவர் பேய்த்தேர்ப் பிறவியை வேண்டே ஞயேன்."

## பட்டினத்தடிகள்.

"நீரின்மே லெழுத்தை யதனின்மே லெழுந்த மொக்குளை நிகரில்பேய்த் தேரைக், காரின்மேன் மின்னை யென்னுடம் பென்று கருதினேன் கடைப்பிடி காணேன்."

## பதிபசுபாச விளக்கம்.

"சீவனு மிந்த வான்மா வியற்கையைத் தெரிக்குங் காலைக்
கேவலன் சுத்தன் சாந்தன் சூக்குமன் கிளர்ச நாதன்
பாவமில் சர்வா நந்தன் பகருஞ் சர்வ சாட்சி
மேவுசின் மாத்தி ரத்தன் மிகுசுக சொரூப னுமால்."

## தாயுமானவர்.

" தாக்குநல் லாநந்த சோதி அணு
தன்னிற் சிறிய-வெனைத்தன் னருளால்
போக்கு வரவற் றிருக்குஞ்—சுத்த
பூரண மாக்கினுன் புதுமைகாண் மின்னே."

## திருமந்திரம்.

" ஒன்றுகண் டருல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டருட லுக்குயி ராவதும்
நன்றுகண் டரிது (1) நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டார்க்கது தித்தித்த வாறே."

" (2) சிவாய நமவெனச் சித்த மொருக்கி
அவாய மறவே யடிமைய தாக்கிச்
(3) சிவாய வசி (4) சிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க வாநந்த மாமே."

"(5) நாயோட்டு மந்திர நான்மறை வேதம்
நாயோட்டு மந்திர நாத னிருப்பிடம்
நாயோட்டு மந்திர நாதாந்த சோதி
நாயோட்டு மந்திர நாமறி யோமே."

நாயோட்டு மந்திரம் - சீ என்பது.

## திருவாசகம்.

"நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம
வெனப்பெற்றேன்."

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத் தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக், கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற் கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட், டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை, முனைவனே முதலந்த மில்லா மல்லற் கரைகாட்டி யாட்கொண் டாய் மூர்க்க னேற்கே."

## பட்டினத்தடிகள்.

"தவியா திருநெஞ்ச மேதில்லை மேவிய சங்கரனைப்
புவியார்ந் திருக்கின்ற ஞான கரனைப் புராந்தகனை [தால்
அவியா விளக்கைப்பொன் னம்பலத் தாடியை யைந்தெழுத்
செபியாம னீசெபித் தாற்பிறவா முத்தி சித்திக்குமே."

## ஆநந்தபோதம்.

"ஒப்பரிய வஞ்செழுத்தை யிவண மெய்யே யுணர்ந்தவ ரொண் சிவமானு ருணராதேயும், செப்புறவோ ரவர்களுமித் திருநா மத்தின் தேசதனாற் றீயபவஞ் செறுவர் காணே."

அவதாரிகை.

சிவ சொரூபமாந் தேசிகமூர்த்தி நீயே சிவமென வுணர்த்த, அதனால், நானே சிவமென உணர்ந்த அதிகாரி புருஷனது வியவகாரத்தையும் அதன்து பயனையுங் கூறல்.

10. அவனே தானே யாகிய வந்நெறி
ஏக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

(இ - ள்.) *அவனே தான் ஆகிய வந்நெறி - (சிவசொரூபமாந் தேசிகமூர்த்தி நீயே சிவமென வுணர்த்த, அதனால், நானே சிவமென வுணர்ந்த அதிகாரிபுருஷன்) அச்சிவமே தானாய் விளங்கிய அம்முறைமைபோல, தான் ஏகனேயாகி - தான் அகண்ட ஏகரச (அச்)சிவமேயாய், இறைபணிநிற்க - (தன்னிடத்துப் பழைய பயிற்சிவயத்தால் கர்த்திருத்துவப் பிராந்தி யுண்டாமாயின், அது நீங்குதற்பொருட்டும், தான் பெற்றுள்ள சீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானந் திடமாதற்பொருட்டும், தனக்கெனச் செயலொன்றின்றித் தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தையும் சிவனது செயலாகக் கண்டு அவற்றிற்குச் சாட்சி மாத்திரமாக மயக்கமின்றி நிற்கக்கடவன்; அங்ஙனம் அவன் தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தையும்) சிவனது செயலாகக் காண்பதில் (தவறாதும் மறவாதும்) நிற்பானாயின், (அவனிடத்துக்*

கர்த்திருத்துவப் பிராந்தி நீங்குவதாம்; சீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானமுந் திடமாவதாம்; அதனால், அவனுக்குப் பிறவிக்குக் காரணமாயுள்ள), மலமாயை தன்னொடு-ஆணவமலமும் மாயா மலமுமென்னு மிவ்விரண்டோடு, வல்வினையின்றே - (மூன்றாவதாகிய) வலிய கன்மமலமு மில்லையாம், (எ - று).

சிவசொரூபமாந் தேசிகமூர்த்தி வாயிலாக நானே சிவமென வுணர்ந்த அதிகாரிபுருஷன் அச்சிவமே தானாய் விளங்கிய முறைமைபோல, தான் அச்சிவமேயாய்த் தன்னிடத்துப் பழைய பயிற்சிவயத்தால் கர்த்திருத்துவப் பிராந்தி யுண்டாமாயின், அது நீங்குதற் பொருட்டும், தான் பெற்றுள்ள தத்துவஞானம் திடமாதற் பொருட்டும், தனக்கெனச் செயலொன்றின்றித் தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தையும் சிவனது செயலாகக் கண்டு அவற்றிற்குச் சாட்சி மாத்திரமாக மயக்கமின்றி நிற்பானாயின், அவனிடத்துக் கர்த்திருத்துவப் பிராந்தி நீங்குவதாம்; தத்துவஞானமுந் திடமாவதாம்; அதனால், அவனுக்குப் பிறவிக்குக் காரணமாயுள்ள மலமூன்று மில்லையாம்; (அவை யில்லையாகவே, அவன் பரமானந்த பரிபூரண சிவசொரூபமாகவே விளங்குதற் குரியவனாகின்றான்) என்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

ஏகாரம் மூன்றனுள் முன்னையது பிரிநிலைப் பொருளிலும், பின்னையவை தேற்றப் பொருளிலும் வந்தன. தான்

என்பது ஏகனென்பதன் முன்னும் அதனேகாரம் ஏகனென் பதன் பின்னும் சென்றியைந்து நின்றன. நெறியின் என் னும் உவமவுருபு தொக்குநின்றது. மலமாயை உம்மைத் தொகை. மலமாயை தன்னொடு என்பன பன்மையொருமை மயக்கம். கர்த்திருத்துவப்பிராந்தி - (யான்) கர்த்தாவென்னும் விபரீதபுத்தி.

ஊனக்கண் பாச முணராப் பதியை (சிவத்தை) ஞானக் கண்ணால் ஆத்மாவாகிய தன்னிடத்து அபேதமாக வாராய்ந் தறிந்த அதிகாரி புருஷன் தன்னை ஞானக்கண்ணால் அப்பதி யினிடத்து அபேதமாக வாராய்ந்தறிந்தா னென்பார் 'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக னாகி' என்றார். ஆத்மாவின் கண் சிவத்தை யபேதமாகவறிவது கடாகாயத்தின்கண் மகா காயத்தை யபேதமாக வறிவது போலவாம் ; சிவத்தின்கண் ஆத்மாவை யபேதமாக வறிவது மகாகாயத்தின்கண் கடா காயத்தை யபேதமாகவறிவது போலவாம் ; இதனால், சிவம் ஆத்மாவாயும் அதனின் வேறாயு மிருக்கின்றது ; ஆத்மா சிவ மாகாதிருக்கின்ற தென்பார் கொள்கை மறுக்கப்பட்டவா றறிக. 'மலமாயை தன்னொடு வல்வினை'போமே என்னாது 'மலமாயை தன்னொடு வல்வினை யின்றே' என்று கூறின மையின், அவை கயிற்றரவு கானனீர் முதலியனபோலக் கற் பிதப் பொருளாமென்பது பெறப்படுவதாம்; அவை யதார்த்தப் பொருளாமாயின், நிவிர்த்தியாவனவன்றாம் ; நிவிர்த்தியாய்

விடுதலின், கற்பிதப் பொருளேயாம். கயிற்றரவும் கான னீரும் கயிற்றையும் கானலையு மறிந்தவுடன் நிவிர்த்தியாய் விடுதல் மிகுபிரசித்தமாமன்றோ ? மலமாயை முதலியன தன்னைச் சிவமாக வுள்ளவா றுணர்ந்தவனுக்கு நிவிர்த்தியாய் விடுதலின், அவை ஆத்மவடிவ சிவத்தின்கண் அல்லது சிவவடிவ ஆத்மாவின்கண் கற்பிதமாக விருக்கின்றன வென்பது தேற்றமாம். மல மாயை கன்மங்கள் சுருதிசம்பந்த ஞானமுடையார்க்கு ஆகாயத் தாமரைபோலத் துச்சமாகவும், யுக்திசம்பந்த ஞானமுடையார்க்குக் கானனீர் கயிற்றரவு முதலியன போல மித்தையாகவும், சுருதி சம்பந்த ஞானமும் யுக்திசம்பந்த ஞானமு மில்லாதவர்க்கு ஆத்மாப்போல நித்தியமாகவும் தோன்றுகின்றன வென்பது இங்குணர்தற் பாலதாம்.

"அந்தப் பராவரத்தை (எல்லாவற்றினும் மேலாயுள்ள சிவத்தை)க் காணவே (அபரோட்சமாக வறியவே), இந்த ஞானியின் இருதயக்கிரந்தி (அகங்காரக்கிரந்தி) பேதிக்கப்படுகின்றது;இவனது1 சகல சம்சயங்களும் சேதிக்கப்படுகின்றன; இவனது சகலகருமங்களும் கெடுகின்றன" என்னும் சுருதியை (முண்டகோபநிஷத் வாக்கியத்தை) யனுசரித்து இச்சூத்திர மிருப்பதறிக.

'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக னாகி' யியல்பாயிருக்க என்னாது,'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக னாகி யிறைபணி நிற்க' என்றது அவனே தானாக, தான் அவனே

யாக, அவனுக்கும் தனக்கும், தனக்கும் அவனுக்குமுள்ள அபேதத்தை அறிந்த அதிகாரி புருஷன் தன்னிடத்துப் பழைய பயிற்சிவயத்தால் கர்த்திருத்துவப் பிராந்தி யுண்டா மாயின், அதனைக் கெடுத்தற்பொருட்டும், தனது தத்துவ ஞானம் திடமாதற் பொருட்டும் தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தையும் சிவனது செயலாகக் கண்டு தனக்கெனச் செயலொன்றின்றி அவற்றிற்குச் சாட்சி மாத்திரமாக மயக்கமின்றி யிருக்கவேண்டுமென்ப தறிதற்பொருட்டாமென்க. இவ்வாறிருப்பவனுக்கே மல மாயை கன்மங்கள் இல்லையா யொழிவனவாம். இது கைவல்லிய நவநீதம்

"சந்ததம் புருடன் றன்னைச் சாயைபோல் விடாம லன்பா,லைமந்தனே நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றுயோ'' என்றும், சொரூபசாரம்

"சித்துருவ மாகிச் செகசாட்சி தாமான
முத்தரைக்கா மாதி முனியாவே—சித்தத்தில்
இங்கற்ப வாசனைக ளெல்லா மெடுத்தருந்திச்
சங்கற்ப மில்லாத தால்"

என்றும் கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

அவனே தானுதலைப் போதிக்கும் வாக்கியம் தத்துவமசி மகா வாக்கியமாம்; தான் அவனே யாதலைப் போதிக்கும் வாக்கியம் துவந்தத்தசி மகாவாக்கியமாம். தத்துவமசி

என்பதன்பொருள் அது (சிவம்) நீயா யிருக்கின்றாயென்ப தாம்; துவந்தத்தசி என்பதன் பொருள் நீ அதுவாய் (சிவமாய்) இருக்கின்றாய் என்பதாம். அவனே தான் (தத்துவம் - அஃதாவது அது நீ), தான் ஏகனே (துவம் தத் - அஃதாவது நீ அது) என ஓதப்புரோத பாவமாகக் கூறுவது அவனென்ப தன்கண் (சிவத்தின்கண்) பரோட்சத்துவப் பிராந்தியும், தானென்பதன்கண் (ஆத்மாவின்கண்) பரிச்சின்னத்துவப் பிராந்தியும் நீங்குதற் பொருட்டாம். பரோட்சத்துவம்-பிரத்தியட்சமாகாத் தன்மை; பரிச்சின்னத்துவம்-கண்டத்தன்மை, அஃதாவது சுருங்கிய வடிவத் தன்மை; பிராந்தி - விபரீத புத்தி. ஓதப்புரோதபாவம், அந்வயம், வியதிகாரம், குறுக்கு நெடுக்கு என்பன ஒருபொருட்கிளவிகளாம். இங்கு அவனென்பது ஈசுவர சாட்சியான பிரஹ்மமாம்; தானென்பது சீவசாட்சியான ஆத்மாவாம்.

அவனே தான் (தத்துவம்-அதுநீ) என்பதனால் சிவத்திற்கு நித்திய அபரோட்சமாயுள்ள ஆத்மாவோடு அபேதம் சித்திக்கின்றது; அதனால், சிவத்தின்கண் பரோட்சத்துவப் பிராந்தி நிவிர்த்தியாகின்றது; தான் ஏகனே (துவம்தத்-நீ அது) என்பதனால் ஆத்மாவிற்கு வியாபகமாயுள்ள சிவத்தோடு அபேதம் சித்திக்கின்றது; அதனால், ஆத்மாவின்கண் பரிசின்னத்துவப் பிராந்தி நிவிர்த்தியாகின்றதென்க. அபரோட்சம் - பிரத்தியட்சம்.

தத்துவோபதேசம்—"நித்தமு மதுநீ யாகு நீயது வா கும்" என்பதன்றிப் பிறிதொன்றன் றென்பதனை யுணர்த்த 'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக ஞகி' என்று கூறப் பட்டதென்க.

"அயமாத்மாப் பிரஹ்மம் (இந்த ஆத்மாப் பிரஹ்மம்)" "பிரஞ்ஞானம் பிரஹ்மம் (அறிவு பிரஹ்மம்)" "அகம் பிரஹ் மாஸ்மி (நான் பிரஹ்மாயிருக்கின்றேன்)" என்னும் மகாவாக் கியங்களுக்கும் இவ்வாறே பொருள் கொள்ளல் வேண்டும். இம்மகாவாக்கியம் நான்கனுள் **தத்துவமசி** என்பது உபதேச மகா வாக்கியமாம்; பிரஞ்ஞானம் பிரஹ்மமென்பது அப்பியாச மகா வாக்கியமாம்; அயமாத்மாப் பிரஹ்மம் என்பது சம்மதி மகா வாக்கியமாம்; அகம்பிரஹ்மாஸ்மி என்பது அநுபூதி மகா வாக்கியமாம். இம்மகாவாக்கியங்களின் பொருள் விரிவைக் கைவல்லிய நவநீத விஞவிடையின் 71 - 78 பக்கங்களிற் காண்க.

## பைங்களோபநிஷத்.

"அது (சிவம்) நீயாயிருக்கின்ருய்; நீ அதுவாயிருக்கின் ருய்; நீ பிரஹ்மமா யிருக்கின்ருய்; நான் பிரஹ்மமா யிருக் கின்றேன் என்று அனுசந்தானஞ் செய்தல் வேண்டும்."

## மகாநாராயணுேபநிஷத்.

"நீ பிரஹ்மமா யிருக்கின்ருய்; நான் பிரஹ்மமா யிருக் கின்றேன்; நம்மிருவருள் பேதமில்லை; நீயே நான்; நானே நீ யென்றிவ்வாறு கூறி ஆதிநாராயணர் மறைந்தார்."

### சிவபுராணம்.

(கைலாய சங்கிதை - அத்தியாயம் - 10).

"அத்வைத ஞானம் இது ஓரிடத்தும் துவைதத்தைச் சகியாது; சர்வஞ்ஞனும் சர்வ கர்த்தாவுமாகிய சிவனே தனது மாயையினாலே சுருங்கிய வடிவுடையவனைப் போலாகிப் புருஷனானான்; கலாதி பஞ்சகத்தினாலே போக்திருவாகக் கற்பிக்கப் பட்டான்; பிரகிருதியிலுள்ள இப்புருஷனே பிரகிருதியினாலாகிய குணங்களைப் புசிக்கின்றான்; இவ்வா றிரண்டிடங்களிலுமுள்ள புருஷன் விரோதமுடையவ னல்லன்."

### திருமந்திரம்.

"தானவ னாக வவனேதா னாயிட
ஆன விரண்டி லறிவன் சிவமாகப், போனவன்."

### திருவாசகம்.

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்,
அந்தமொன் றில்லா வாநந்தம் பெற்றேன்."

### சமாதி.

"ஆதலா லாகா யத்திற் கடாகாயம் வேறா னாற்போல்
பேதமி லான்மாச் சீவன் பரனெனப் பிராந்தி யாலே
ஓதிட நின்ற தன்றி யுணர்விடைப் பேத மின்றாம்
தீதியி னின்ற சீவ னிலைமைய திவண மன்றே."

### திருமழிசையாழ்வார்.

"நானுன்னை யன்றி யிலேன்கண்டாய் நாரணனே,
நீயென்னை யன்றி யிலை."

### ஞானவிளக்கம்.

"நல்லகுலத் திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மாணு - நல்ல
சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தைகலங் காதே
சிவமென்ற நீயே சிவம்."

இவையும் இவைபோல்வனவு மிங்குணர்தற் பாலனவாம்.

இறைபணி நிற்றலாவது சிவமே நான், நானே சிவமென்றுணர்ந்த அதிகாரி புருஷன் ஸ்தூலபஞ்ச பூதங்களும் அவற்றின் காரியங்களும் சிவனுக்கு ஸ்தூலசரீரமா யிருத்தலின், எனக்கென்றொரு ஸ்தூல சரீரமில்லை; சூக்கும பஞ்சபூதங்களும் அவற்றின் காரியங்களும் சிவனுக்குச் சூக்கும சரீரமா யிருத்தலின், எனக்கென்றொரு சூக்கும சரீரமில்லை; ஸ்தூல பூத சூக்குமபூத மனைத்திற்கும் பரிணாமியுபாதான காரணமாயுள்ள மாயையும் அதனொரு பகுதியாயுள்ள சீவகாரண சரீரங்களும் சிவனுக்குக் காரணசரீரமா யிருத்தலின், எனக்கென்றொரு காரண சரீரமில்லை; "சிவன்றான் பலபல சீவனு மாகி" யிருத்தலின், சிவனைத்தவிர சீவர்களில்லை; அதனால், எனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தும் அவனுடைய செயலேயாம்; எனக்கெனச்செய லொன்றுமில்லை யென்னும்

ணிவுள்ளவனுய்த் தற்(சீவ)போதமற் றிருத்தலாம். இதனுல், அதிகாரி புருஷன் யானெனை தென்னுஞ் செருக்கின்றி யொழுகுவானென்பது பெறப்படுவதாம்.

சிவன் தனக் கன்னியமென்பது சிறிதுமின்றி யெல்லாந் தானுகவே யிருக்கின்றுன்; அவனுக்கும் எனக்கும் உண்மையில் அற்பமாகவேனும் வேற்றுமை யில்லையென்ப துணர்ந்து, உணர்ந்தவா றிருப்பவனது வியவகாரம் சிவனது வியவகாரமாக விளங்குமென்ப திங்குணர்தற் பாற்றும். "ஈசனுக்குத் தூலவுடல் பூதபௌ திகமே ஈசனுக்குச் சூக்கவுட லிருவகைச் சூக் குமமே, ஈசனுக்குக் காரணமா முடன்மாயை யவனே ஈச னவன் சாட்சியே பிரமமிவை யைந்தாம், ஈசனுக்குஞ் சீவனுக்கு மைக்கிய மெவ்வா றென்னி லீசனுடன் மூன்றனைப்பார்த் திடிலிவனுக் குடலே, நீசனெனி னிவனிலையீசுரசாட்சி யென்று லிவன்சாட்சி வேறுமற் றிதுவேபஞ் சைக்யம்." என்று உபநிடதம் கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

ஆணவமலம் அஞ்ஞானத்தின் ஆவரண சத்தியாம்; மாயா மலம் அதன் விட்சேப சத்தியாம்; கன்மமலம் தருமாதருமங்களாம்; இவை அறம்பாவ மென்றுங் கூறப்படும். ஆணவமலம் சிவசொரூபத்தைக் கற்பனையாக மறைப்பதாம்; மாயாமலம் அச் சிவத்தினின்றும் பிரபஞ்சத்தைக் கற்பனையாகத் தோன்றச் செய்வதாம்; கன்மமலம் சீவர்களது பிறப்பிறப்பிற்கு நேர் காரணமாக விருப்பதாம். ஆணவமலமும் மாயாமலமும் கன்ம

மலமும் முறையே அவிச்சை காமம் கர்மமென்றுங் கூறப்படு கின்றன.

'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக ஞகி யிறைபணி நிற்'கும் அதிகாரி புருஷனுக்குத் தத்துவ ஞானத்தால் அஞ் ஞானத்தின் ஆவரண சத்தியும் (ஆணவமலமும்), தத்துவ ஞானத்தின் சம்ஸ்காரத்தால் அதன் விட்சேப சத்தியும் (மாயாமலமும்),நாசமாவனவாம்; சஞ்சிதம் ஆகாமியம் பிராரத் தம் என்னும் கன்மமல மூன்றனுள், சஞ்சிதகர்மம் தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தின் ஆவரணசத்தி நாசமாம்போது நாசமாவதாம்; ஆகாமிய கன்மம் பிரமஜதாதாத்மியம் நாசமாம் போது நாசமாவதாம்; பிராரத்த கன்மம் தத்துவ ஞானத்தின் சம்ஸ்காரத்தால் அஞ்ஞானத்தின் விட்சேப சத்தி நாசமாம் போது நாசமாவதா மென்க. தத்துவ ஞானத்தின் சம்ஸ்காரத் தால் அஞ்ஞானத்தின் விட்சேபசத்தி நாசமாகின்ற தென் பதற்குப் பிரமாணம் "பூயச்சாந்தே விசுவமாயா நிவிர்த்திஃ= முடிவில் மீண்டும் தேகாதி காரியமாகிய விசுவமாயா நிவிர்த்தி யுண்டாகின்றது" என்னும் சுருதியாம். சஞ்சித கன்மம் அஞ்ஞானத்தின் ஆவரண சத்தியி லிருப்பதாம்; ஆகாமிய கன்மம் பிரமஜதாதாத்மியத்தி லிருப்பதாம்; பிராரத்த கன்மம் அஞ்ஞானத்தின் விட்சேப சத்தியி லிருப்பதாம். பிரமஜ தாதாத்மியம் அகங்காரத்திற்குச் சாட்சியோடுள்ள ஒருமைப் பாடாம். (பிரமஜதாதாத்மியம்=பிராந்தியா லுண்டாய ஒரு

மைப்பாடு; பிராந்தி - விபரீதவுணர்ச்சி). இது தத்துவ ஞானத்தால் பிராந்தி (அவிவேகம்) நாசமாம்போது நாசமாவதாம். ஞானியின் சஞ்சித கன்மம் தத்துவ ஞானத்தால் நாசமாகின்றது; ஆகாமிய கன்மம் அவனுக்கு ஆத்மாவின்கண் கர்த்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி யில்லாமையால் அவனோடு சம்பந்தமுறுவ தில்லை; பிராரத்த கன்மம் போகத்தால் நாசமாவதாம்; ஞானியின் சுப அல்லது அசுபவடிவ ஆகாமிய கன்மத்துள், சுப கன்மத்தை அவனைப் பூசிப்பவரும் அசுப கன்மத்தை நிந்திப்பவரும் பெற்றுக் கொள்ளுகின்றன ரென்பது இங்குணர்தற் பாலதாம்.

கர்த்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தியென்றமையின், ஐவகைப்பிராந்தியு மிங்குக்கொள்ளல்வேண்டும். அவை பேதப் பிராந்தி, கர்த்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி, சங்கப் பிராந்தி, விகாரப் பிராந்தி, பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தி என்பனவாம்.

''நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையும், சத்திய மிந்த வுலகெனல் கருவி தணந்திடா துடலைநா னென்னல், கத்தபோத் தாவு நானெனல் தானுங் கடவுளும் வேறெனக் கருதல், சித்துரு வாகி யிருந்து நானேகன் சிவனெனல் சிதடர்பா லறியே'' என்று அதிரகசியங் கூறுவதிங் குணர்தற் பாற்றும்.

பிறப்பிறப்பு முதலிய விவயகாரங்கட்கு நேர்காரணமாக விருப்பது வினையே; பிறிதொன்றன்றென்ப துணர்த்த வினை யென வாளாகூருது 'வல்வினை' எனக் கூறப்பட்டதென்க.

சரீரமுண்டாதற்குக் காரணம் இருவினையாம்; அவை யுண்டாதற்குக் காரணம் விருப்பு வெறுப்பாம்; அவையுண்டா தற்குக் காரணம் யானெனதென்னும் அபிமானமாம்; அஃ துண்டாதற்குக் காரணம் அவிவேகமாம்; அஃதுண்டாதற்குக் காரணம் அஞ்ஞானமாம்; தத்துவ ஞானத்தால் அஞ்ஞானம் நாசமானபோது அவிவேகம் நாசமாகின்றது; அது நாசமான போது அபிமானம் நாசமாகின்றது; அது நாசமானபோது விருப்பு வெறுப்புக்கள் நாசமாகின்றன; அவை நாசமான போது இருவினைகள் நாசமாகின்றன; அவை நாசமானபோது பிறப்பிறப்பு முதலியன நாசமாகின்றன வென்பது சாஸ்தி ரார்த்தமாம்.

சிவசொரூபமாந் தேசிகாது அருளுபதேசத்தால் சிவமே நான், நானே சிவமென்பதுணர்ந்த அதிகாரி புருஷன் தனக் கெனச் செயலொன்றின்றி எல்லாஞ் சிவன் செயலெனக் கண்டு, அவற்றிற்குச் சாட்சி மாத்திரமாக விருப்பானாயின், சிவஞானியாவன்; அவனுக்குப் பிறப்பிறப்பிற் கேதுவாகிய மல மாயை கன்மங்களில்லையா மென்பது பின்வரும் பிரமா ணங்களாலும் நன்கு விளங்குவதாம். அவை வருமாறு:—

## கைவல்லிய நவநீதம்.

"பஞ்சினை யூழித் தீப்போற் பலசன்ம விவித வித்தாம்
சஞ்சித மெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீ றாக்கும்
கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத் தத்தின் வினையனு பவித்துத் தீரும்."

"பொறுமையாற் பிராரத் தத்தைப் புசிக்குநாட் செய்யுங் கர்மம், மறுமையிற் றொடர்ந்தி டாமல் மாண்டுபோம் வழியே தென்றால், சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபாவத்தைக் கொள்வார், அறிவுளோ ரறிந்து பூசித் தறமெலாங் கைக்கொள் வாரே."

"அரியமெய்ஞ் ஞானத் தீயா லவித்தையா முடனீ றாகும்
பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழுமந் நேரம்
உரியசூக் குமச ரீர முலையிரும் புண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தி லிறந்து போமே"

## பதிபசுபாச விளக்கம்.

"சஞ்சிதந் திருநோக் காற்போம் பிராரத்தந் தனுவோடேகும், விஞ்சுமா காமி யந்தான் விளங்குஞா னத்தி னாற்போம், செஞ்சயான் செய்த வெல்லாஞ் சிவன் செய்த தென்றுணர்ந்தால், பஞ்சனே வினைத்தி றங்கள் வந்துனைச் சந்தி யாவே."

திருமந்திரம்.

*"இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி*
*குருவென வந்து குணம்பல நீக்கித்*
*தருமெனு ஞானத்தாற் றன்செய லற்றால்*
*திரிமலந் தீர்ந்து சிவனாவ னாமே."*

---

அவதாரிகை.

'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக னாகி யிறைபணி நின்'றமையால், "தேகத்த னலனாகி யகர்த்த னாகிச் சீவனின்றிச்" சிவமாகித் தெளிந்த சீவன்முத்தன் செய்ந்நன்றி மறத்த லென்னும் குற்றம் தன்கண் நிகழாவாறு சற்குரு மூர்த்தியின் கண் உழுவலன்புடையவனா யிருந்து விதேகமுத்தி யடைகின்றா னெனல். உழுவலன்பு-பேரன்பு.

11. காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரன்கழல் செலுமே.

(இ - ள்.) (*'அவனே தானே யாகிய வந்நெறி, ஏக னாகி யிறைபணி நின்'றமையால் சீவன் முத்தனானவன்*) காணுங் கண்ணுக்கு - (உருவத்தைக்) *காண்பதற்குத் தகுதியுடைய நேத்திரேந்திரியத்திற்கு, காண* - (*அஃது அவ்வுருவத்தைக்*) *காணும்படி,* கண்டு - (*தான் அதனைக்*) *கண்டு,* காட்டும் - *காட்டுகின்ற,* உளம்போல் - *ஆன்மாப்போல,* உள்ளத்தை -

சத்ரூபப்பிரஹ்மத்தை, [காணுந்தனக்கு-காண்பதற்குத் தகுதி யுடைய தனக்கு, காண - (தான் அச்சத்ரூபப் பிரஹ்மத் தைக்) காணும்படி, கண்டு - (தாம் அதனைக்) கண்டு,] காட்ட லின் - (சற்குருமூர்த்தி) காட்டினமையால், (அவரிடத்து), அயராவன்பின் - சோர்வில்லாத உழுவலன்போடு (இருந்து), அரன்கழல் செலுமே - சிவபதமடைகின்றான், (எ - று).

சீவன்முத்த புருஷன் கண்ணுக்கு உருவத்தைக் காட்டு கின்ற ஆன்மாப்போல, தனக்குச் சிவத்தைக் காட்டிய சற் குருவி னிடத்துப் பேரன்புடையவனா யிருந்து விதேகமுத்தி யடைகின்றா னென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொரு ளாம்.

இச்சூத்திரத்துள் 'காணுங் கண்ணுக்குக் காட்டு முளம் போல்' என்பது உவமான வாக்கியமாம்; 'காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்' என்பது உவமேய வாக்கியமாம்; இவற் றுள், உவமேய வாக்கியத்திலுள்ள 'காண' 'கண்டு' என்பன உவமான வாக்கியத்திற் சென்றியைந்து நின்றன; உவமான வாக்கியத்திலுள்ள 'காணுங் கண்ணுக்கு' என்பதற்கேற்ப உவ மேய வாக்கியத்தில் காணுந்தனக்கு என்பதும், உவமேய வாக் கியத்திலுள்ள 'உள்ளத்தை' என்பதற்கேற்ப உவமான வாக்கி யத்தில் உருவத்தை என்பதும், உவமான வாக்கியத்திலுள்ள 'உளம்' என்பதற்கேற்ப உவமேயவாக்கியத்தில்சற்குருமூர்த்தி

என்பதும் வருவித்துரைக்கப் பட்டன. உள்ளதை என்பது செய்யுள் விகாரத்தால் 'உள்ளத்தை' என வந்தது. உள்ளது என்பது சிவத்தின் பரியாயப் பெயர்களுள் ஒன்றும்; அதனை "ஓர்த்துள்ள முள்ள துணரி, னொருதலையாப், பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" என்னுந் திருக்குறளா லறிக. (உள்ளது - முதற்பொருள்.) அன்பின் என்பது உருபுமயக்கம்; இருந்து என்பது சொல்லெச்சம். 'காணுங் கண்ணுக்குக் காட்டு முளம் போல்' எனக் கூறப்பட்டதாயினும், இனம்பற்றிக் கேட்குஞ் செவிக்குக் கேட்பிக்கு முளம்போல் என்றற் றொடக்கத்தன வற்றையுங் கொள்க. உளம் என்றது சீவாத்மாவை. உருவ முதலியவற்றைக் காண்டல் கேட்டல் முதலியவற்றிற்குக் கண்ணிந்திரியம் காதிந்திரிய முதலியன கருவி கர்த்தாவாம்; சீவாத்மா வினைமுதல் கர்த்தாவாம். கண்ணிந்திரிய முதலியன இங்கு வினைமுதல் கர்த்தாப்போலக் கூறப்பட்டன. இவ்வாறு கூறுத லிருவகைவழக்கிலு முண்டு; கண் காணும்; செவி கேட்கும் என்றற்றொடக்கத்தன உலக வழக்காம்; "சத்தமுத லந் தனையும் பொறிக ளறியும்;" "விடயமறிந் திடும்பொறிகள் விடய மாமோ" என்றற்றொடக்கத்தன செய்யுள் வழக்காம். 'விளம்பிய வுள்ளத்து மெய்வாய்கண் மூக்கு' என்னும் சூத்திரத்தாற் பெறப்பட்ட பொருளே 'காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்' என்பதற்கும் பெறப்படுதலின், இவ் வுவமை கூறியதுகூறலாமெனின், 'விளம்பிய வுள்ளத்து' என்

ஞுஞ் சூத்திரம் சீவாத்மா சுதந்தரமா யொன்றை யறிதற் குரிய தன்றென்பதை விளக்குவதற்கும், இச்சூத்திரம் சற்குரு உபதேசஞ் செய்யு முறைமையை விளக்குவதற்கும் வந்தமை யின், அது கூறியது கூறலன்றா மென்க.

அரன்கழல் (சிவபதம்) என்பது அன்னிய மின்மை யாகிய அத்துவித நிலையாம்; அஃதிங்கு விதேகமுத்தியாம். அரன்கழல் செலுமே' என்பதனுள் 'கழல் (பதங்கள்)' என் பது தத்துவமசி மகா வாக்கியத்துள்ள தத்பதத்தின் இலட்சி யார்த்தமான சிவத்தையும், துவம்பதத்தின் இலட்சியார்த்த மான ஆன்மாவையும், 'செலுமே' என்பது அவற்றின் ஐக்கி யத்தையும் குறிப்பித்து நின்றனவென்க. 'அரன்கழல் செலுமே' என்பதன் கருத்துப்பொருள் சிவஞானி ஆநந்த வடிவமாயுள்ள சீவப்பிரஹ்ம ஐக்கிய நிலையை யுடையவஞ கின்றா னென்பதாம்; அஃதாவது தான் சிவ (ஆநந்தவடிவ) மாகவே விளங்கும் நிலையுடையவ ஞகின்றா னென்பதாம். 'அயராவன்பின்'' என்று கூறப்பட்டதாயினும், இனம்பற்றி, சீவன்முத்த புருஷன் திடதரமான சாந்தி, சாத்வீக சம்பத்து, சர்வபூத சமத்துவம், வைராக்கியம், அத்தியான்ம நிஷ்டை, நிச்சலஸ்திதி, அகங்கார மமகார மின்மை, நித்தியத் திருப்தி, பயமின்மை, சோகமின்மை, பரிசுத்தத் தன்மை, சிஷ்யனைத் தன்னைப்போ லாக்குதல் என்னுஞ் சிறந்த குணங்களை யு முடையவஞ யிருப்பானென்றுங் கொள்க.

உருவத்தைக் காண்பதற்குத் தகுதியுள்ள கண்ணுக்கு அஃது அதனைக் காணும்படி சீவான்மா தான் அதனைக் கண்டு காட்டுவதுபோல, சிவத்தைக் காண்பதற்குத் தகுதியுள்ள அதிகாரி புருஷனுக்கு அவன் அதனைக் காணும்படி எவன் தான் அதனைக் கண்டு காட்டுகின்றானோ அவனே சற்குரு மூர்த்தியாவனென்பது 'காண' 'கண்டு' 'காட்டலின்' என்பதனால் நன்குவிளங்குமா றறிக. மூன்றாம் பிறையைக் கண்டவன் அதனைப் பிறர்க்குக் காட்டுவதற்குத் தகுதியுடையவனாவதுபோல, சிவத்தைக் கண்டவன் அதனைப் பிறர்க்கு (அதிகாரி புருஷர்க்கு)க் காட்டுவதற்குத் தகுதியுடையவ னாகின்றானென்பது இங்குணர்தற்பாற்றாம்.

"பிரஹ்ம நிஷ்டராயும்(வழியின் அனுபவமுடையவனாய், வழியைக் காட்டும் புருஷனைப்போல, பிரஹ்மத்தினிடத்து நிஷ்டையுடையவராயும்),சுரோத்திரியராயும்(வழியின் அடையாளங்களை யறிந்து வழிகாட்டும் புருஷனைப்போல, சுருதிகளின் அர்த்தத்தை யுணர்ந்தவராயும்), சரணடைந்த சீடனுக்கு வழிகாட்டும் புருஷனைப்போல ,அத்வைதப் பிரஹ்மத்தை யுபதேசிப்பவ ரெவரோ அவரே ஸ்ரீமானாகிய (பிரஹ்ம வித்தையாகிய இலட்சுமியுடைய) குருதேவராவர்" என்று பாலபோதம் முதலுபதேசத்திற் கூறுவது 'காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல், காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்' என்பதற் கொத்திருப்ப தறிக.

இந்நூல் 'அவனே தானே' என்னும் சூத்திரத்தில் அதிகாரி புருஷன் சீவன்முத்தி யடைகின்றா னென்பதைக் கூறி, இச்சூத்திரத்தில் அவன் விதேகமுத்தி யடைகின்றா னென்பதைக் கூறியதென்க. சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப்பிராப்தி வடிவ மோட்சத்தைத் தத்துவஞானி யடைகின்றானென்பதை யுணர்த்துதற்பொருட்டு இந்நூல் 'அவனே தானே' என்னுஞ் சூத்திரத்தில் 'மலமாயை தன்னொடு வல்வினையின்றே' எனச் சர்வதுக்க நிவிர்த்தியைக் கூறி, இச்சூத்திரத்தில் 'அரன்கழல் செலுமே' எனப் பரமாநந்தப் பிராப்தியைக் கூறியதென்றுங் கொள்க. மோட்ச மென்பது சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப்பிராப்தி வடிவமாமென்பதை வேதாந்த சூடாமணி "பயன் றுயரொலாநீத் தாநந்த பதம்பெறுதல்" என்று கூறுவதாலு மறிக. மல மாயை கன்மமூன்றும் துக்க சாதனமாயிருப்பதன்றித் துக்கவடிவ மன்றாம்; ஆயினும், அவை காரியவாகு பெயரால் துக்கமென்று கூறப்படுகின்றன. இவ்வாறு கூறுவது ஆயுளைத்தரும் நெய்யை ஆயுளென்று கூறுவது போல்வதாம். தர்க்கபரிபாஷை "அபவர்க்கம் மோட்சம். அதுவும் இருபத்தொருவகை துக்கமுழுதுங் கெடுதல். இருபத்தொருவகை:—உடம்பு, ஆறிந்திரியங்கள், ஆறுவிடயம், ஆறுஞானம், சுகதுக்க மென்பனவே; இங்ஙனம் கௌண முக்கிய பேதத்தால் சுகம் துக்கத்தோடு கூடலின் துக்கமென்றுபசரிக்கப்படும். கூட்டம் - நீங்காதிருத்தல். இவ்வுபசாரம்

தேன் விடத்தோடுகூடின் தேனும் விடக்கூற்றில் (பகுதியில்) வைத்தல்போல" என்று கூறுவதிங் குணர்தற்பாற்றும்.

சிவஞானி தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக்கொண் டிருக்தச் சிவ சொரூபமாகவே நிலைத்தல் சீவன்முத்தியாம். சீவன் முத்தனுக்கு அவித்தையின் ஆவரண விட்சேப மென்னுஞ் சத்தி யிரண்டனுள், சம்சார பரம்பரைக்குக் காரணமான ஆவரணம் தத்துவ ஞானத்தால் நசித்தும், அவித்தியா லேச மென்னும் விட்சேபம் (வறுத்தவிதை போன்று) விதேகமுத்தி வரையில் பிராரத்த கர்மத்தால் நசியாதிருத் தலின், அதுபற்றி அவனுக்கு (விட்சேப சத்தியின் காரிய மான) தேகாதிப் பிரபஞ்சம் (பொய்யென்று நிச்சயிக் கப்பட்ட கானனீர் மீண்டுந் தோற்றுதல் போன்று) தோற் றிக்கொண் டிருக்கின்றதென்க. " திரிசிய மாம்ப வஞ்சந் தேய்ந்துசொப் பனம்போற் றோன்ற, உரியவெம் பால்வி ழித்தோ னொருவனே சீவன்முத்தன்" என்று சூதசங்கிதை கூறுவதிங் குணர்தற்பாற்றும்.

சிவஞானி தேகாதிப் பிரபஞ்சம் பொய்யாகவேனுந் தோற்றுதலின்றி (முற்றுமின்றி)ச் சிவசொரூபமாகவே நிலைத் தல் விதேகமுத்தியாம். வேதாந்த சூடாமணி "பரமமா ஞானந் தோன் றுதலுமே கதிர்முன் பாயிருள்போ லஞ்ஞானத் தட னதன்கா ரியமாம், புரமுத லாயினவனைத்து மகன்றிடுத

ருனே புகலரிய விதேககை வல்லியமென் றிசைப்பர்" என்று கூறுவது இங்குணர்தற் பாலதாம். விதேகமுத்தியி னியல்பைப் பிரபுலிங்கலீலை

"படியில் வந்த பரம குரவனால்
தடைய றும்படி தன்னை யறிந்தவன்
உடல்வி டும்பொழு தொன்றொரு மண்மயக்
கடமு டைந்தவா காய நிகர்ப்பனால்"

என்று கூறுவது மிங்குணர்தற் பாலதாம்.

"தேகமுத லபிமான மணுவு மின்றித் திடமாகப் பரப்பிரம னானே யென்னும், ஏகமதாந் துணிவுற்றுப் பரமானந்த மெப்போது மிசைந்திடுவோன் சீவன்முத்தன்" என்றும்,

"பிரமமக மகம்பிரம மென்றிவ் வண்ணம் பெறுகின்ற தியானமுநிச்சயமுமின்றி,நிருமலமாஞ்சின்மாத்ர சொரூபமாக நிற்பவனே நிலைபெற்ற விதேகமுத்தன்" என்றும், ரிபுகீதை கூறுவதால் சீவன்முத்த னியல்பும் விதேகமுத்த னியல்பும் நன்கு விளங்குவனவாம்.

வேதாந்த சாஸ்திராப்பியாசஞ் செய்து, அதன்பொருளை யுள்ளவாறறிந்து, சிவப் பிரஹ்ம ஐக்கிய நிச்சயத்தால் ஆத்ம (சிவ) ஞானியாயிருப்பவராகிய சற்குருவினிடத்து, தன் சித்தத்தின்கண் உள்ள மலம் விட்சேபம் ஆவரணமென்னும் மூன்று தோஷங்களுள், மலத்தை (பாவத்தை) நிஷ்காம கர்மத்

தாலும், விட்சேபத்தை (சித்தத்தின் சஞ்சலத்தன்மையை) ஈசு வரத்தியானத்தாலு மொழித்து, ஆவரணத்தை (ஆத்ம சொரூபத்தை மறைத்துள்ள அஞ்ஞானத்தை) ஒழிக்கும் வகையறியாது, விவேகம் - வைராக்கியம் - சமாதிசட்கசம்பத்தி-முமுட்சுத்துவமென்னும் நான்கு சாதனங்களோ டிருக்கும் அதிகாரி புருஷனே சீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தைப் பெறுதற்குரியவ ஞகின்ருன்; அதனுல், அவன் முறையே சீவன்முத்தியையும் விதேகமுத்தியையும் பெறுதற்குரியவ ஞகின்ரு னென்பது இங்குணர்தற்பாலதாம்.

ரிபுகீதை "சுத்தமதாம் பரப்பிரம நீயேயென்று, செப்பியிடுங் குருபரனே குருவாகின்ருன் செப்பியவா றறிந்தவனே சீடனுனேன்" என்றும், "ஏகபர மறிந்தவனே சீடனுவன்" என்றும் கூறுவது மிங்குணர்தற்பாற்ரும்.

தத்துவஞானத்தால் ஆணவம் மாயை கன்மமென்னும் திரிமலமும் தீரப்பெற்று, சச்சிதாநந்த சங்கரவடிவமாய் விளங்கும் சீவன்முத்தன் அஞ்ஞான காலத்தில் தனக்குத் தோன்ருத் துணையாயிருந்து, தத்துவோபதேசஞ் செய்தற்குரிய பக்குவம் வாய்த்தகாலத்துச் சற்குருமூர்த்தியா யெழுந்தருளி வந்து தத்துவோபதேசஞ் செய்து, தத்துவ ஞானத்தால் மல மாயை கன்மங்களை யொழித்துத் தானகச்செய்த பரமேசுவரனிடத்துச் செய்ந்நன்றி மறத்தலென்னுங் குற்

றம் தன்னிடத்து நிகழாவாறு உழுவலன்பு செய்யாது, சற்குருமூர்த்தியினிடத்துச் செய்ந்நன்றி மறந்தலென்னும் குற்றம் தன்னிடத்து நிகழாவாறு உழுவலன்பு செய்வது எங்ஙனம் பொருந்துமெனின், சற்குருமூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்வது பரமேசுவரனிடத்து உழுவலன்பு செய்வதாயும், பரமேசுவரனிடத்து உழுவலன்பு செய்வது சற்குருமூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்வதன்றாயு மிருத்தலின், ஜீவன்முத்த புருஷன் செய்ந்நன்றி மறத்தலென்னுங் குற்றம் தன்னிடத்து நிகழாவாறு சற்குரு மூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்து வருதற்குரியவனாகின்றானென்பது அதற்கு விடையாமென்க. கணபதியைப் பூசிப்பது பரமசிவனைப் பூசிப்பதாயும், பரமசிவனைப் பூசிப்பது கணபதியைப் பூசிப்பதன்றாயு மிருத்தல்போல, சற்குருமூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்வது பரமேசுவரனிடத்து உழுவலன்பு செய்வதாயும், பரமேசுவரனிடத்து உழுவலன்பு செய்வது சற்குரு மூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்வதன்றாயு மிருக்கின்றதென்பது இங்குணர்தற்பாலதாம்.

பரமேசுவரனே சற்குரு மூர்த்தியாக வெழுந்தருளி வருகின்றான்; சற்குரு மூர்த்திக்குச் செய்யும் பூசை பரமேசுவரனுக்குப் பூசை செய்வதாம்; அவனுக்குத் துரோகஞ் செய்வது பரமேசுவரனுக்குத் துரோகஞ் செய்வதாமென்பது

## திருமந்திரம்.

" குருவே சிவமெனக் கூறின னந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே."

என்று கூறுவதாலும்,

## சூதசங்கிதை.

"அனையகுரு பரனையே தந்தைதா யென்றுள்ளத் தமைக்க வேண்டும், நினைதருமக் குருபூசை யாதிசிவ பூசை யாதி யாய் நிலாவும், புனைதருமக் குருத்துரோகஞ் சிவத்துரோ கம் மென்னப் புகல்வார் நல்லோர், வினையறமெய்ஞ் ஞானகுரு பரனையடை தரின்ஞான மேவ லாமே." என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

சற்குருமூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்வது பரமேசுவரனிடத்துச்செய்யும்உழுவலன்பினுஞ் சிறந்ததாமென்பது விசாரசாகரம் மூன்றாவது தரங்கத்தில்

"எந்தப் பிரஹ்மவித்தின் (பிரஹ்ம ஞானியின்) வாக்கு வேத வசனத்திற்குச் சமானமா யிருக்கின்றதோ அந்தப் பிரஹ்மவித்தாகிய ஆசாரியரைச் சிஞ்ஞாசு (ஆத்மாவை யறிய வேண்டுமென்னும் விருப்பமுள்ள அதிகாரி புருஷன்) சேவித்தல் வேண்டும்; ஏனெனின், சேவையினால் குரு பிர

சன்னராயின், அப்போது சிஞ்ஞாசு தன் சொரூபத்தையறிந்து கொள்ளுகின்முன். இதனுல், இஃதுணர்தற்பாலதாம். குரு சேவை ஈசுவரசேவையினும் அதிகமாம்; ஏனெனின், ஈசுவர சேவை அதிருஷ்ட பலத்திற்கு ஏதுவாம்; குரு சேவையோ அதிருஷ்டம் (அப்பிரத்தியட்சம்) திருஷ்டம் (பிரத்தியட்சம்) என்னும் இரண்டு பலன்களுக்கும் ஏதுவாம். எந்தவஸ்து தர்மாதர்மங்களின் (அறம்பாவங்களின்) உற்பத்தி வாயிலாகப் பலத்திற்கு ஏதுவாயிருக்கின்றதோ அஃது அதிருஷ்ட பலத்திற்கு ஏதுவாம்; எந்த வஸ்து தர்மாதர்மங்களின் உற்பத்தியின்றி நேரே பலத்திற்கு ஏதுவா யிருக்கின்றதோ அது திருஷ்டபலத்திற்கு ஏதுவாம். ஈசுவரசேவை தர்மத்தினுற்பத்தி வாயிலாக அந்தக்கரண(மன)த்தின் சுத்திவடிவ பலத்திற்கு ஏதுவாயிருக்கின்றது; ஆதலால், ஈசுவரசேவை அதிருஷ்டபலத்திற்கு ஏதுவாம்; குருசேவை தர்மாபேட்சையின்றி ஆசாரியரது பிரசன்னத் தன்மையால் உபதேசரூப பலத்திற்கு ஏதுவாயிருத்தலால், திருஷ்டபலத்திற்கு ஏதுவாம்; அன்றியும், குருசேவை தர்மத்தினுற்பத்தி வாயிலாக அந்தக்கரணத்தின் சுத்திவடிவ பலத்திற்கு ஏதுவா யிருத்தலால், அதிருஷ்ட பலத்திற்கும் ஏதுவாம். இவ்வாற்ருல் குருசேவை ஈசுவர சேவையினும் உத்தமமாம். ஆதலால், சிஞ்ஞாசு எல்லா விதங்களாலும் பிரஹ்விதான குருவைச் சேவித்தல் வேண்டும்." என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

சீவன் முத்தன் செய்தற்குரியதும் பெறுதற்குரியது மின்மையின், அவன் சற்குருமூர்த்தியினிடத்து உழுவலன்பு செய்வது எற்றுக்காமெனின்,அவன் சற்குருமூர்த்தியி னிடத்துச் செய்யும் உழுவலன்பு உலகோபகாரமாக விருப்பதாம்; அதனால், அதிகாரி புருஷர் பயன்பெறுதற் குரியராகின்றன ரென்பதே அதற்கு விடையாம். சீவன்முத்தபுருஷன் எப்போதும் ஈசுவரபத்தி, குருபத்தி, வேதாந்தசாஸ்திர விசுவாசம்,*மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை, ஞானரட்சை, தபசு, சர்வசம்வாதம், துக்கக்ஷயம், சுகாவிர்ப்பாவ முடையவனு யிருப்ப னென்ப திங்குணர்தற் பாலதாம்.

---

*** மைத்திரி முதலியன.**

(1) சற்புருஷரோடு நட்புக் கொள்ளுவதே(சற்புருஷ சிநேகமே) மைத்திரியாம்.

(2) துக்கிப் பிராணிகளைக் கண்டவிடத்து, அப்பிராணிகளிடத்து இரக்கங்கொள்ளுவதே கருணையாம்.

(3) புண்ணிய புருஷரைக் கண்டவிடத்து, அப்புருஷரிடத்து விருப்ப முண்டாவதே முதிதையாம்.

(4) தீய காரியங்களைச் செய்யும் பாபிகளை விருப்பு வெறுப்பின்றி விட்டு நீங்குவதே உபேட்சையாம்.

(5) வாசனக்ஷய மனோநாசங்களால் புத்தி நிர்மலமாயிருப்பதே ஞானரட்சையாம்.

பாலபோதம் முதலாவது உபதேசத்தில் "ஞானத்திற்கு முன் செய்யும் ஈசுவர - குரு - வேதாந்த சாஸ்திரங்களின் சேவை ஞானம் சித்திக்கும் பொருட்டாம்; ஞானமுண்டாகிய பின் செய்யும் இம்மூன்றனது சேவை செய்ந்நன்றி மறத்த லென்னுந் தோஷம் நீங்குதற் பொருட்டாம்." என்று கூறு வதால், சீவன்முத்தன் செய்ந்நன்றி மறத்தலின்றி யிருப்ப னென்பது நன்கு விளங்குதலின், செய்ந்நன்றி மறவாதிருப் பவரே ஈசுவரானுக்கிரகம் சற்குருவினுபதேச முதலியவற் றைப் பெறுதற்கதிகாரிகளாவரென்பது செவ்விதாக விளங்கு வதாமென்க.

---

(i) தத்துவ ஞானத்தால் சித்தத்துள்ள இராகத்துவேஷ முதலிய வாசனைகள் கெடுதல் வாசனுக்ஷயமாம்.

(ii) வாசனுக்ஷயத்தால் சித்தம் ஆத்ம சொரூபத்தை நோக்கிநின் றடங்கிக் கிடத்தல் மநோநாசமாம்.

(6) மனமும் இந்திரியங்களும் ஒருமுகப்பட் டிருத் தலே தபசாம்.

(7) பாலர்முதல் பண்டிதரீறுயுள்ள யாவரும் இவர் தத்துவஞானியென் றுணர்ந்து அவர்க்கு ஸ்துதி நமஸ்கார முதலியவற்றைச் செய்வதே சர்வசம்வாதமாம்.

(8) அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினி வேசமென்னும் பஞ்சக்கிலேச மில்லாதிருப்பதே துக்க க்ஷயமாம்.

"நலமுறு மோர்சிவ ஞானி யில்லில்வாழ்
நிலையற மாகினு நீத்து நிற்குமோர்
தலையற மாகினுந் தரித்து ஞாலமேல்
இலைமறை காயென விருக்கு மென்பவே."

"வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையொன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
னல்லனென் றிருப்பினு மிருக்கு ஞானியே."

---

(க) அநாத்மாவாகிய தேக முதலியவற்றில் ஆத்ம புத்தியும், அநித்தியமாகிய ஆகாய முதலியவற்றில் நித்திய புத்தியும், துக்கரூப தனுதிகளில் சுகபுத்தியும், அசுசியான சரீர முதலியவற்றில் சுசிபுத்தியும் இங்கு **அவித்தை**யாம்.

(உ) புத்தி ஆத்மாக்களின் ஒருமையுணர்ச்சி **அஸ்மிதை**யாம்.

(ந) அனுகூல பதார்த்தத்தின் ஞானத்தா லுண்டாகும் புத்திவிருத்தி **இராக**மாம்.

(ச) பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தா லுண்டாகும் புத்திவிருத்தி **துவேஷ**மாம்.

(ரு) மரண பயத்தால் சரீரத்தைக் காத்தலி லுண்டாகும் ஆக்கிரகம் **அபினிவேச**மாம்.

(9) ஞானரட்சை முதலிய சாதனங்களால் பிரதிபந்தமில்லா திருத்தலே **சுகாவிர்ப்பாவ**மாம். சுகாவிர்ப்பாவம் — ஆத்மாநந்தம் வெளிப்படுதல்.

என்று பிரபுலிங்கலீலை கூறுவதால், சீவன்முத்தர் பலவித மாக விருப்பரென்பது மிங்குணர்தற் பாலதாம்.

இனி இச்சூத்திரத்திற்கு மற்றோருரை வருமாறு:—

காணுங் கண்ணுக்கு - (உருவத்தைக்) காணுந் தகுதி யுடைய கண்ணிந்திரியத்திற்கு, [கண்டுகாண - (அவ்வுரு வத்தைக்) கண்டறியும்படி,] காட்டும் - காட்டுகின்ற, உளம் போல் - ஆத்மாப்போல, உள்ளத்தை - முதற்பொருளாகிய ஆத்மாவை, [காணுந்தனக்கு-காணுந் தகுதியுடைய தனக்கு], கண்டுகாண - (தான்) கண்டறியும்படி, காட்டலின் - (பர மேசுவரன் சற்குருமூர்த்தியாக வெழுந்தருளிவந்து) காட்டின மையால், (சீவன்முத்த புருஷன் அப்பரமேசுவரனிடத்துச் செய்ந்நன்றி மறத்தலென்னும் குற்றந் தன்க ணிகழாவாறு), அயராவன்பின் - தளர்தலில்லாத உழுவலன்போடு(இருந்து), அரன்கழல்செலுமே - சிவபதமடைகின்றானென்பதாம்.

சீவன்முத்த புருஷன் பரமேசுவரன் சற்குருவடிவமாக வந்து தனக்குபகாரஞ்செய்தமையை மறவாது, அவரிடத்துப் பரிபூரண பத்தியுடையவனாகவிருந்து, விதேகமுத்தி யடை கின்றானென்பது இவ்வர்த்தத்தின்படி இச்சூத்திரத்தின் திரண்டபொருளாம்.

இச்சூத்திரத்தின் பொருள் கீழ்வரும் பிரமாணங்களா லும் நன்கு விளங்குவதாம். அவை வருமாறு:—

## திருமந்திரம்.

" ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசம்
கழிந்தேன் கடவுளு நானுமொன் றானேன்
அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே"

" மந்திர மாவது மாமருந் தாவதும்
தந்திர மாவதுந் தானங்க ளாவதும்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்ற னிணையடி தானே."

## பிரமகீதை.

" காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக்கண்ணொழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்லவன் குருவா மாரிபோன் மாறுவேண் டாதே, மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும் வித்தகக் குரவனே யெவரும், தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர னென்றிடத் தகுவான்."

" இந்த விடும்பை யுடம்புறு மேது
தந்தை யெனப்புகழ் கின்றிலர் தக்கோர்
அந்தமி லாத வகண்டமு நம்முள்
தந்தவர் தந்தை யெனச்சமை வுற்றார்."

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

" முன்னை ஞான முதற்றனி வித்தினைப்
பின்னை ஞானம் பிறங்குஞ் சடையனை

என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தலையிட்டு வைப்பனே.''

### திருவாசகம்.

"வேண்டும் வேண்டு மெய்யடியா ருள்ளே விரும்பி யெனையருளால், ஆண்டா யடியே னிடர்களைந்த வமுதே யருமா மணிமுத்தே, தூண்டா விளக்கின் சுடரனையாய் தொண்ட னேற்கு முண்டாங்கொல், வேண்டா தொன்றும் வேண்டாது மிக்க வன்பே மேவுதலே."

### ரிபுகீதை.

"நித்தசிவார்ச் சனைமுதலாம் பத்தி செய்து நிகழுமன்று சுத்தியினைப் பெற்ற தீரர், அத்துவிதப் பரசிவமே மறையீ ரூதி யனைத்திற்குந் தாற்பரியப் பொருளா மென்றும், சத்தி யமா மச்சிவமே நாமே யென்றுஞ் சலனமிலா வகண்டசிவ ஞானம் பெற்று, மித்தையதாம் பவபந்த மனைத்து நீக்கி மெய் யுணர்வா நந்தபர சிவமே யாவர்.''

### மூலசித்தி.

"பாதமே புகழ்ந்து நின்று பாடநான் வேண்டும் வேண் டும், ஓதுநின் புகழெப் போது முரைக்கநான் வேண்டும் வேண்டும், நாதநற் சொரூப நின்சீர் நவிலநான் வேண்டும் வேண்டும், ஏதுமற் றுளசொற் கூறு திருக்கநான் வேண்டும் வேண்டும்.''

அவதாரிகை.

* அதிகாரி புருஷன் சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தைப் பெறுதற்குச் சமையலுக்குத் தீப்போல நேர்சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தை யடைதற்குரிய சாதனங்களைத் தொகுத்துக் கூறல்.

12. செம்மலர் நோன்றாள் சேர லோட்டா
அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானு மரனெனத் தொழுமே.

(இ - ள்.) செம்மலர் நோன்றாள் - (அதிகாரி புருஷன்) செந்தாமரை மலர்போல (விரிந்து விளங்கியுள்ள அரனது) பெரிய திருவடிகளை, சேரலொட்டா - அணையவொட்டாது (துன்பங்களைச் செய்வனவாய்) உள்ள, அம்மலங் கழீஇ - (மேற் கூறப்பட்ட மல மாயை தன்னொடு வல்வினையென்னும்) அம்மலங்களாகிய சேற்றினை (தத்துவஞானமாகிய நீரி

* "சாதன நான்கினையு, முடையவனே யதிகாரி" என்பது வேதாந்த சூடாமணி. சாதன நான்காவன:—விவேகம், வைராக்கியம், சமை - தமை - திதிட்சை - உபரதி - சிரத்தை - சமாதானமென்னும் சமாதி சட்கசம்பத்தி, முமுட்சுத்துவம் (முத்திவிருப்பு) என்பனவாம்.

ஞல்) கழுவுதற்பொருட்டு, அன்பரொடு மரீஇ - சிவஞானிக ளோடு (அன்பு பொருந்தக்) கூடி, மாலற - (தம்மைத் தரிசித் தவாது) பாவமொழியுமாறு (தரித்துள்ள), நேய மலிந்தவர் - கருணைமிக்குடைய அவர்களது, வேடமும் (விபூதி உருத்தி ராக்க முதலிய) திருவேடத்தையும், ஆலயந்தானும் - சிவா லயத்தையும், அரனெனவே - சிவமெனவே (கண்டு), தொழும் - தொழுது வருவானுக, (எ - று).

அங்ஙனந் தொழுது வருவானுயின், தத்துவஞானத் தைத் தவருது பெற்று, அதனுல், மல மாயை கன்மங்களை யொழித்து, சீவன்முத்தனுக விளங்குவதற் குரியவனுவ னென்பது குறிப்பாக வுணருமா றெஞ்சிநின்றது. இங்ஙன மெஞ்சி நிற்பது குறிப்பெச்ச மெனப்படும்.

அதிகாரி புருஷன் மோட்சமடைவதற்குத் தடையா யுள்ள அஞ்ஞானத்தைத் தத்துவஞானத்தாற் கெடுத்தற் பொருட்டு, சிவஞானிகளோடு அன்பு பொருந்தக்கூடி அவர் களது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவமாகவே கண்டு தொழுது வருவானுக; அங்ஙனம் தொழுது வருவா னுயின், தத்துவ ஞானத்தைத் தவருதுபெற்று, அதனுல், அஞ்ஞானத்தை யொழித்துச் சீவன்முத்தனுதற் குரியவ னுவா னென்பது இச்சூத்திரத்தின் திரண்ட பொருளாம்.

நோன்றாள் - (நோன்மை+தாள்) பண்புத் தொகை; நோன்மை - பெருமை; தாள் - பதங்கள். தாள் (பதங்கள்) என்பது இங்குச் சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தைக் குறிப்பித்து நின்றது; அதனினும் (அம் மோட்சத்தினும்) பெரியதொன்று யாண்டு மின்மையின், வாளா தாள் எனக் கூறாது, அது 'நோன்றாள்' என விசேடித்துக் கூறப்பட்டது. சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்சம் அபவர்க்கமென்றும் சிறப்பென்றும் கூறப் படும். கழுவ என்பது கழீஇ எனத் திரிந்து நின்றது. 'மாலற நேயமலிந்தவர்' என்பது இங்குச் சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது, 'கழீஇ' என்றமையால் அம்மலம் என்பதற்கு அம் மலங்களாகிய சேற்றினை என்று பொருளுரைக்கப்பட்டது. இதனால், மலம் சேறாகவும் தத்துவஞானம் நீராகவும் குறிப் பாக உருவகஞ் செய்யுமாறு நின்றமை காண்க. தான் - அசைநிலை. ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. தொழும் என் பது உம்மீற்று வியங்கோள் வினைமுற்று. மால் - பாவம்; நேயம் - கருணை; ஆலயம் - (இறைவன் சீவர்களுய்யுமாறு) தங்குமிடம்; அஃதாவது கோயில். சிவஞானிகளின் முக்கிய குணங்கள் மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சையாமாக லின், அதுபற்றி நேயம் என்பதற்கு அன்பு எனப் பொருள் கூறாது, கருணை எனப் பொருள் கூறப்பட்டது. கருணை (அருள்) நேயத்தின் (அன்பின்) காரியமா யிருத்தலின்.

கருணையுடையாரிடத்து அன்பு இயல்பாகவே யிருக்கு மென்பது சொல்லாமலே விளங்குவதாம். இதனை "அரு ளென்னு மன்பீன் குழவி (அன்பினாலீனப்பட்ட அருளென் னும் குழவி)" என்று திருக்குறள் கூறுவதனாலு முணர்க. நேயம் கருணை யாமெனக் கூறப்பட்டதாயினும், இனம்பற்றி மைத்திரி, முதிதை, உபேட்சை யென்பனவற்றையுங் கொள்க. இதனால், சிவஞானிகள் மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை யென்பனவற்றை யியல்பாகவுடைய வரா யிருப்பரென்பது பெறப்படுவதாம். அன்பென்பது சிவத்தின் பரியாயப் பெயர்களுள் ஒன்றாயிருத்தல் பற்றி † அன்பரென்பதற்குச் சிவஞானிகள் என்று பொருள் கூறப் பட்டது; இதனை "அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார், அன்பே சிவமாவ தாரு மறிகிலார், அன்பே சிவமாவ தாரு மறிந்தபின், அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே" என்று திரு மந்திரம் கூறுவதாலறிக.

"யாவ னொருவ னஞ்ஞானச் சேற்றை ஞான விரும் புனலால், ஓவக் கழுவு வானவனே யொளிர்சே ரமல சதா சுத்தன்" என்று பதிபசுபாச விளக்கம் கூறுவதும், "உள்

---

† அன்பரது இலக்கணமித்தன்மையதென்பதை "தமர் பிற ரற்றார் சமயமு மற்றார் சகவியல் பற்றார் தமைமொழி பற்றார், அமர்விட மற்றா ரறமற மற்றார் அறிவயர் வற்றா ரவரடி யாரே" என்ற அஞ்ஞவதைப்பரணி கூறுவதா லறிக.

ளத்தி னுள்ளே யுணர்வெனுந் தீர்த்தநீர், மெள்ளக் குடைந்து நின் ருடார் வினைகெடப், பள்ளமு மேடும் பரந்து திரிவரிக், கள்ள மனமுடைக் கசினி யோரே." என்று திருமந்திரம் கூறுவதும்,"பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறி னனே" என்று கைவல்லிய நவநீதம் கூறுவதும், 'செம்மலர் நோன் ருள் சேர லொட்டா, அம்மலங் கழீஇ' என்பதன் பொருளை நன்கு விளக்குவனவாம்.

சிரத்தையோடும் பக்தியோடும் கங்கை முதலிய புண் ணிய தீர்த்தங்களில் முழுகும் பாக்கியம் பெற்று, அதனல், மானததீர்த்தத்தில் முழுகும் பாக்கியம்பெற்றவர்க்கே ஞான தீர்த்தத்தில் முழுகும் பாக்கியம் சித்தியாமென்பது இங்குணர் தற்பாலதாம். மானததீர்த்தத்தில் முழுகுதலாவது மெய்யுரை கூறல், தானஞ் செய்தல் முதலியனவாம். தானஞ்செய்த லாவது அறநெறியால் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகை யோடுங் கொடுத்தலாம். "சத்தியந் தானஞ் சம்மத மின் சொல் சாற்றுத லொருவழிப் படுதல், புத்தியே முதல கரண மோர் நான்கு மடக்குதல் புலன்கள்போம் வழியில், உய்த் திடா தமைத்தல் பொறைதிட ஞான முயிர்க்கெலாந் தண் ணளி புரிதல், இத்திற மனைத்து மானத தீர்த்த மெனவெடுத் தியம்பினர் மேலோர்" என்று காசிகாண்டங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

மல மாயை கன்மங்களாகிய சேற்றினை தத்துவ ஞானமாகிய நீரினால் கழுவுதலாவது அதிகாரி புருஷன் சற்குருவி னுபதேசத்தால் தன்னைச் சிவமாகவறிந்து, தனக் கன்னியமாக உண்மையில்ஒன்றுமில்லையென்ப துணர்ந்து,உணர்ந்தவாறே யிருத்தலாம். நம்மனோர்க்குக் கானனீர் கானலைக் கண்டவிடத்து மித்தையாகத் தோன்றுதல்போல, அதிகாரி புருஷனுக்கு மல மாயை கன்மங்கள் தன்னை (ஆன்ம வடிவ சிவத்தை)க் கண்டவிடத்து மித்தையாகத் தோன்றுவனவாமென்பதிங் குணர்தற்பாற்றும். கானலில் நீர் கற்பிதமாகத் தோன்றுதல் போல,என்னிடத்துமாயாப்பிரபஞ்சம்கற்பிதமாகத்தோன்றுகின்றது;கானலைத்தவிர நீரில்லாமைபோல,என்னைத் தவிர மாயாப்பிரபஞ்சமில்லை; கானனீரால் கானல் நனையாமை போல, மாயாப் பிரபஞ்சத்தால் நான் வேறுபாடடைவ தில்லையென்னும் திடநிச்சய முள்ளவனே ஞான நீரில் முழுகினவனாவ னென்க.

சிவஞானிகள் * துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியத்துவம், பிராப்தப் பிராப்பியத்துவ மென்னும் ஞானபல

---

ஞானபல சதுஷ்டயம்.

* "துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியத்துவம், பிராப்தப் பிராப்பியத்துவம் என ஞானபல சதுஷ்டயமுண்டு. அவற்றுள்,

1. துக்காபாவம் இகபரலோக பேதத்தால் இரண்டு விதமாம்; அவற்றுள்,

நான்கு முடையவரா யிருத்தலின், அவர்க்கு விபூதி உருத்தி ராக்க முதலிய திருவேடத்தால் ஆவதொன்று மில்லையாம்; ஆயினும், அவர்கள் அத்திருவேடத்தை உலகோபகாரமாகத் தரித்திருக்கின்றனர்; தரியாவிடின், ஞானசாதன மின்ன தென்பதை உலகமறியாது கலக்கமுறு மென்க. இதனைப் பகவத்கீதை "பெரியவர் பயின்ற படியலாற் பயிலார் பின்புளோ ரென்பதன் றூகில்,உரியவிவ் வுலக மூன்றினு மெனக்குச் செய்யவேண் டுவதுமொன் றுண்டோ, அரியவை யென்று லுறுதவு முறுதற் பாலவு மியாவையிங் கையா, பரி

---

(1) தூலசரீரத்தில் வியாதி திர்க்கந்தத்துவ குரூபத்துவாதிகளும், சூக்ஷ்மதனுவில் காமக்குரோதாதிகளும், காரண தேகத்தில் ஆதிவியாதிகளுக்கு வித்தாகிய சம்ஸ்காரங்களுமாகிய மூவகைத் தாபமும் இகலோக துக்கமாம்;

மித்தியா சொரூபமாகிய மாயா காரியமான தூலசரீராதிகளின் வேறுபட்ட அத்துவிதீயப் பிரத்தியகாத்ம ஞானத்தின்பின் பரமார்த்தமான போக்கிய போக்திருக்க ளில்லாமையால், அந்தத் துக்கத்திரய சம்பந்தமில்லா திருப்பதே இகலோக துக்காபாவமாம்.

(2) புண்ணிய மெப்போது வருமோ பாவமெப்போது போமோ வென்னு மிச்சிந்தனையே பரலோக துக்கமாம்;

ஆத்மஞானத்திற்குப் பின் தாமரையிலையிற் றண்ணீர் பற்றாமைபோல அவ்விரு கர்மங்களும் பற்றா. அஃதெங்ஙனமெனின்,காஷ்டத்தில்நெருப்பிருக்கும்;அந்நெருப்பில்காஷ்ட

யவிவ் வுலக மகிழ்வுடன் வினைதான் பண்ணுதற் கென்னை யும் பாராய்" என்று கூறுவதாலும், கைவல்லிய நவநீதம் "நல்லவனேகே ளுலகுப காரம் ஞானிகள் விவகாரம், அல் லது வேறொரு பெறுபே றும்மில்லை யதனாற் பிணியு மில்லை" என்று கூறுவதாலு மறிக. சிலர் சிவஞானிகள் (சீவன் முத் தர்கள்) முத்தி பெறுதற்பொருட்டு விபூதி உருத்திராக்க முதலிய திருவேடத்தைத் தரிக்கின்றனரென்று கூறுகின்ற னர்; அவர் கூறுவது நோய்முற்றுந் தீரப்பெற்றவன் முறை யாகப் பத்தியந் தவறாது மருந்துண்டு வரல் வேண்டுமென்று கூறுவது போல்வதா மென்க.

---

மிராது; அதுபோலக் கர்மத்துவய வியவகாரத்தில் விவேகி யிருப்பன்; அவனிடத்து அக்கர்மத்துவய வியவகார மிராது. அதனால், காட்டுத்தீப்பற்றியுள்ள ஒரு பர்வதத்தைப் பட்சிமிரு கங்களுள் ஒன்றும் பொருந்தாமைபோல, ஞானக்கினி சொரூ பனை அப்புண்ணிய பாவங்கள் பொருந்தா. இவ்வாற்றால் அச் சிந்தனை தோன்றாதிருப்பதே **பரலோக துக்காபாவமாம்.**

2. சர்வைசுவரிய சம்பன்னனை சார்வபௌமன் முதல் இரணியகற்பனீறாக முறையே ஒன்றினொன்று நூறுமடங் கதிகமாயுள்ள ஆநந்தங்கள் யாவும் நிவர்த்தனான விவேகிக் குண்டாயினும், அவ்வாநந்தங்க ளெல்லாம் பிரஹ்மாம்சங் களாய் அகண்டாநந்தம் சித்தித்தலால், அதுவே **சர்வ காமாப்தியாம்.**

3. அவ் விவேகிக்குத் தத்துவஞான முண்டாவதற்கு முன் இகலோக சம்பந்தமான இஷ்டப்பிராப்தி அநிஷ்ட நிவிர்த்தி

† அவ்வேடம் அவர் முத்தி பெறுதற்குச் சாதனமாயிருக்கின்றதெனின், அவர் சிவஞானியாலராவர்; சிவஞானி

---

யின் பொருட்டுக் கிருஷி வாணிச்சியாதிகளும், சுவர்க்காதி சித்தியின் பொருட்டு யாகோபாசனாதிகளும், மோட்ச சாதன ஞானசித்தியின் பொருட்டுச் சிரவணாதிகளுமாகிய மூவகைக் கர்த்தவ்ய மிருந்தது. தத்துவஞான முண்டானபின் சம்சார புத்தியோடு இகபோக இச்சை யில்லாமையால் கிருஷி முதலான வியாபாரமு மில்லை. சாளரத்தின்வழியுட் புகுந்த சூரியகிரணத்தில் காணப்படும் பரமாணுக்கள், வெளியிலுள்ள பிரகாசத்திற்காணப்படாமைபோல,அஞ்ஞானிக்குவிஷயமாம் கர்மமெல்லாம்ஞானியினிடத்துத்தோன்றாமையால்,அவனுக்கு யாகோபாசனாதிகளும் அநுஷ்டிக்கத் தக்கனவாத வில்லை; பிரஹ்மாநந்த சாட்சாத்கார மிருத்தலால், சிரவணாதிகள் செய்யப்பட்டனவேயாம். இதுவே கிருதகிருத்தியத்துவமாம்.

4. தனக்கு விசிஷ்ட புண்ணிய பரிபாகம், முமுக்ஷுத்துவம், குருபாதசேவை, சாஸ்திர சிரவணம், ஆத்மாநாத்ம விவேகம், அஞ்ஞான நிவிருத்தி, ஆத்ம சாட்சாத்காரம், சம்சாரதுக்க நிவிர்த்தி, நிசாநந்தப் பிராப்தி முதலிய சித்திகளே பிராப்தப் பிராப்பியத்துவமாம்.'' என்பது வேதாந்த பரிச்சேதம்.

† ''தீர்த்தம்ப்ர சாதந் திருநீறஞ் சக்கரமும், சாற்றுமிறை கட்பிறந்த தாழ்வடமும்—போற்றும், குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாம், கருவகலக் கட்டுரைத்தேங் காண்'' என்று சிவஞானப் பிரகாச வெண்பா கூறுவதிங் குணர்தற் பாற்றும்.

கள் பெறுவதொன் றின்றாகலின், அவர்க்கொரு சாதனமு மின்று மென்பது முடிவாக விக்குணர்தற்பாற்றும். இது கைவல்லிய நவநீதம் "ஆடவர் செய்தொழில் மூவகை யாகு மவித்தை வசத்துறுநாள், ஏடணை மமதை யகந்தை யுளார்க்கே யிகபர விவகாரம், வீடணு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்பதெலாம், பாடன் மிகுந்தொழி லாற்பல னுண்டோ பரிபூ ரணமானல்" என்று கூறுவதாலும், விசாரசாகரம் - ஆறுவதுதரங்கத்தில்"வித்துவானுக்கு(ஞானிக்கு)மனன நிதித்தியாசனங்களும் செய்யவேண்டுவதில்லையாம்.ஜீவன்முத்தியின் ஆநந்தத்தின் பொருட்டு மனன நிதித்தியாசனங்களில் வித்துவான் பிரவிர்த்திக்கின்றான்; அவனும் தன்னிச்சையாற் பிரவிர்த்திக்கின்றான். 'நான் வேதத்தின் ஆஞ்ஞைப்படி நடக்காதபட்சத்தில் எனக்கு ஜனனமரணாதி சம்சார முண்டாகும்' என்னும் புத்தியால் செய்யப்படுங் கர்மம் கர்த்தவ்ய மெனப்படும். ஜன்மாதிகளி னுணர்ச்சி வித்துவான்களுக் குண்டாவதில்லையாம் ; ஆதலால், வித்துவான் தன்னிச்சையால் மனன நிதித்தியாசனங்களைச் செய்கின்றான் ; அது கர்த்தவ்ய மன்று" என்று கூறுவதாலும், சிவஞானசித்தியார் "ஞாலமதின் ஞான நிட்டை யுடையோருக்கு நன்மையொடு தீமையில்லை நாடுவதொன் றில்லை, சீலமில்லை தவமில்லை விரதமொடாச் சிரமச் செயலில்லை தியான மில்லை சித்தமலமில்லை, கோல மில்லை புலனில்லை கரணமில்லை குணமில்லை

குறியில்லை குலமு மில்லை,பாலருட னுன்மத்தர் பசாசர்குண மருவிப் பாடலினே டாடலிவை பயின்றிடினும் பயில்வர்" என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

'செம்மலர் நோன்றாள் சேர லொட்டா,அம்மலங்கழூ'வுதற் குரிய சாதனம் அந்தரங்கம் பகிரங்கமென விரண்டாம்; அவற் றுள், 'அன்பரொடு மரு'வுதல் அந்தரங்க சாதனமாம்; 'மாலற நேய மலிந்தவர் வேடமும் ஆலயந் தானு மரனெனத் தொழூ' தல் பகிரங்க சாதனமாம்.

தத்துவ ஞானத்தைப் பெறுதற்கு அன்பரொடு மருவு தல் நேர்சாதனமாம்; மற்றவை பரம்பரா சாதனமாமென்ப துணர்த்துதற் பொருட்டு 'அன்பரொடு மரீஇ' என்பது முன் னர்க் கூறப்பட்டது. அன்பரொடு மருவுதல் சாதுசங்கமாம். இது சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியம் என்னும் ஞானபூமி எழனுள் முதற் பூமியாம். கைவல்லிய நவநீதம் - "முதற்பூமி கிடைப்பதுவே வருத்த மைந்தா, காலான முதற்பூமி கைவந் தால் முத்தியுங்கை வந்த தாமே" என்று கூறுவதால், முதற் பூமி அதிகாரி புருஷனுக்கன்றி ஏனையோர்க்குக் கிடைப்ப தில்லையா மென்பது நன்கு விளங்குவதாம். இம்முதற் பூமியைப் பெற்றவர் தவறாது சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந் தப் பிராப்திவடிவ மோட்சத்தைப் பெறுதற்குரியவராவரென் பது தோன்ற 'அன்பரொடு மரீஇ' என்று கூறப்பட்டது.

(1) ஒருவன் யான் இதுகாறும் ஆத்மாநாத்ம விவேகமில்லாத மூடனாயிருந்தமைக்குக் காரணம் யாது ? இனி அதனைச் சுருதிவாக்கியத்தாலும் ஆசாரிய ருபதேசத்தாலும் அறிவேனென்று கருதுவதே சுபேச்சையாம்; (2) அதன்பின் அவனுக்குச் சுருதிவாக்கியத்தாலும் ஆசாரிய ருபதேசத்தாலும் சிறிது தோன்றும் (ஞான) வைராக்கிய பலத்தாலுண்டாகும் சதாசாரப் பிரவிர்த்தியே விசாரணையாம்; (3) அப்பா லவனுக்குச் சுபேச்சை - விசாரணைகளின் அப்பியாச பலத்தால் விஷயப் பற்று நீங்குவதே தனுமானசியாம்; (4) அப்பால் அவன் மனம் சுபேச்சை - விசாரணை - தனுமானசி யென்னும் அம்மூன்றனது அப்பியாச பலத்தால் ஜாக்கிரப் பிரபஞ்சத்தைச் சொப்பனப் பிரபஞ்சம் போல்வதாமென் றுள்ளவா றுணர்ந்து, ஆத்மாவின் சன்மாத்திரானுசந்தானம் செய்வதே சத்துவாபத்தியாம்; (5) அப்பால் அவன் பிரபஞ்சத் தோற்றமின்றிச் சுழுத்தி யடைந்தவனைப் போலச் சின்மாத்திரசிவசொரூபமாக நிலைபெற் றிருத்தலே அசம்சத்தியாம்; (6) அப்பால் அவன் வாசனையனைத்தும் நீங்கக் காடசுழுத்தி யடைந்தவனைப் போல ஆத்மாநந்தத்தின்கண் அடங்கி யிருப்பதே பதார்த்தாபாவனையாம்; (7) அப்பால் அவன் ஒன்றுண்டென்றும் பிறிதொன் றின்றென்றும் வியவகாரஞ் செய்யாதும், அகங்கிருதியும் (தேகமே யானென்னும் வியவகாரமும்) நிரகங்கிருதியும் (தேகம் யானன்றென்னும் வியவகாரமும்) தோன்றாதும்,

சின்மாத்திரமாயுள்ள அத்துவித நிலையில் வெறுங் கடம்போல அகத்தும் புறத்தும் சூனியமா யிருப்பதே துரியமாம். இவற்றின் விரிவை வேதாந்த சூடாமணி வசன விஞவிடை 178-182 பங்கங்களிற் காண்க.

சாதுசங்க முடையார் விசாரம் (ஆத்மாநாத்ம விவேகம்), சாந்தி (மனவடக்கம்), சந்தோஷமென்னு மூன்றையும் பெறு திருப்ப தில்லையாம். சாதுசங்கம், விசாரம், சாந்தி, சந்தோஷ மென்னும் நான்கும் மோட்சத் துவாரங்களென்று கூறப் படுகின்றன. இதனை "ஓதுகின்ற பொருள்முழுது முன்பின் கூட்டி யுணர்பவர்க்கல் லதுபசுவை யொப்போர்க் கெல்லாந், தீதகன்ற குருவுண்மை செப்பா ரன்றே திகழ்சாந்தி விசார மொடு செறிசந் தோடஞ், சாது சங்க மெனவீட்டின் வாயில் காக்குஞ் சதுட்டயரு முறவாகிற் றடைவே றுண்டோ, மேதினிகா வலர்மனையிற் கடைகாப்பாளர் விடுவதுபோல் வீட்டிலவர் விடுவ ரன்றே" என்று ஞானவாசிட்டம் கூறுவ தாலு மறிக.

தத்துவ ஞானத்தின் அந்தரங்க சாதனம் * விவேகம், வைராக்கியம், சமாதிசட்க சம்பத்தி, முமுட்சுத்துவம், சிர

---

*** விவேக முதலியன.**

(1) சிவவடிவ ஆன்மா அல்லது ஆன்மவடிவ சிவம் நாச மின்றியதும் கிரியையின்றியதுமாம்; மாயாப் பிரபஞ்சம்

வணம், மனனம், நிதித்தியாசனம், (தத்துவமசி மகாவாக்கியத்தின்) தத் துவம் பதார்த்தங்களின் சோதனம் (ஆராய்ச்சி) என்னும் எட்டுமாம்; பகிரங்க சாதனம் சிவஞானிகள் விபூதி உருத்திராக்க முதலிய திருவேடமுடையவரா யிருப்பரென் பதுணர்ந்து, அவரையும், சிவாலயத்தையும், சிவமெனக் கண்டு தொழுதலாம். இதனால், சரியை கிரியை யோகமென் பன பகிரங்க சாதனத்தி லந்தர்க்கதமாமென்பது செவ்வை யாக விளங்குவதாம். அந்தர்க்கதம் - அடக்கம்.

---

நாசமுடையதும் கிரியை யுடையதுமாமெனை அவ்விரண்டை யும் பகுத்துணர்தல் விவேகமாம்.

(2) காணப்படும்இவ்வுலகத்திலும் கேட்கப்படும் அவ்வுல கத்திலுமுள்ள போகங்களிலுள்ள இச்சையை விடுதல் அல் லது அவற்றின்கண் இச்சையில்லாமை வைராக்கியமாம். அவ்வுலகமென்றது இந்திரன் முதலிய இறையவர் பதங்களை.

(3) சமாதிசட்க சம்பத்தி: சமை, தமை, திதிட்சை, உபாதி, சிரத்தை, சமாதான மென்பனவாம்.

(I) சித்தத்தை விஷயங்களிற் செல்லாவா றடக்குதல் சமையாம்;

(II) இந்திரியங்களை விஷயங்களிற் செல்லாவா றடக்கு தல் தமையாம் ;

(III) சீதோஷ்ணம், பசிதாக முதலிய துவந்துவங் களைச் சகித்துக்கொண் டிருத்தல் திதிட்சையாம்; துவந் துவம் - இருமை.

காமக்கிழத்திய ரணிந்துள்ள ஆடையாபரண முதலியன காமுகரை வசீகரித்து அவர்க் கின்பஞ் செய்யுமாறுபோல, சிவஞானிக ளணிந்துள்ள விபூதி உருத்திராக்க முதலியன அதிகாரி புருஷர்களை வசீகரித்து அவர்க் கின்பஞ் செய்த லின், அவரது வேடமும் தொழுதற்குரியதாயிற் றெனக. 'மாலற நேய மலிந்தவர் வேடம்' தொழுதற்குரியதாம் என் பதனுல், அவரைத் தொழுதல் வேண்டும் என்பது சொல்லா மலே பெறப்படுவதாம்.

---

(IV) ஆத்மாநாத்ம விசாரத்தா லுண்டான வைராக்கியத் தால் புத்திபூர்வகமாக விட்ட விஷயங்கள் தன்னைவந் தடுத்த போது அவற்றின்கண் இச்சை செல்லாதிருத்தல் உபரதி யாம்; சற்குரு சேவைக்கு விரோதமாயுள்ள கர்மமனைத்தை யும் விடுதலும் உபரதியாம் ;

(V) வேதாந்த சாஸ்திர வாக்கியத்திலும் சற்குரு வாக்கி யத்திலும் விசுவாசம் வைப்பது சிரத்தையாம்; விசுவாசம் — நம்பிக்கை.

(VI) சித்தம் சிதைவின்றி யிருத்தல் சமாதானமாம்.

(4) சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தின்கண் அதிதீவிரமாயுள்ள இச்சை முமுட்சுத் துவமாம்.

(5) சற்குருவினிடத்து யுத்தியினுல் வேதாந்த வாக்கி யத்தின் (மகா வாக்கியத்தின்) தாற்பரியத்தை நிச்சயஞ்செய் வது சிரவணமாம்.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" ஆகிய இறைவன் சிவஞானிக ளிடத்தும் சிவாலயத்திடத்தும் தயிரின்கண் நெய்போல விளங்கியும், ஏனையவிடத்து பாலின்கண் நெய்போல விளங்காது மிருத்தலின், அதிகாரி புருஷன் தான் தத்துவ ஞானியாதற் பொருட்டுச் சிவஞானிகளையும் சிவாலயத்தையும் தொழுதுவருதல்வேண்டுமென்பது அவனுக்குக் கட்டளையாகக் கூறப்பட்ட தென்க. உடம்பு முழுதும் வியாபித்துள்ள சீவன் நனவில் மிக விளங்கியும், கனவில் அதிற்குறைந்து விளங்கியும், உறக்கத்தில் அதிற்

---

(6) சீவப் பிரஹ்மங்களின் அபேதத்திற்குச் சாதகமான யுக்திகளாலும், பேதத்திற்குப் பாதகமான யுக்திகளாலும், அத்விதீயப் பிரஹ்மத்தைச் சிந்தனை செய்தல் **மனனமாம்.**

(7) அநாத்மாகார விர்த்தியின் (உலகவெண்ணத்தின்) மறைப்பின்றிய பிரஹ்மாகார விர்த்தியின் (சிவோகம் பாவனையின்) ஸ்திதி **நிதித்தியாசனமாம்;** அதன் பரிபாக அவஸ்தை (நிலை) **சமாதியாம்.**

(8) தத்துவமசி மகா வாக்கியத்துள்ள தத்பதத்தின் வாச்சியார்த்தத்தையும் இலட்சியார்த்தத்தையும், துவம்பதத்தின் வாச்சியார்த்தத்தையும் இலட்சியார்த்தத்தையும் சோதித்துணர்தல் (ஆராய்ந்தறிதல்) தத்துவம் பதார்த்தங்களின் சோதனமாம். இயற்பெயர்ப் பொருள் வாச்சியார்த்தமாம்; ஆகுபெயர்ப் பொருள் இலட்சியார்த்தமாம்.

குறைந்து விளங்கியு மிருத்தல்போல, உலகமுழுதும் வியாபித் துள்ள இறைவன் சிவஞானிக ளிடத்து மிக விளங்கியும், சிவாலயத்தில் அதிற்குறைந்து விளங்கியும், ஏனையவிடத்தில் அதிற்குறைந்து விளங்கியு மிருக்கின்றா னென்பது இங்குணர் தற்பாலதாம். சிவஞானிகள் "வேத விதியை வெறுத் துரை யார்" ஆதலின், அவர்கள் விபூதி உருத்திராக்க முதலிய திரு வேடத்தை யுடையவரா யிருக்கின்றன ரெனக. இது சொரூபசாரம்

"வேத விதியை வெறுத்துரையா ருள்ளளவும்
ஓத லுருக வொழிந்திரார் - சாதல்
மறவார் கருத்திளகி மண்ணுலகில் வாஞ்சை
பிறவார் பிறவாத பேர்."

என்று கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

அன்பரொடு மருவுகின்றவன் சாதன சதுஷ்டயமுடை யவனா யிருத்தல் வேண்டுமாதலின், சாதன சதுஷ்டயமும், அவன் அவரிடத்துச் சிரவண முதலியவற்றைச் செய்வதன் றிப் பிறிதொன்றைச் செய்வதின்றாகலின், சிரவண முத லிய சாதனங்களும் உடையவனா யிருக்கின்றா னென் பது 'அன்பரொடு மரீஇ' என்பதனால் பெறப்படுமா றறிக. சிவாலயத்தைத் தொழுகின்றவர்க்குச் சிவஞானிகளைத் தொழுதலும், அவர்களோடு அன்பு பொருந்தக் கூடியிருத் தலு முண்டாமென்பது முறையா யிருக்கவும், அம்முறையாற்

கூறாது, அன்பரோடு மருவுதலை முன்னர்க்கூறி, ஏனைய வற்றைப் பின்னர்க் கூறியதற்குக் காரணம், சிவஞானிக ளோடு அன்புபொருந்தக் கூடிச் சிரவண முதலியவற்றைச் செய்துவரும் அதிகாரிபுருஷன் அவற்றைச் செய்வதன்கண் தனக்குச் சோர்வுண்டாயபோது வாளா விராது சிவஞானி களைத் தொழுதலும் சிவாலயத்தைத் தொழுதலு முடைய வனு யிருத்தல்வேண்டும்; பிறிதொன்றைச் செய்தல் கூடா தென்பதை வற்புறுத்தற்பொருட்டா மென்க. விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்தில் "மகாவர்க்கிய விசாரத்தாலும் எவனுக் குப் புத்தியின் மந்தத்தன்மை முதலியவற்றுள் யாதேனும் ஒரு பிரதிபந்தத்தால் (தடையால்) (ஆத்மாவின்) அபரோட்ச (பிரத்தியட்ச) ஞானமுண்டாகின்ற தில்லையோ அவனுக்கு இந்த லயசிந்தனைரூபத் தியானங் கூறப்பட்டது. - - - இந்த நிர்க்குணத் தியானம் செய்வது முடியாதாயின், சகுண ஈசு வரனை மனத்தில் தரித்தல்வேண்டும் ; சகுண உபாசனை செய்வது முடியாதாயின், நிஷ்காம கர்மஞ்செய்து இராமனைப் பஜித்தல் வேண்டும்; நிஷ்காம கர்மஞ்செய்வதும் முடியா தாயின், சகாமமான சுபகர்மஞ் செய்தல் வேண்டும்; அதுவும் முடியாதாயின், அந்தச் சடன் (துஷ்டன்) அடிக்கடி யிறந்து பிறப்பானாக" என்று கூறுவது இங்குணர்தற் பாலதாம்.

அதிகாரி புருஷன் தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுத்தற் பொருட்டு, சிவஞானிகளை யடுத்துச் சிரவண

முதலியவற்றைச் செய்து வருதல்வேண்டும்; அங்ஙனஞ் செய்து வரும்போது தளர்ச்சியுண்டா மாயின், அத்தளர்ச்சி தீரச் சிவஞானிகளையும் சிவாலயத்தையும் தொழுது வருதல் வேண்டும்; அங்ஙனஞ் செய்து வருவானாயின், அத்தளர்ச்சி நீங்கப்பெற்று, சிரவண முதலியவற்றைக் கிரமமாகச் செய்து வருதற்குரியவ னாவன்; அதனால், தன்னைச் சிவமென்றுணருந் தத்துவஞானத்தைப் பெறுதற்குரியவ னாவன்; அதனால், பிறவிக்கு மூலமாகிய அஞ்ஞானத்தைக் கெடுத்துச் சிவஞானியாக விளங்குதற் குரியவனாவ னென்னும் இச்சூத்திரத்தின் தாற்பரியப் பொருள் பசுபதிபாச விளக்கம்

"மித்தையா முடல மென்ன விவேகமே விடுத லாலே
சித்தனா னெனும்வி வேக நேரிடும் நேர்ந்த காலை
முத்தர்பே ரவைகிடைக்குங் கிடைத்தலால் முதிர்ந்த ஞானஞ்
சித்தியா மன்றே சீவன் முத்தனாய்ச் சிவனு மாவன்."

என்று கூறுவதாலும் செவ்விதாக விளங்குவதாம்.

இனி இச்சூத்திரத்திற்கு மற்றோருரை வருமாறு:—

மாலற நேய மலிந்தவர் - (தமது) மயக்க மொழியுமாறு (சிவபெருமானிடத்து) அன்பு மிக்குள்ள அதிகாரி புருஷர், செம்மலர் நோன்றாள் சேர லொட்டா அம்மலம் -, கழீஇ - கழுவுதற்பொருட்டு, அன்பரொடு மரீஇ - சிவஞானிகளோடு (அன்புபொருந்தக்) கூடி, வேடமும் - (சிவனடியாரையே

யன்றி அவாது) விபூதி உருத்திராக்க முதலிய திருவேடத்தையும், ஆலயந்தானும் - சிவாலயத்தையும், அரனேயெனத் தொழும் - சிவமே யெனக்(கண்டு) தொழுது வருவாராக; (அங்ஙனந் தொழுது வருவாராயின், தத்துவ ஞானத்தைத் தவறாது பெற்று, அதனால், மல மாயை கன்மங்களை யொழித்துச் சீவன்முத்தராக விளங்குதற்கு குரியவராவர்) என்பதாம்.

'அன்பரொடு மரீஇ, மாலற நேய மலிந்தவர் வேடமும், ஆலயந் தானு மரனெனத் தொழு'வார்க்கு வரும் பயன் பின் வரும் பிரமாணங்களாலும் நன்கு விளங்குவதாம். அவை வருமாறு:—

## போதாமிர்தம்.

"ஞானவா னந்த மான நாதன்வந் துட்பு குந்து [தான்
தேனுமின் னமுது மாயென் சிந்தையுட் டிகழ்ந்தி ருந்
போனது பிறவி யெல்லாம் புலையனேன் குலங்கள் கோடி
ஈனமின் முத்தி யுற்றா ரிறைவலி யிருந்த வாறே."

## தத்துவமாலை.

"இனியோர் குறையுமிலோ மெல்லாநாம் பெற்றோம்
துனியார் பவமுந் தொலைத்தோம் - நனியாரும்
சித்தர்க்குச் செய்ய சிவப்பிரகா சன்றிருத்தாள்
பத்தர்க்காட் பட்டோம் பணிந்து."

## ரிபுகீதை.

"புத்திரனே பூதியுட னுருத்தி ராக்க பூடணமே பூண்டு சிவ பத்தி கூர்ந்திங், கத்துவித பரமசிவத் தியானந் தன்னை யாதரவா யனவரத மனுட்டிப் போரே, இத்துனிசெய் சம்சார பாசந் தீர்ந்தவ் வேகபர சிவவடிவா யிருப்பர்."

"திடஞானி தரிசனமே தீர்த்த மாடல் திடஞானி தரிசனமே தேவ பூசை, திடஞானி தரிசனமே செபத பங்கள் திடஞானி தரிசனமே செயும றங்கள், திடஞானி தரிசனமே சிவத்தைக் காணல் திடஞானி தரிசனமே சிவத்தின் சேவை, திடஞானி தரிசனமே மேவு தற்குத் திரிவிதமா முலகத்து மரிதாம் யார்க்கும்."

## திருஞான சம்பந்த சுவாமிகள்.

"சித்தந் தெளிவீர்கா ளத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ முத்தி யாகுமே."

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

"பஞ்ச பூத வலையிற் படுவதற்
கஞ்சி நானுமா மாத்தூ ரழகனை
நெஞ்சி னுனினை தேனினை வெய்தலும்
வஞ்ச வாறுகள் வற்றின காண்மினே."

"பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்

பருக லாம்பர மாயதோ ராநந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே.''

### மாணிக்கவாசக சுவாமிகள்.

"உள்ள மலமூன்று மாய வுகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த - வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு.''

### சித்தாந்த தரிசனம்.

"உள்ள மசையா துயர்துருவன் போனிற்கில்
வள்ள லுரு வானாய் மதி''

"சித்திரத்தை யொத்துச் சிவோகமெனச் சிந்தித்தால்
அத்தனுரு நீயாவை யால்.''

"இந்நிலையி னிற்பரிதே யெல்லாஞ் சிவமென்னும்
அந்நிலையி னிற்பா யற''.

"அஃதுமரி தேயாகி லஞ்செழுத்தி னுண்மைப்
பகுதியறிந் துள்ளே படி."

"சொன்ன நிலைக்குட் டுதையா மனமாயின்
முன்னூலை யோத முயல்.''

"சாத்திரத்தை யோதச் சழக்கு மனமானால்
ஊர்த்தகுரு நாதனைநீ யுன்."

"குருவுருவ முன்னக் கோதகன்றிட் டாவி
பரிபூ ரணத்துட் படும்."

## திருமூலர்.

"தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்தி சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே."

---

## மங்கலவரம்.

(பெருந்திரட்டு).

"வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே."

## சிவஞானபோதத் தெளிபொருள் விளக்கவுரை முற்றுப் பெற்றது.

---

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடி வாழ்க.

வடமொழிச் சிவஞான போத மூலமும் *பதவுரையும்,

தென்மொழிச்

# சிவஞான போத மூலத்துடன்.

---

ஸ்ரீவாஹவாஂஸகாதிகா ஜகதஃ காா்யஉஶ -நாக। கஷ்தி கதாாஸஹஂ மெகவத தஷ்ஜதூஷாசு ஷூஹாஹூரஃ। ।க।

1\. அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்த மாதி யென்மனார் புலவர். (பக்க எண்)—1

(இதன்பொருள்.) ஜகதஃ-பிரபஞ்சத்திற்கு, கதாா-கர்த்தா (செய்பவன்), கஷ்தி - உண்டு, ஸ்ரீவாஂநவாஂஸகாதிகாசு - (அது) பெண் ஆண் அலி (அவன் அவள் அது) என்றற் றொடக்கத்ததா யிருத்தலின், காா்யஉஶ-நாசு - காரியமாகக் காணப்படுதலின், (யாது யாது காரியம் அது அது கர்த்தாவினை யுடையதாம்; கடம்போல),

---

*இது பிரஹ்மஸ்ரீ தி. ஈ. ஸ்ரீ. கு. ரகுநாதாசாரிய ரவர்களால் எழுதப்பட்டது.

ஸ: - அக்கர்த்தா, ஏதத் - இந்தப் பிரபஞ்சத்தினை, ஸம்ஹ்ருத்ய - சங்கரித்து, ஸ்ருஜதி - சிருஷ்டிக்கின்றான், அத: - இக்காரணத்தால், ஹர: - (சங்கார கர்த்தா வான) அரன், ப்ரபு: - (பிரபஞ்சத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரணமான) பிரபுவாவன், (என்றவாறு).

அநந்ய: ஸந் வ்யாபித்வாத் அந்ய: கர்த்தா அந்ய: ஸந்ஸாரத: । கரோதி ஸம்ஸ்ருதிம் ஸர்வாம் ஆஜ்ஞயா அவிச்சேதயா ॥ ॥௨॥

2. அவையே தானே யாயிரு வினையின்
போக்கு வரவு புரிய வாணையின்
நீக்க மின்றி நிற்கு மன்றே. 18

(இ - ள்.) வ்யாபித்வாத் - வியாபித்திருத்தலால், அநந்ய: - (பிரபஞ்சத்திற்கு) வேறாகா திருக்கின்ற, கர்த்தா - கர்த்தா (சிவபெருமான்), அந்ய: ஸந் - (கற்பிதமாகப் பிரபஞ்சத்திற்கு) வேறாக விருந்து கொண்டு, அவிச்சேதயா - நீக்கமின்றி யிருக்கின்ற, ஆஜ்ஞயா - (தனது) ஆணையால்

(நியாமக சத்தியால்), ஃவுஂஸாஂ - புருஷர் களுக்கு (சீவர்களுக்கு), கமாநுஸாரத: - (அவர்களது) கர்ம பரிபாகத்தை யனுசரித்து, ஸஂஸ்ருதிஂகரோதி - சம்சாரத்தினைச் செய்கின்றான், (எ - று).

தேஹேதா ஃஹதாஹஂகா ஃகேஷாவரதி வோயத: । ஸாவேதிஹேமாஹதா வோவே வோஃஸூஃலாஃவஸந்ள ॥ ॥௩॥

3\. உளதில தென்றலி னெனதுட லென்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்
உண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா. 41

(இ - ள்.) தேஹ-உடம்பின்கண், நேதித: - (தத்துவக் கூட்டங்களுள் ஒவ்வொன்றையும் இஃது ஆத்மாவன்று, இஃது ஆத்மாவன்றென) நீக்குவதாலும் (ஆத்மா இலது என்பதனாலும்), ஃஹதாஹஂகாஸ - எனதுடலென்றலாலும் (தேகத்தை எனதென்றலாலும்), ஃகேஷாவரதி வோயத:- (சொப்பனத்தில்) இந்திரியங்களி னொடுக்கத்தை

யறித லாலும், 𑌸𑍍𑌵𑌾𑌪𑍇 𑌨𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑌃-சுழுத்தியில் போகம் (உண்டிவினை) இல்லாமையாலும், 𑌬𑍋𑌧𑍇 𑌬𑍋𑌧𑌾𑌤𑍍 - சாக்கிரத்தில் (அறிவிக்க) அறிகின்றமையாலும், 𑌸𑌃 - ஆத்மா, 𑌅𑌸𑍍𑌤𑌿 - உண்டு, (எ - று).

𑌆𑌤𑍍𑌮𑌾𑌽𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌦𑍍𑌭𑌿𑌨𑍍𑌨𑍋𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍 । 𑌸𑌂𑌹𑌿𑌤𑌃 𑌸𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍁 𑌮𑌲𑌾𑌵𑍃𑌤𑌃 𑌸𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌕𑌃 ॥

4. *அந்தக் கரண மவற்றினொன் றன்றவை*
*சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா*
*தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.* 67

(இ - ள்.) 𑌆𑌤𑍍𑌮𑌾 - ஆத்மா, 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 - அந்தக் கரணத்திலும், 𑌭𑌿𑌨𑍍𑌨𑍋𑌽𑌪𑌿 - வேறாயினவனாயினும், 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍 - அமைச்சும் அரசும் போல, 𑌸𑌂𑌹𑌿𑌤𑌃 - (அவ் வந்தக்கரணத்தோடு) கூடியவனாயும், 𑌮𑌲𑌾𑌵𑍃𑌤𑌃 - (அவித்தையென்னும் ஆணவ) மலத்தால் மூடப்பட்ட, 𑌸𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌕𑌃 - தனது ஞானவியாபாரத்தையுடையவனாயும், 𑌸𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍁 - (சாக்கிர முதலிய) அவஸ்தை

ஐந்தினும் இருப்பவன், ஸ்ராஜ - ஆகின்றான், (எ - று).

விஜாநந்த்யக்ஷாணி யதா₃த்மநா ந ஸ்வயம் வினா
ஶம்பு₄நா । தஸ்மாச்சி₂வோ விகாரீ ஸ்யாந்ந காந்தாயோவ
த்ததம் நசேத் ॥ ॥ ரு ॥

5. விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
கனந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்விற் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே. 84

(இ - ள்.) அக்ஷாணி - இந்திரியங்கள், அர்தா₂ந் - விஷயங்களை, யதா₃த்மநா - (ஆத்மாவாகிய) புருஷனால், விஜாநந்தி - அறிகின்றன, ஸ: அபி - அவனும் (விஷயங்களை), ஸ்வயம் ந - தானே அறிவதில்லை; ஶம்பு₄நா - சம்புவினால் (அறிகின்றான்), தஸ்மாத் ஶிவ:- (அதனால்) அச்சம்பு (சிவன்), விகாரீ ஸ்யாத்-விகாரியாவனெனின், ந-ஆகான், காந்த: - காந்தக்கல், அயோவத் - இரும்பைச் சேஷ்டிப்பது போல, ஸ: - அந்தச் சம்பு, தட₂-

அந்த ஆத்மாவை, நயேத் - சேஷ்டிப்பிக்கின்றான், (எ - று).

அத்ருஶ்யம் சேதஸத்வாசோ த்ருஶ்யம் சேஜ்ஜகதீஹ சேத் | ஶம்போஸ்தத்வ்யதிரேகேண ஜ்ஞேயம் ரூபம் விதுர்புதா: || || ௫ ||

6. உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே. 97

(இ - ள்.) ஶம்போரூபம் - சம்புவின் (சிவத்தின்) சொரூபம், அத்ருஶ்யம் சேத் - அதிருசியமா மெனின் (காணப்படாததா மெனின்), அஸத்வா: - அசத்தாகிய மாயையாம், த்ருஶ்யம் சேத் - திருசியமா மெனின் (காணப்படுவதா மெனின்), ஜகதீஹ சேத் - சடமாகிய உலகமாம், தத்வ்யதிரேகேண - (அதிருசியம் திருசியம் என்னும்) அவ்விரண்டிற்கும் வேறாக, ஜ்ஞேயம் - அறியத் தக்கதென்று, (ஶம்போ: - சம்புவை,) புதா: அறிஞர், விது: - அறிகின்றனர், (எ - று).

நாவிஷிதஸியளகிஞா நவிதவெஷஉஹெ௰யஃ
ஷுவஞ ஶிவயொவெ௶தாய ஷஞுதாதயொஃ வூ
யகஂ ‖ ‖எ‖

7\. *யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்*
*சத்தே யறியா தசத்தில தறியா*
*திருதிற னறிவுள திரண்டலா வான்மா.* 110

(இ - ள்.) ஊிக - அசித்தாகிய பிரபஞ்சம், ஷிக ஷஸியெள — சித்தாகிய சிவத்தின்முன், ந - விளங்குவ தில்லையாம், கிஞா - எங்ஙன மெனின், தெஉஹெ - அந்த இரண்டும் (பிரபஞ் சம் சிவமென்னும் அவ்விரண்டும்), ௰யஃ - ஒன் றனை யொன்று, நவிதஃ - அறிவ தில்லையாம், ஷுவஞஶிவயொஃ - பிரபஞ்சத்தையும் சிவத் தையும், வெதா - அறிபவன், யஃ - எவனோ, ஸஃ - அவன், தயொஃவூயகஂஞுதா - அவ் விரண்டற்கும் வேறான ஆத்மாவாம், (எ - று).

ஷிஜாஸஹெஷிூயவூாவெயஃஜாஂ ந வெதீதி
வொயிதஃ ‖ ௰ாவெகூதாநு மாராணா நவேூா
யநூஃ ஷூாவெூாதி தஃவுழ ‖ ‖அ‖

8. ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே. 119

(இ - ள்.) 𑌧𑌨𑍍𑌯𑌃 - தன்னியன் (பாக்கியவானை முமுட்சு), 𑌗𑍁𑌰𑍁𑌣𑌾 - குருவினால், 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌧𑍈𑌃- இந்திரியங்களாகிய வேடர்களோடு, 𑌸𑌹𑌵𑌸𑌿𑌤𑍍𑌵𑌾 - கூடியிருந்து (வருதலால்), 𑌸𑍍𑌵𑌂- உனது சொரூபத்தை (நீ), 𑌨𑌵𑍇𑌤𑍍𑌸𑌿 - அறிந்தாயில்லை, 𑌇𑌤𑌿 - என்று, 𑌬𑍋𑌧𑌿𑌤𑌃 - போதிக்கப்பட்டவனாய், 𑌏𑌤𑌾𑌨𑍍 - இவ்விந்திரியங்களாகிய வேடர்களை, 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 - விட்டு (பிரிந்து), 𑌅𑌨𑌨𑍍𑌯𑌸𑌨𑍍 - அந்நிய மில்லாதவனாய், 𑌤𑌤𑍍𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 - தத்பதத்தை (அந்தச் சிவ பதத்தை) யடைகின்றான், (எ — று).

[illegible]
[illegible]
[illegible] ॥ ॥௯॥

9. ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே. 134

(இ - ள்.) ஸுயீ: - விவேகமுடையவன், ஜ்ஞாநத்ருஶா - (சிவ)ஞான திருஷ்டியால், ஸ்வஸ்மிந் - ஆத்மாவாகிய தன்னிடத்து, பரம் ஶிவம் - பரமேசுவரனை, த்ருஷ்ட்வா - (அபேதமாக) அறிந்து, மரீசிகாம்பு வத்ஸாவ்ருதிம் - கானல்நீருக் கொப்பாயுள்ள பிரபஞ்ச வியாபாரத்தை, த்யக்த்வா - விட்டு, ஶிவவதவஸ்தாயாம் ஸ்தித்வா - சிவபதமாகியநிலைப்பெற்று (அக்நிலைதிடமாமாறு), பஞ்சாக்ஷரீம் - பஞ்சாக்கரத்தை, த்யாயேத் - தியானஞ்செய்யக்கடவன், (எ - று).

ஶிவேநைக்யம் கத: ஸித்த: ஸ்வஸ்வதந்த்ர: ஸ்வவ்ருத்திக: ।
ஶிவோ யாத்ர ஸம்ஸ்ருஷ்டேர்வர்த்தி ஸாந்நித்ய ஸம்பாதி ரோது ॥ ॥க0॥

10. அவனே தானே யாகிய வந்நெறி
ஏக ளுகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினை யின்றே. 157

(இ - ள்.) ஸித்த: - (சிவஞானம் பெற்ற) சித்தன், ஶிவேந - சிவத்தோடு, ஐக்யம் - ஐக்கியத்தை (ஒருமையை), கத: - அடைந்தவனாய்,

தத்தீய: ஸ்வவ்ருத்திக: - அச்சிவத்தின் வயமான
தனது விருத்தியை (வியாபாரத்தை) யுடையவ
னாய், மலாத்யை: - மலம் மாயை முதலியவற்றால்,
அஸம்ஸ்ப்ருஷ்ட: - பற்றப் படாதவனாய், ஸ்வாநு
பூதிமாந் - சுவானுபவ முடையவனாக, பவதி -
(விளங்குத லுடையவன்) ஆகின்றான், (எ - று).

த்ருசோர் தர்சயிதேவாத்மா தஸ்ய தர்சயிதா
சிவ:। தஸ்மாத் தஸ்மிந் பராம் பக்திம் குர்யாதாத்மோ
பகாரகே ॥ ।கக।

11. காணுங்கண் ணுக்குக் காட்டு முளம்போல்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரன்கழல் செலுமே. 171

(இ - ள்.) த்ருசோ: - கண்களுக்கு (உருவத்தை),
தர்சயிதா - அறிவிப்பது, ஆத்மா - ஆத்மாவாம்,
தஸ்ய - அந்த ஆத்மாவிற்கு (முதற்பொருளை),
தர்சயிதா - அறிவிப்பது, சிவ: - சிவமாம்,
தஸ்மாத் - ஆதலால், ஆத்மோபகாரகே - ஆத்
மாவிற்கு உபகாரஞ் செய்கின்ற, தஸ்மிந் - அந்
தச் (சற்குருமூர்த்தி வடிவ) சிவத்தி னிடத்து,

வைராக்யம் -மேலான பத்தியை, குர்யாத் (சீவன்முத்தன்) செய்தல் வேண்டும், (எ - று).

மோக்ஷார்த்தீ ப்ராப்ய ஸதஸ்தத்வேஷம் ஸேவேத வே-
ஷம் ஶிவாலயம் । ஏவம்விந்த்யாச்சிவஜ்ஞானபோதே
ஶைவார்த்த நிர்ணயம் ॥ ॥ ௧௨ ॥

12. செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானு மரனெனத் தொழுமே. 189

(இ - ள்.) மோக்ஷார்த்தீ - (அதிகாரி புருஷன்) மோட்சத்தின் பொருட்டு, ஸத꞉ - (சிவஞானிகளான) சத்துக்களை, ப்ராப்ய - அடைந்து, தத்வேஷம் - அவர்களது (விபூதி ருத்திராட்ச முதலிய திரு)வேடத்தையும், ஶிவாலயம்- சிவாலயத்தையும், ஸேவேத-வணங்குவானாக, ஏவம் - இவ்வாறு, ஶிவஜ்ஞானபோதே - சிவஞான போதமென்னும் இந்நூலின்கண், ஶைவார்த்த நிர்ணயம் - சைவார்த்த நிர்ணயத்தை, விந்த்யாத்- (அதிகாரி புருஷன்) அறிக. (எ - று).